# A MANUAL

OF THE

# LAW OF EVIDENCE,

BY

J. R. KINDERSLEY, M. C. S.,

OF LINCOLN'S INN, BARRISTER AT LAW,

TRANSLATED

BY

S. PARTHASARADHY CHETTY,

TRANSLATOR IN THE HIGH COURT.

---

MADRAS:

PRINTED AT THE BRANCH UNITED SCOTTISH PRESS,
BY GRAVES, COOKSON AND CO.

1866.

மதராஸ் சிவில் ஸர்விசில் சேர்ந்தவரும்

பாரிஸ்டருமாயிருக்கிற,

ஜெ - ஆர் - கிண்டர்ஸ்லி அவர்களால்

இங்கிலீஷில இயற்றப்பட்ட

# சாக்ஷிய சாஸ்திர சங்கிரகம்.

இஃது

ஹைகோர்ட்டில் ஒரு திரான்சுலேட்டராயிருக்கும்

சுண்டூர், பார்த்தசாரதி செட்டியாரால்,

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

---

சென்னப்பட்டணம்

கலைச்சாலையில் பிராஞ்சி யூனைடெட் ஸ்காட்டிஷ்பிரெஸ்
என்கிற அச்சுச்சாலையில் பதிப்பிக்கப்பட்டது.

௧௮௬௬ ௵.

# PREFACE.



The main object of the Translator in publishing the Tamil Translation of the Third Edition of Mr. Kindersley's Manual of the Law of Evidence is to supply the want believed to exist among those native practitioners and judicial officers, who are not sufficiently acquainted with the English language in which the original work is written.

The Translator has taken great pains to render this work easily intelligible, and the favorable manner in which his Telugu Translation of the Manual has been received by the Government and the public in general leads him to hope that the book now submitted will meet with an equally favorable reception.

The Translator embraces this opportunity of offering his grateful thanks to J. R. Kindersley, Esquire, M. C. S., for his permission gratuitously to publish the Telugu and Tamil Translations of his work.

In conclusion, the Translator desires to offer his acknowledgements to his friend Kallur Subbarayulu Aiyar, Interpreter to the Senior Magistrate of Police, Royapet Police Court, and a Proficient of the Law Class of the Presidency College, Madras, for the assistance rendered by him in the publication of the work.

MADRAS,
*1st December*, 1866.

# பாயிரம்.

இங்கிலீஷ்பாஷையில் போதுமானவளவில் வித்பத்தியில்லாத இத்தேசஸ்தராகிய வக்கீல் முதலிய விவகார சம்பந்தமான உத்தியோகஸ்தர்களுக்கு அதிக பிரயோசனமுள்ளதா யிருக்குமென்றெண்ணி மெஸ்டர் ஜெ-ஆர்-கிண்டர்ஸ்லி அவர்களுடைய சாக்ஷிய சாஸ்திர சங்கிரகத்தைத் தமிழில் மொழிபெயர்க்கத் துணிந்தேன்.

இந்நூலைத் தமிழ்ப்பாஷையில் கூடியவரையில் வெளிப்படையாய் எல்லோருக்குந் தெரியத்தக்க வாக்கியரூபமாய் பாஷையின்முறை வழுவாமல் மொழிபெயர்த்து நிறைவேற்றப்பட்டது. ஆகையால் என்னுடைய தெலுங்கு மொழிபெயர்ப்பைத் துரைத்தனத்தாரும் உலகத்தாரும் எவ்வித விசுவாசத்தோடு அங்கிகரித்தார்களோ அவ்வித விசுவாசத்தோடு இந்தத் தமிழ் மொழிபெயர்ப்பையும் அங்கீகரிப்பார்களென்று விரும்புகின்றேன்.

யாதொரு பிரதிபலனைப் பெறாமலே இந்நூலைத் தமிழிலும் தெலுங்கிலும் மொழிபெயர்த் தச்சிடும்படி எனக்கு உத்தரவுகொடுத்த ஜெ-ஆர்-கிண்டர்ஸ்லி அவர்களுக்கு என்னுடைய நன்றியுள்ள வந்தனத்தைச் செலுத்தாமலிரேன்.

இப்புத்தகத்தைத் தமிழ்ப்படுத்துவதில் எனக்குச் சகாயஞ்செய்த ராயப்பேட்டை போலீஸ் கோர்ட்டில் வஸீதி யர் மேஜிஸ்திரேட் டவர்களுடைய இண்டர்பிரிடரும் சென்னைபுரி துரைத்தனத்தாருடைய சாஸ்திரக் கல்விச் சாலையில் தருமசாஸ்திரவிஷயத்தில் யோக்கியதா பத்திரிக்கைப் பெற்றவருமாகிய கல்லூர்-சுப்பராயுலு ஐயரவர்களுக்கு நான் வந்தனஞ் செய்கின்றனன்.

சென்னைபுரி<br>
௧௮௬௬ ௵<br>
டிசம்பர்மீ ௧௨.

# சாக்ஷியம்.

சொல்லப்பட்ட யாதொரு சங்கதியின் உண்மையையாகிலும் பொய்மையையாகிலும் எது வெளிவரத் தெரியப்படுத்தத் தக்கதாயிருக்கின்றதோ அது அச்சங்கதியின் சாக்ஷியமென்று சொல்லப்படும்.

௨. அந்தச் சாக்ஷியமானது மனதில் ஓர் தீர்மானத்தையாவது நிச்சயத்தையாவது உண்டாக்கத்தக்க வலிமையுள்ளதாயிருக்குமாயின் அது ருசுவென்றும், குறித்த சங்கதி ருசுசெய்யப்பட்டதென்றுஞ் சொல்லப்படும்.

௩. (ஜூடிஷியல் எவிடென்ஸ்) விவகாரசம்பந்தமான சாக்ஷியமானது, நடந்த சங்கதியைக் குறித்தாகிலும் அன்னிய தேசச் சட்டத்தைக் குறித்தாகிலும் விவாதத்திலிருக்கும் விஷயங்களின் உண்மையை ஸ்தாபிப்பதற்காயினும் பரிசோதிப்பதற்காயினும் நியாயசபையாரால் ஏற்றுக்கொள்ளப்படும் சாக்ஷியமேயாம்.

௪. ஹைகோர்ட்டார்களும் இந்தியாதேசத்து ஜில்லாக்களிலிருக்குங் கோர்ட்டார்களும் இங்கிலீஷ் சாக்ஷிய சாஸ்திரத்தையே கொஞ்சந் திருத்திச் சாதாரணமாய் வழங்கிக்கொள்ளுகிறார்கள். அந்தத் திருத்துப்பாடுகள் தக்க இடங்களில் எடுத்துக்காட்டப்படும். ரா - உ௩ - பி. கஅகஎ ரூ ஏப்பிரல்மீ க௩உ ம - ப - அ - ச - ஆ.

௫. கோர்ட்டார் வெளிப்படையான சில விஷயங்களைச் சாக்ஷியத்தினால் ஸ்தாபிக்கப்படவேண்டுமென்பதில்லாமலே நியாய முறைமையின்படி ஏற்றுக்கொள்வார்கள். எப்படியெனில், இத்தேசத்தின் சட்ட நிர்மாணசபையாரால் ஏற்படுத்தப்படும் எல்லா ஆக்ட்டுகளையும்,

இங்கிலண்ட்தேசத்தின் பார்லிமெண்டாரால் ஏற்படுத்தப்படும் பகிரங்கமான ஆக்ட்டுகளையும், தங்கள் தங்கள் கோர்ட்டு உத்தியோகஸ்தர்களையும், வக்கீல்களையும், கவர்னர் ஜனரல் அவர்களையும், கவர்னர்களையும், இராச்சியத்திலுள்ள மற்ற பெரிய உத்தியோகஸ்தர்களையும், ஹைகோர்ட்டுகளின் ஜட்ஜிகளையும், கோர்ட்டார் நியாய முறைமையின்படித் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும், காலப்பிரிவுகளையும், பூகோள சம்பந்தமான பிரிவுகளையும், பல தேசங்களின் எல்லைகளையும், அவைகளை யாளுகிற அரசர்களுடைய பெயர்களையும், பிருதுகளையும், கொடிகளையும் கோர்ட்டார் ருசுவில்லாமலே தெரிந்துகொள்ளுவார்கள். அதுகளைக்குறித்துச் சமாசாரந் தெரிந்துகொள்ளவேண்டும்போது கோர்ட்டார் தகுந்த புஸ்தகங்களையாவது தஸ்தாவேஜுகளையாவது பார்க்கலாம். (௧அ௭௨ வருஷ ௨-வது ஆக்ட்டு ௨-முதல் ௯-பிரிவுகள்வரை.) இது வுமன்றி மிகவும் பகிரங்கமான சில விஷயங்களுமிருக்கின்றன. அவைகளுக்குக் கோர்ட்டார் ருசுவேண்டுமென்று விரும்பார்கள்.

விவாதத்தின் சாராம்சம் ருசுப்படுத்தப் படவேண்டும்.

௯. விவாத அம்சங்கள் என்றவை, தரும சாஸ்திரத்தை குறித்த அல்லது நடந்த சங்கதிகளைக்குறித்த முக்கியமான கேள்விகளாயிருந்து, ஒரு கக்ஷிக்காரனால் சொல்லப்பட்டு, எதிர்கக்ஷிக்காரனால் மறுக்கப்பட்டு, அவ்விருவர்களுக்குள் விவாதத்திலிருக்கும் விஷயங்களாம். நடந்த சங்கதிகளைக்குறித்த விவாத அம்சங்களைப்பற்றிமாத்திரம் சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படுமேயொழிய, தருமசாஸ்திரத்தைக்குறித்த விவாத அம்சங்களைப்பற்றி ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ஆனால் அந்நியதேசச் சட்டமானது கோர்ட்டாரால் நியாயமுறைமையின்படி தெரிந்துகொள்ளப்படமாட்டாதாகையால், நடந்த சங்கதிக

ட்டைப்போலவே சாக்ஷியத்தைக்கொண்டு ருசுச்செய்யப்ப
டலாம். பிரான்சுதேசச்சட்டம் இன்னதென்று ருசுச்செ
ய்யவேண்டிய அவசியம் நேரிட்டால் ஒரு கக்ஷிக்காரன்
பிரான்சுதேசத்து (லாயர்) தருமசாஸ்திரக்கியனைச் சா
க்ஷியாக அழைத்து ருசுச்செய்யலாமேயொழிய, கோர்
ட்டாருடையசட்டம் இன்னதென்று ருசுச்செய்யச் சா
க்ஷியை அழைக்கக்கூடாது.

இங்கிலீஷ்காரர் விவகாரங்கள் நடத்துகிற ஒழுங்கின்
படி விவாத அம்சங்கள் (பிளீடிங்சு) விவகாரபத்திரங்களி
ல் நேராய் உண்டாயிருந்து கோர்ட்டாருடைய சகாய
மில்லாமலே கக்ஷிக்காரராலாகிலும் அவர்களுடைய வக்
கீல்களாலாகிலும் நிச்சயிக்கப் பட்டவையாம். ஆனால்
தருமசாஸ்திரத்தைக்குறித்த அல்லது நடந்த சங்கதிகளை
க்குறித்த எந்தெந்த அம்சங்களைப்பற்றி கக்ஷிக்காரர் வி
வாதப்பட்டிருக்கிறார்களென்று கோர்ட்டார் விசாரித்துத்
தெரிந்துகொள்ளவேண்டுமென்றும், அதின்பேரில் தரும
சாஸ்திரத்தைக்குறித்து அல்லது நடந்த சங்கதிகளைக்கு
றித்து விவாதத்திலிருக்கும் எந்தெந்த அம்சங்களைக்கொ
ண்டு வியாச்சியத்தைச் சரியாய்த் தீர்ப்புசெய்யக்கூடுமோ,
அந்தந்த அம்சங்களை ஏற்படுத்தி எழுதிக்கொள்ளவேண்டு
மென்றும் இந்தியாதேசத்துச் சிவில் புரோசிடியூர் என்
கிற சட்டத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. மேலும், க
க்ஷிக்காரரையாவது அவர்களுடைய வக்கீல்களையாவது
வாய்மொழியாய் விசாரித்துத் தெரிந்துகொள்ளப்பட்ட
சங்கதிகளைக்குறித்த வசனங்களைக்கொண்டு விவாத அம்ச
ங்களை ஏற்படுத்தலாம். சங்கதிகளைக்குறித்த அந்த வச
னங்களுக்கும், கக்ஷிக்காரராவது அவர்களுடைய வக்கீல்
களாவது (ரிட்டன் ஸ்டேட்மெண்ட்ஸ்) லிகிதபத்திரங்க
ளையாவது கொடுத்திருந்து சங்கதிகளைக்குறித்து அ
தில் எழுதியிருக்கப்பட்ட வசனங்களுக்கும் வித்தியாச
மிருந்தாலும் நிமித்தமில்லை.

ஆகிலும் பிரியாதர்ஜிக்கும் சாக்ஷியத்துக்கும் பொருளொற்றுமை யுண்டாயிருக்கவேண்டுமென் றெண்ணப் பட்டிருக்கின்றது; விவாதத்தின் சாராம்சமும் ருசுச்செய்யப்படவேண்டும். எப்படியெனில், தாயபாகத்தின்வழியாய்ப் பொதுவான பாத்தியமுண்டாயிருப்பவனாக வாதித்துப் பிறகு முக்கியமான ஒரு பத்திரப்படி சொத்தை வரப்பெற்றுக்கொள்ள முயலக்கூடாது. இதுவுமல்லாமல் அவன் பிரியாதில் ஒரு பத்திரத்தை ஆதாரமாகக்கொண்டு வாதித்துப் பிறகு தன்னுடைய பரம்பரைபாத்தியதையை ருசுப்படுத்தக்கூடாது.

இந்த நிபந்தனை சிவில் கிரிமினல் விசாரணைகளிரண்டுக்கும் உபயகக்ஷிக்காரர்களுக்கும் உபயோகமாகின்றது. எப்படியெனில், பிரதிவாதியானவன் தன் வாதத்தில் தான் தாக்கவில்லையென்று சொல்லிப் பின்பு பிரியாதுக்காரன் முதலடி அடித்தானென்று ருசுப்படுத்துவதிலும் தானவனைத் தாக்கினது சரிதானென்று மெய்ப்பிக்க யத்தனிப்படக்கூடாது. ௩-௬௦௧-பி.

௭. ருசுவும் வாதங்களும் ஒத்திருக்கவேண்டுமென்பதற்கு மூன்றுகாரணங்கள் உண்டு. அவையாவன, (முதலாவது.) பிரதிவாதி தன்பேரில் ருசுவாகப்போகிற தாவா அல்லது பிரியாதினுடைய சரியான தன்மையைத் தெரிந்துகொள்ளுகை. (௨-வது.) வாதத்தின்பேரில் கோர்ட்டார் தகுந்த தீர்ப்புச்செய்யக் கூடுமானதாயிருக்கை. (௩-வது.) ஒருதரம் தீர்மானிக்கப்பட்ட சங்கதிகளைக்குறித்து அந்தக் கக்ஷிக்காரர்களுக்குள் மறுபடியும் விவாதமுண்டானால் பின் முன் தீர்ப்பே உபயோகப்படத் தக்கதாயிருக்கை. (ஸ்டா-௯௨௫.)

௮. சில குற்றங்களுக்குச் சிலசங்கதிகள் அவசியமாய் நடந்திருக்கவேண்டுமென்றும், அப்படிப்பட்ட முக்கியமா

ன சங்கதிகளில் ஏதாவதொன்று நடவாதபக்ஷத்தில் அந்தக்குற்றம் பூர்த்தியானதாயிராதென்றும் கிரிமினல் தரும சாஸ்திரம் விதிக்கின்றது. அதெப்படியெனில், சாக்ஷி சொல்லுகிறவன் "உண்மையைத் தெரிவிக்கிறேனென்று பிரமாணஞ்செய்தாவது தரும சாஸ்திரத்தின் வெளிப்படையான ஒரு நிபந்தனையினாலாவது நியாயப்படி கட்டுப்பட்டவனாயிராமற்போனாலும், பிரமாணவாசகத்தைச் சொல்லச் சட்டப்பிரகாரம் கட்டுப்பட்டவனாயிராமற்போனாலும்," பினல் கோட்டின் ௧௯௧-வது பிரிவில் வர்ணித்து விவரித்திருக்கிற "பொய்சாக்ஷி சொல்லுதல்" என்கிற குற்றமானது பூர்த்தியாகாது. மேலும் ஒருவனுடைய சுவாதீனத்திலிருந்து அவனுடைய அனுமதியில்லாமல் அயோக்கியமாய் அசையும்பொருளை எடுத்துக்கொள்ளவேண்டுமென்கிற எண்ணத்துடன் அதை அசைப்பதானது பினல் கோட்டின் ௩௭௮-வது பிரிவில் அர்த்தம் விவரித்திருக்கிறபடி "திருட்டு" என்கிற குற்றம் ஏற்படுவதற்கு அவசியமானதாயிருக்கின்றது. அப்படிப்பட்ட முக்கியமான சங்கதிகளில் ஏதாவதொன்று ருசுவாகாமற்போகுமாயின் எந்தக்குற்றத்திற்கு அந்த ருசுவாகாதசங்கதி முக்கியமாயிருக்கின்றதோ அந்தக் குற்றத்தைக் குற்றவாளி செய்ததாகக் குற்றஞ் சுமத்தக்கூடாது.

௬. குற்றஞ்சாட்டப்பட்டவன் தன்சங்கதி பீனல்கோட்டிற்கண்ட "பொதுவிலக்குகளில்" ஒன்றுக்கும் உட்பட்டதென்று காட்ட முயற்சிசெய்தாலொழிய அப்போது அது அந்த விலக்குகளில் ஒன்றுக்கும் உட்பட்டதல்லவென்று ருசுச்செய்ய அவசியமில்லை. ஆனால் பிரியாதிற்கண்டிருக்கிற மேற்படி கோட்டின் பிரிவில் ஒரு முக்கியமான விலக்கு காணப்பட்டிருந்து அப்படிப்பட்ட விலக்கை உண்டாக்குகிற சங்கதிகள் நடந்ததில்லையென்று பிரியாதில் தெரிவிக்கப்பட்டிருந்தால் அந்தச் சங்கதிகள் நடந்திராமையைச் சாதாரணமாய் ருசுச்செய்யவேண்டும்.

௧0. இதேவிதமாய்ச் சிவில் தருமசாஸ்திரப்படி சில முக்கியமான சுதந்தரங்களுக்குச் சில சங்கதிகள் அவசியமானவையென்று ருசுச்செய்யப்படவேண்டும். அப்படிப்பட்டசங்கதிகள் ருசுச்செய்யப்படாமலே பரிகாரமுண்டாகமாட்டாது.

௧௧. வாதங்களும் சாக்ஷியமும் ஒத்திருக்கவேண்டுமென்று சொல்வதினால் அவை பிரதி அம்சத்திலும் எவ்வளவேனும் வித்தியாசமில்லாமல் ஒத்திருக்கவேண்டுமென்பது தருமசாஸ்திரப்படி அவசியமில்லை. ஆனால் முன் விவரித்தபடி எந்தெந்தச்சங்கதிகள் தாவாவுக்காவது பிரியாதுக்காவது சாஸ்திரப்படி முக்கியமானவைகளோ அந்தச் சங்கதிகளெல்லாம் ஒத்திருக்கவேண்டும். "எப்படியெனில்,
"ஒருதிருட்டைக்குறித்த பிரியாதுவிஷயத்தில் A என்பவ
"ன் ஒரு தடியை ஆயுதமாகக்கொண்டு முகமாறுவேஷமாக
"மாறுவேஷம் போட்டுக்கொண்டு, B என்கிறவனுடைய
"கடியாரத்தைக் கெட்ட நினைவுடன் திருடி எடுத்துக்
"கொண்டுபோனதாகச் சொல்லப்பட்டால், A என்பவன்
"ஆயுதபாணியாயிருந்தானென்றும், மாறுவேஷந் தரித்தி
"ருந்தானென்றும் சொல்லப்படும் சங்கதிகள் திருட்டைக்
"குறித்த பிரியாதுவிஷயத்திற்கு எவ்வளவும் சம்பந்த
"மில்லாததினால் அவை முழுமையும் நீக்கிவிடப்படும். அ
"ன்றியும் விசாரணைக்காலத்திலும் அவற்றைக்குறித்து ரு
"ச்செய்யப்படவேண்டியதில்லை. அப்படியே ஒரு பிரியா
"துபத்திரத்தில் A, B என்கிறவன் குடியிருக்கிறவீட்டில்
"கொள்ளை நடந்ததென்று சொல்லப்படுமாயின் குடியி
"ருக்கும் வீட்டில் கொள்ளை நடத்தப்பட்டிருக்கவேண்டு
"மென்பது "கொள்ளை" என்கிற குற்றத்துக்கு முக்கியமி
"ல்லாமையால், அந்தவீட்டின் எசமானனுடைய பெயரில்
"வித்தியாசமிருந்தாலும் அது எவ்வளவும் முக்கியமல்ல
"வென்று விதிக்கப்பட்டது." ஸ்டா-௩௨௧-(ப) குறிப்போடு.

௧௨. கிரிமினல்புரோசிடியூர்கோட்டில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற (சார்ஜ்) குற்றஞ்சாட்டுதல் பத்திரத்துக்கும் இங்கிலீஷ் தரும சாஸ்திரப்படி ஏற்படுத்தப்படுகிற (இண்டைட்மெண்டு) குற்றஞ்சாட்டுதல் பத்திரத்துக்கும் உள்ள பேதமென்னவெனில், (சார்ஜ்) குற்றஞ்சாட்டுதல் பத்திரத்தில் குற்றத்தை யுண்டாக்கத்தக்க முக்கியசங்கதிகளைக்குறித்த வசனங்களுக்குப் பதிலாக அனேகசங்கதிகளில் குற்றத்தின்பெயர் எழுதப்படுகின்றது. ஆயினும் பொதுவான விவாத அம்சத்தைக்குறித்து எந்தெந்தச் சங்கதிகள் குற்றத்தின் சாராம்சமாயிருக்குமோ, எந்தெந்தச் சங்கதிகளில்லாமலே நடந்தகாரியம் குற்றமாகமாட்டாதோ அந்தச் சங்கதிகளெல்லாம் ருசுச்செய்யப்படவேண்டுமென்று தெளிவாய்த் தெரியவருகிறது.

௧௩. விசாரணையிலிருக்கிற காவலாளியின்பேரில் கொண்டுவந்த பிரியாது பத்திரிகையை நடந்த சங்கதிகளுக்கு ஒத்திருக்கும்படியாய் மாற்றுவதற்காவது, யுக்தமாகத் தோற்றினால் விசாரணையை நடத்துவதற்காவது, நூதனமான எவ்வாதத்தைப்பெற்றுக்கொள்ளவும் குற்றஞ் சாட்டப்பட்டவனாகிலும் கோர்ட்டாராகிலும் விரும்புகிறபடி புதிய சாக்ஷியத்தைப் பெற்றுக்கொள்ளவும் விசாரணையை நிறுத்திவைக்கவாவது, இல்லாவிட்டால் புதிதாய் விசாரணைசெய்யும்படி உத்தரவுசெய்யவாவது கிரிமினல் புரோசிடியூர்கோட்டின் ௨௫௬, ௨௫௭-வது பிரிவுகளின்படி செஷன் ஜட்ஜிகளுக்கு அதிகாரமுண்டு. ஆனால் பிரியாது பத்திரத்தைத் திருத்தும்படியான எந்தச்சங்கதியிலும் குற்றஞ் சாட்டப்பட்டவன் பிரியாதிபக்ஷத்தில் முன்னமே விசாரிக்கப்பட்டிருக்கிற சாக்ஷிகளில் எவனையாவது மறுபடியும் வரவழைத்து எதிர்க்கேள்விகேட்கலாம். (இதைக்குறித்த இங்கிலீஷ் தருமசாஸ்திரம் ஸ்டார்க்கி ௬௩௩-வது பக்கத்திலும், பெஸ்ட்டு ௨௭௭-வது பிரிவிலும் பார்த்துக்கொள்க.) சிவில் வியாஜ்ஜியங்களில் (இஸ்யூக்கள்)

விவாத அம்சங்கள் கஅருஉ-வது ஆக்ட் 8 - கசஉ-வது பிரிவின்படி சீர்ப்படுத்தப்படலாம்.

கசு. ஜில்லாக்களிலுள்ள கோர்ட்டார் வாதிக்கப்பட்ட விஷயத்தையும் ருஜுச்செய்யப்பட்ட விஷயத்தையும் ஆலோசித்துத் தீர்ப்புச்செய்யவேண்டும். தொடர்ந்த வியாஜ்யத்தின் சாராம்சம் ருஜுவாகாதபக்ஷத்தில் சாக்ஷியத்தினால் ருஜுப்படுத்தப்பட்டதாகக் காணப்படுகிற பிரத்தியேகமான மற்றொரு காரணத்தைக்கொண்டு கோர்ட்டார் தீர்ப்புச் செய்யக்கூடாது. (ம-பி-புரா-உகூசு.) ஆனால் எதிர்க் கக்ஷிக்காரனைத் தப்புவழிக்கு இழுக்கும்படியானவையும் பிரமிக்கச் செய்யத்தக்கவையுமாயிராத அல்ப பேதங்களைப் பாராட்டாமலிருக்கிறதே வழக்கமாயிருக்கிறது.

ருஜுவான சங்கதிகள் சட்டப்படி சிட்சிக்கப்படுகிற குற்றத்தையாவது செல்லத்தக்க தாவாவையாவது ஏற்படுத்தப் போதுமானவைகளாயிருக்குமாகில் அப்படிப்பட்ட பிரியாது அல்லது தாவாவினுடைய பூர்ணமான வியாபகத்தை ருஜுப்படுத்தவேண்டிய அவசியமில்லை. ஆதலால் குற்றத்தை அதிகப்படுத்தவும் கஷ்டத்தைப் பெருகப்படுத்தவுமாத்திரம் அனுகூலமாயிருக்கிற வசனங்களை ருஜுப்படுத்தவேண்டியதில்லை. எப்படியென்றால் கொலைபட்டதாகக் கொண்டுவந்த பிரியாதில் முக்கியமான சங்கதிகளெல்லாம் ருஜுவானபோதிலும் கொல்லவேண்டுமென்கிற எண்ணம் உண்டாயிருந்ததில்லையென்று ருஜுவாகுமாயின் காவலாளி நரவதைசெய்த குற்றவாளியென்று தீர்மானிக்கலாம். மேலும், ஒருவன் ஆக்ஷேபணை பத்திரிகை உண்டு பண்ணி அச்சிட்டு விளம்பரம் செய்தவனாகக் குற்றஞ் சாட்டப்பட்டானானால் அந்தப் பத்திரிகையை அச்சிட்டுப் பிரசுரஞ்செய்வதற்காகமாத்திரம் அவன்பேரில் குற்றஞ்சுமத்தலாம். அதுபோலவே பிரதிவாதியானவன் ஒரு ஸ்திரீயைக் கெடுக்கவேண்டுமென்கிற எண்ணத்தோடும் புண

ரவேண்டுமென்கிற எண்ணத்தோடும் அவனை தாக்கினனாகக் குற்றஞ் சாட்டப்பட்டால் அந்த எண்ணங்களில் ஒன்றைமாத்திரம் ருசுப்படுத்தினால் போதும். ஸ்டா. கூஉகூ. ஆர்ச்-உஅஎ.

"எப்படியெனில், ஒரு (ஜெயிலர்) சிரச்சாலைக்காப்பாளன் "போலீசு உத்தியோகஸ்தன் முதலியவர்களில் எவன்பேரி "லாவது, தன் காவலிலிருந்த எவனையாவது தப்புவித்துக் "கொண்டு போகும்படி மனதார விட்டுவிட்டானென்று "கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியத்தில் அஜாக்கிரதையினு "லே தப்புவித்துக்கொண்டு போனசங்கதியை ருசுப்ப "டுத்துகிறதே போதும்." ரே-கூ௦கூ.

சாக்ஷியம் விவாத அம்சங்களைப்பற்றியதாய்மாத்திரமிருக்கவேண்டும்.

சு௫. "சாக்ஷியம் விவாதத்திலிருக்கும் அம்சத்தைப்பற் "றியதாகமாத்திர மிருக்கவேண்டுமென்பது சிவில்விவகா "ரங்களிலும் கிரிமினல் விவகாரங்களிலும் பொதுவான "விதியாயிருக்கின்றது." ரா-ஏ. டெ-உ.அத்.

எதிர்க்கக்ஷிக்காரரால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அம்சங்களையும், விவாதத்திற்குப் பொருந்தாத சங்கதிகள் விவகாரபத்திரங்களில் கண்டிருந்தால் அவைகளையும் ருசுப்படுத்தவேண்டியது அவசியமில்லை. ஆனால் முக்கியமான அம்சங்களெல்லாம் ஒப்புக்கொள்ளப்படாவிட்டால் ருசுப்படுத்தப்படவேண்டும். இப்படி ருசுப்படுத்தப்பட்ட போதிலும், சார்பான விவாதவிஷயங்களை ருசுப்படுத்தும்படி கக்ஷிக்காரர்களுக்குச் சாதாரணமாய் இடங்கொடுக்கிறதில்லை.

கசு. இந்த நியமத்தைப்பற்றி விவாதத்திலிருக்கிற அம்சங்களை விரித்துச் சொல்லத்தக்கதுகளாயாவது ருசுசெய்யத்தக்கதுகளாயாவது இருக்கும்விஷயங்களில்தவிரமற்ற

விஷயங்களில் நேராய் விவாதத்திலிராத சார்பான காரியங்களைக்குறித்துச் சாக்ஷியம் அங்கீகரிக்கப்படமாட்டாது. இவ்விதிக்குள்ள விலக்குகள் விலக்குகளாகக் காணப்பட்ட போதிலும் அவைகள் உண்மையானவைகளல்ல. அவைகள் முக்கியமாய்க் கிரிமினல் விஷயங்களில் நேரிடுகின்றன.

௧௭. ஒரு சாக்ஷிக்காரன் நிஜத்தைப் பேசுவானைக்குறித்து அவனுடைய சாதாரணமான யோக்கியதை அல்லது கீர்த்தியைப்பற்றிய சாக்ஷியம் அங்கீகரிக்கப்படத்தக்கதுதான். ஏனெனில் அந்த அம்சம் வியாஜ்ஜியமுடிவுக்கு முக்கியமானதாகவே யிருக்கிறது.

௧௮. யோக்கியதையைப்பற்றிய அம்சம் விவாதத்திலிருக்கிற விஷயங்களில் மட்டும் கட்சிக்காரர்களுடைய சாதாரணமான கீர்த்தியைக்குறித்து முக்கியமாய்ச் சாக்ஷியம் அங்கீகரிக்கப்படத்தக்கதாகும். ஆக்ஷேபனை முதலியவைகளைப்போன்ற நஷ்டபாயத்துகளுக்காகக் கொண்டுவரப்படும் சில சிவில் வியாஜ்ஜியங்களில் நஷ்டத்தொகையை நிச்சயிப்பதில் வாதியின் யோக்கியதையைக்குறித்து யோசிக்கலாம். மேலும் ஒரு ஸ்திரீயைக் கெடுத்ததாகவாவது அவளை எத்தினதாகவாவது செய்யப்படுகிற பிரியாதுகளில் அந்த ஸ்திரீ அதற்குமுன் கற்புள்ளவளா யிருந்தாளாவென்று விசாரிப்பது சார்பான ஒரு விவாதவிஷயத்தை உண்டாக்குகிறதாகத் தோற்றப்பட்டபோதிலும் அப்படிப்பட்ட விசாரணை எப்போதும் உரிமையானதாகவே யிருக்கின்றது. ஏனென்றால் அதனால் அந்தக் குற்றம் செய்யப்பட்டிருக்கலாமென்கிற சங்கதிக்குப் பாதகமுண்டாகலாம்.

௧௯. யோக்கியதையைக்குறித்த எல்லா விஷயங்களிலும் ஒருவன் யோக்கியதையுள்ளவனென்று உலகத்தார் பேசிக்கொள்வதுபோலச் சாதாரணமான கீர்த்தியைக்குறித்துமாத்திரம் சாக்ஷியம் விளங்கவேண்டும். அவனு

டைய நடத்தையைக்குறித்துச் சாக்ஷிகள் தங்களுக்குண்டாயிருக்கிற சொந்த அனுபவத்தைப்பற்றிப் பேசக்கூடாது. அன்றியும் முக்கியமான சங்கதிகளைத் தெரிவிக்கக்கூடாது. ஏனென்றால், அப்படிப்பட்ட சாக்ஷியம் அங்கீகரிக்கப்படத்தக்கதல்ல. ஆயினும் ஒரு ஸ்திரீ கற்பழிக்கப்பட்டாளென்று கொண்டுவந்த பிரியாதுசங்கதியில் அவள் அதற்குமுன் இதரமனிதர்களுடன் புணர்ச்சிசெய்தாளென்று ருசுப்படுத்தலாம். அப்படிப்பட்ட ருசு ராபின் என்பவனுடைய வியாஜ்ஜியத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றது. மூடி-அண்டு ராபின் - ௨ - பு, ௫௧௨ ப. ராஷிசன. பெ-௨௫௦-௨௫௮-பி. ஆர்ச்-௧௯௨. பி-சா,௧-பு. ௧௯௫-ப.

௨௦. யாதொரு குற்றம் அல்லது கெட்ட நடத்தையைக்குறித்து விசாரணையிலிருக்கிற பிரதிவாதி தன்னுடைய சாதாரணமான யோக்கியதையை ருசுப்படுத்துவதற்காகச் சாக்ஷிகளை அழைக்கலாம். ஆனால் பிரியாதுக்காரனுடைய உத்தேசம் குற்றத்துக்காகச் சிட்சிக்கவேண்டுமென்றில்லாமல், தப்புப் படிக்கட்டுகளை வைத்துக்கொண்டிருப்பது, (லைசென்சு) உத்தரவில்லாமல் சாராயம் விற்பதுபோல், யோக்கியதாம்சத்தைப்பற்றியதல்லாத இத்தன்மையான அற்பக்குற்றங்களுக்கு அபராதத்தை வசூல்செய்யவேண்டியதென்று மாத்திரமிருந்தால், காவலாளியினுடைய யோக்கியதையைக்குறித்த சாக்ஷியம் உரிமையானதல்லவென்று தள்ளிவிடப்படும். காவலாளியினுடைய குற்றத்தைக்குறித்துச் சந்தேகிப்பதற்கு இடமிருந்தால் அவனுடைய நற்குணத்தைப்பற்றிய சாக்ஷியம் உபயோகப்படும். அவன் செய்த குற்றம் தெளிவாயிருக்கிறபட்சத்தில் அந்தச்சாக்ஷியம் சாதாரணமாய் உபயோகப்படாது. ரா-௯௫. பி-சா-௪-பு-௧௯௫-ப.

௨௧. காவலாளி தன்னுடைய நல்ல நடத்தையை ஸ்தாபிக்கிறதற்குச் சாக்ஷிகளைக் கோரிக்கொள்ளாவிட்டால் அ

வன் துர்நடத்தையுள்ளவனென்று ரூபப்படுத்தப் பிரதிவாதக்காரனுக்குச் சாதாரணமா யிடங்கொடுக்கிறதில்லை. ரா-கரு.

உஉ. யோக்கியதையைக்குறித்த விசாரணை பிரதிவாதியின் தன்மையை அனுசரித்திருக்கவேண்டுமென்று பிட்டேய்லர் என்பவர் சொல்லுகிறார். அதெப்படியென்றால்:—

“திருட்டைக்குறித்த பிரியாதில் சாக்ஷியின் ராஜ“பக்தி அல்லது தயாளத்துவத்தைக்குறித்து விசாரிப்“பது உரிமையற்றதாயும் விவேகமற்றதாயுமிருக்கும். அப்“படியே ராஜத்துரோகத்தைப்பற்றிய பிரியாதில் சாக்ஷி“யின் தன் சொந்தவியாபாரத்தில் யோக்கியனாயும் கிர“மஸ்தனாயுமிருக்கிறானாவென்று விசாரிப்பது அவிவே“கமான காரியமாயிருக்கும்.” பி-சா-ஞ-பு-கஙள-ட.

உங. ஒரு பிரத்தியேகமான பெலனியென்கிற பெரிதான குற்றத்தை ரூபப்படுத்துதற்க சார்பான சங்கதிகள் ஒரு கிரிமினல் பிரியாதில் சாதாரணமாய் ரூஜு செய்யக்கூடாமற்போனபோதிலும் வெவ்வேறான அநேக பெலனிகளென்னுங் குற்றங்கள் ஒரே காரியமாகும்படியாய் ஒன்றோடொன்று சம்பந்தித்திருக்குமாயின் அவைகளில் ஏதாவதொன்றைச் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டபோது அந்தக் காரியத்தை நன்றாய்த் தெரிந்துகொள்ளும்பொருட்டு அந்தக் குற்றங்களெல்லாம் சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படலாம். ரா-அ0. ஸ்டா-கூஉஉ-ட.

உச. மேற்கண்ட காரணங்களைப்பற்றிய தோஷக்கியானத்தையாவது, கார்ப்பண்யத்தையாவது, உத்தேசத்தையாவது ரூபப்படுத்தச் சார்பான சங்கதிகள் சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படத்தகும்.

“எப்படியெனில், சிருஷ்டனைச் செய்யப்பட்ட யாதொ“ரு பத்திரத்தையாவது கள்ளநாணயத்தையாவது மன

"தறிந்து செலாமணிசெய்ததாகப் பிரியாது செய்யப்ப
"ட்ட விஷயத்தில் பிரஷ்டனைசெய்யப்பட்ட இதர பத்
"திரங்கள் வேறுவிதமானவைகளா யிருந்தபோதிலும்,
"அவைகளையும் இதர கள்ளநாணயங்களையும் காவலாளி
"தன் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருந்ததாவது செ
"லாமணி செய்வித்ததாவது அவனுடைய தோஷக்கியா
"னத்தை ருசுப்படுத்துவதற்குச் சாக்ஷியமாக அங்கீகரி
"க்கப்படத்தக்கதா யிருக்கின்றது." "அதுபோலவே திரு
"டப்பட்ட வஸ்துக்களை வாங்கினதாகக் குற்றஞ் சுமத்தப்
"பட்ட விஷயத்தில் பிரியாதுக்காரனிடத்திலிருந்து திரு
"டப்பட்ட அநேகவஸ்துக்களைக் காவலாளி இதரகாலங்
"களில் வாங்கிக்கொண்டிருப்பது அவன் திருட்டுச்சொத்
"தென்றறிந்து வாங்கினானென்பதற்கு ருசுவாக அங்கீகரி
"க்கப்பட்டது." "ஆனால் திருடப்பட்ட வஸ்துக்களைய
"த்த இதரவஸ்துக்கள் மற்றொருவனுடைய வஸ்துக்களாயி
"ருந்து அவனிடத்திலிருந்து திருடப்பட்டிருந்தால் அப்ப
"டிப்பட்ட வஸ்துக்களைக் காவலாளி தன் சுவாதீனத்தில்
"வைத்துக்கொண்டிருப்பது பிரியாதுக்காரனுடைய சொ
"த்துக்களைத் திருட்டுச்சொத்துக்களென்றறிந்து வாங்கின
"தற்காகக் கொண்டுவரப்படும் பிரியாது விஷயத்தில் சா
"ட்சியமாய்ச் சொல்லக்கூடாது." ஸ்டா-கூஉக-ப-(c)
குறிப்பு. ரா-அஅ-ப.

உரு. ஒரு செம்படவனைக் கொலைசெய்ததாகக் குற்ற
ஞ்சுமத்தப்பட்ட விஷயத்தில் காவலாளியின எண்ணத்
தைத் தெரிவிக்கும்பொருட்டு அவன் அதற்குமுன் சிலதட
வைகளில் இதர செம்படவர்களின்பேரில் சுட்டியிருந்ததை
சாக்ஷியமாகக் கொள்ளப்பட்டது. கா-கூ0அ-பி.

உகா. அப்பிரகாரமே காவலாளி அதற்குமுன்னமே ப
கையில் வைத்துக்கொண்டிருந்ததையாவது பயமுறுத்தின
தையாவது கார்ப்பண்ணியத்தை ருசுச்செய்யச் சாக்ஷிய

டமாய் ஏற்றுக்கொள்ளலாம். இல்லாவிட்டால் அந்தக்காவலாளி கெடுதியடைந்த மனிதனிடத்தில் விசுவாசமாயிருந்தானென்று அவன்பக்ஷத்தில் ருசுப்படுத்தப்படலாம். (௩௫௯-௬௩.) பின்னும் ஆக்ஷேணப் பத்திரிகையைக்குறித்தாவது சொல்லப்பட்ட வார்த்தைகளைக்குறித்தாவது பட்டுறுத்திக் கடிதமெழுதியதைக் குறித்தாவது கொண்டுவரப்பட்ட வியாச்சியங்களில், அந்தக் காவலாளியினால் எழுதப்பட்ட இதர ஆக்ஷேணப் பத்திரிகைகளும் இதரகடிதங்களும் அங்கிகரிக்கப்படத்தக்கவைகளா யிருக்கின்றன. ௩௬௩. ௩ - ௬௦௮ - பி.

௨௭. மேற்கண்ட ஒவ்வொரு விஷயத்திலும் சார்பான சங்கதிகள் விவாதத்திலிருக்கிற அம்சத்தைத் தெளிவுபடுத்த உபயோகமாகின்றனவென்கிற ஏதுவின்பேரில் அதுகளைப்பற்றிய சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதாயிருக்கின்றது.

௨௮. (கன்ஸ்பிரஸி) பலர்கூட்டுகூடிச் செய்கிற துராலோசனையைப்பற்றிய வியாச்சியங்களில் இராஜாலோசனைக்காரர்களுடைய செய்கைகளும் வசனங்களும் வேறுகாரணத்தைப்பற்றி ஒப்புக்கொள்ளத்தக்கவைகளாயிருக்கின்றன. "ஒரு அக்கிரமமான விஷயத்தைப்பற்றியே
"அநேகரொன்றாய்ச் சேர்ந்திருப்பதாக ருசுவாகியபக்ஷ
"த்தில்முதல் உத்தேசிக்கப்பட்ட ஏற்பாட்டின்படி அவர்
"கள் யாவருக்குமுண்டாயிருக்கிற கருத்தையனுசரித்து
"அவர்களில் ஒருவன்செய்த எந்தக்காரியத்தையாவது ச
"ட்டத்தின் தாற்பரியப்படிக்கும் இடமான நியாயப்படிக்
"கும் அவர்கள் யாவருஞ் செய்தகாரியமாகவே யெண்
"ணப்படவேண்டுமென்பது உறுதியான விதியாயிருக்கின்
"றது. ஆகையால் அந்தக்காரியத்திலேயே காவலாளி ச
"ம்பந்தப்பட்டிருந்ததாக ருசுச்செய்யப்பட்டதாவென்கிற
"அம்சத்தோடு நிமித்தமில்லாமல், அக்காரியத்தின் ருசு

"பொதுவான அந்தந் தாராலோசனையில் சேர்ந்திருந்த மற்றவர்களில் யார்பேரிலாவது சாக்ஷியமாகக் கொள்ளப்படும்." ரா-அஉ-ப.

## ருசுப்படுத்தவேண்டிய பாரம்.

௨௯. விவாத அம்சத்தின் முக்கியமான சங்கதிகள் நடந்திருக்கிறதாக உறுதியாய்ச் சொல்லுகிற கக்ஷிக்காரனே அதை ருசுப்படுத்தவேண்டிய கடமை யுடையவனுயிருக்கிறானென்பது சாதாரண விதியாயிருக்கின்றது. ஆனால் அப்படி முக்கியசங்கதிகள் நடந்தனவென்று உறுதியாய்ச்சொல்வது வெறுசாய் எதிர் மறை ரூபமுடைய பதங்களினால் தெரிவிக்கப்பட்டிருக்கலாம். இதனால் மிகவும் புத்திக் கலக்கந்தரக் கிடமாயிருக்கும். டெ-௩௩௭.

௩௰. பின்வரும் விதியை அனுசரிப்பது மிகவுஞ் சுலபமாயிருக்கும்; அந்தவிதியாவது, கொண்டுவரப்பட்ட சாக்ஷியத்தைவிட அதிக சாக்ஷியம் இரண்டு கக்ஷிக்காரர்களுக்குள் எந்தப்பக்கத்திலாகிலுங் கொண்டுவரப்படாவிட்டாலும், அல்லது ருசுப்படுத்தவேண்டிய சங்கதி வியவகாரப்பத்திரங்களில் விட்டு விடப்பட்டிருந்தாலும், அப்போது ருசுப்படுத்தவேண்டிய பாரம் எந்தக்கக்ஷிக்காரன் தோற்றுப்போவானோ அவனைச் சார்ந்ததாயிருக்கும். எப்படியெனில், நிலம் மறுபடியுஞ் சுவாதீனமாக வேண்டுமென்று கொண்டுவந்த வியாச்சியத்தில் ருசுப்படுத்தவேண்டிய பாரம் நிலம் சுவாதீனத்தி லில்லாதவனைச்சார்ந்ததாயிருக்கும். (சென்னபட்டணம் ௧௮௫௰ ௵ ௫௩௰-ம் பர்-வி-அ-௧௮௫௰ ௵ ஏப்பிரல் ௴ ௧௰௨.) மேலும் ஒரு வீட்டின் சொந்தக்காரன், தன்வீட்டில் குடியிருப்பவன் அந்த வீட்டை பழுதுபார்க்கவில்லையென்று அவன்பேரில் கொண்டுவந்த வியாச்சியத்தில் அந்தக் குடித்தனக்காரன் அந்தச் சங்கதியை மறுதலித்தால், வேண்டியமட்டும் அப்படிப் பழுதுபார்க்கவில்லையென்று வீட்டுக்காரன் ருசுப்படு

த்தவேண்டும். ஏனென்றால், பழுதுபார்க்கவில்லையென்பது இலக்கணரீத்யாய் எதிர்மறையாயிருந்தபோதிலும் அதை ப்பிரியாதர்ஜியிலிருந்து எடுத்துப்போட்டாலும், அல்லது உபயபக்ஷத்திலும் யாராவது சாக்ஷிய மொன்றுங்கொண்டுவராவிட்டாலும், அப்போது வாதி தோற்றுப்போவான். “மேலும் வாதி தன தாவாவுக்கு எதிர்மறை வசனத்தை “ஆதாரப்படுத்திக்கொண்டிருந்தாலும், அந்த எதிர்மறை “வசனத்தை ஸ்தாபிப்பது அவன் சுதந்திரத்தைப்பலப்ப “டுத்த முக்கியமான அம்சமாயிருந்தாலும், அப்படிப்ப “ட்ட விஷயங்களில் அந்தவசனத்தை வாதியே ருசுப்ப “டுத்தவேண்டும்.” டெ. ௧௧௮-பி.

௧௧. ஆனால் எதிர்க்கத்தக்க அனுமேயம் * ஒரு கக்ஷிக்காரனுக் கனுகூலமாயிருந்தால், ருசுப்படுத்த வேண்டிய பாரம் எதிர்க்கக்ஷிக்காரனதாயிருக்கும். அந்தப்படியே ஒருவன் குற்றவாளியென்று ருசுவாகிறவரையில் குற்றமற்றவனென்றே அனுமேயமுண்டாகிறபடியால், குற்றத்தை எவன் சாட்டுகிறானோ அவனிடத்திலேயே ருசுச் செய்யவேண்டியபாரமுண்டாகும். மோசம் நடந்ததென்று ருசுவாகிறவரையில், மோசம் நடக்கவில்லையென்கிற அனுமேய முண்டாகிறபடியால், ருசுச் செய்யவேண்டியபாரம் மோசம் நடந்ததாகச் சொல்லுகிறவனைச்சேரும். நியாயமானதும் போதுமானதுமான தொகையைப்பற்றிக்கொண்டு ஒரு கடன்பத்திர மெழுதிக்கொடுக்கப்பட்டதென்னும் அனுமேய முண்டாகிறபடியால் தொகையைப் பற்றிக்கொள்ளவில்லையென்று சொல்லுகிறவன் அதைருசுப்படுத்த வேண்டிய கடமையுள்ளவனாயிருக்கிறான். டெ-௧௧௧-௩௦ பி; ஸ்டா-ருகூ௨. ௨௯௩-ப.

௧௨. எந்தச் சங்கதியாயினும் கக்ஷிக்காரர்களில் ஒருவனுக்குமாத்திரமே தெரிந்திருக்குமாயின், அந்தச்சங்கதி

* ௪௧-வது பிரிவைப்பார்த்துக்கொள்க.

யை அவனே ருசுப்படுத்தவேண்டியதாகக் காணப்படுகிறது. எப்படியெனில், (லைஸென்சு) உத்தரவில்லாமல் சாராயமுதலிய வைகளை விற்கிறதாகப் பிரியாது கொண்டுவரப்படும் விஷயங்களில், பிரதிவாதி தன்னிடத்தில் (லைசென்சு) உத்தரவு இருப்பதாக வாதித்தால், அதை அவன் ருசுப்படுத்தவேண்டியது. ஆனால் அப்படிப்பட்ட விஷயங்களில் ருசுப்படுத்த வேண்டியபாரம் பிரதிவாதியைச்சார்ந்ததாகச் செய்வதற்கு முதலிய பிரியாதிபக்ஷத்தில் சிலசாட்சிய மிருக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆர்-கஅஎ, டெ-௧௬௯-பி-(b) குறிப்புடனும்-௧௬௮-பி-ம். கஅ௫௬-௵ ௧-௪-தி-அ-கோ-தீர்ப்புப்புத்தகத்தின்-கOஎ௨-பக்கத்திலிருக்கும் தா௱ர்தாஸ் கோசெட்ஸ்-எதிரி-பீதம்பரராய இவர்களுடைய வியாச்சியம்.

(எஸ்ட்டாபெல்) தடை.

௧௧. (எஸ்ட்டாபெல்) தடை என்பது ஒருவன் தான் சொந்தமாய் முத்திரையுடன் கொடுத்த பத்திரத்திற்காவது, சொல்லியிருந்த வார்த்தைக்காவது, தான் ஒரு கக்ஷிக்காரனாயிருந்த வியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்புக்காவது விரோதமாய் வாதிக்காமல் தடுப்பதாம். பெ-௫௪௫-பி.

௧௪. இங்கிலீஷ் தருமசாஸ்திரப்பிரகாரம் தடை மூன்றுவகைப்படும். முதலாவது - (ரிகார்ட்டு) இரந்த விஷயத்திலுண்டாவது. ௨-வது-பத்திரத்திலுண்டாவது. ௩-வது (இன்பேஸ்) லோகப்பிரசித்தமான விஷயத்திலுண்டாவது.

௧௫. முதலாவது. (ரிகார்ட்டு) இரந்தவிஷயத்திலுண்டாவது.—நியாயபரிபாலனஞ்செய்கிற ஒரு கோர்ட்டினுடைய (ரிகார்ட்டு) கிரந்தமானது ஜாக்கிரதையாயும், சரியாயும் எழுதப்பட்டிருப்பதென்று தருமசாஸ்திரப்படி அநுமேயமுண்டாகின்றது. மேலும், வியாச்சியங்கள் வளராமல் முடிவுபெறும்பொருட்டு அப்படிப்பட்ட (ரிகா

ர்ட்) கிரந்தம் நிஜமானதென்றும் முடிவான அநுமேயமுண்டாகின்றது. இப்படி மேல் தெரிவிக்கப்படுகிறபடி ஒருவன் கக்ஷிக்காரனுயாவது, அவன் மூலமாய்ச் சுதந்தர மடைய த்தக்கவனுயாவது இராத ஒரு வியாச்சியத்தின் தீர்ப்பினுல் பரிஷ்கரிக்கப்பட்ட விஷயங்களில்தவிர, மற்றெந்த விஷயங்களிலும் அந்த (ரிகார்ட்) கிரந்தத்துக்கு விரோதமாய் ருஜூச் செய்யக்கூடாது. எப்படியெனில்; விவகாரம் கிரமமாய் நடத்தப்பட்டதாக (ரிகார்டு) கிரந்தத்தினுல் தெரியவருகிற விஷயத்தில் அதில் சம்பந்தித்திருக்கிற கக்ஷிக்காரனுனவன் அதற்கு விரோதமாய் வாதிக்கவுங்கூடாது. ஒரு வாக்குமூலம் சரியாயெழுதிக்கொள்ளப்படவில்லையென்று ருசுச்செய்யச் சாக்ஷியம் அங்கீகரிக்கப் படவுமாட்டாது. (௩௪௮. ௩௫௭, ௩௫௮, பி·கள், பெ-௫உக-பி. ஸ்மி.லீ-கே-உ - பு. ௬0௮-ப. ௩௧-௫உசு.) நியாயபரிபாலனஞ்செய்யும் ஒரு கோர்ட்டாரால் செய்யப்பட்ட தீர்ப்பின் முடிவுகளைக்குறித்து மற்ரேரிடத்தில் சொல்லப்படும். ஒரு தீர்ப்பு ஒருவனுக்கு விரோதமாய் முடிவாயிருக்கிற பக்ஷத்தில் அவன் மறுபடியும் அந்த விவாத அம்சத்தையே புதுவியாச்சியத்தில் தொடராமல் தடுக்கப்படுவானென்று மாத்திரம் நாம் இவ்விடத்தில் சொல்லவேண்டியதா யிருக்கின்றது.

௩௬. இதுபோலவே (பிளீடிங்ஸ்) விவகாரபத்திரங்களில் "ஒரு கக்ஷிக்காரனுல் சொல்லப்பட்ட முக்கியமான "சங்கதிகள் எதிர்க்கக்ஷிக்காரனுல் பிரத்தியக்ஷமாயொப்பு "க்கொள்ளப்பட்டாலும், அல்லது இதரமான சிலசங்கதி "களைக்குறித்துப் பிரஸ்தாபஞ்செய்து பரோக்ஷமா யொப் "புக்கொள்ளப்பட்டாலும், அந்தச் சங்கதிகளைக்குறித்து "அந்தக்கக்ஷிக்காரர்களே மறுபடியும் வழக்கிடக்கூடாது; "அந்தச்சங்கதிகள் அவர்களிருவருக்கும் முடிவான சாக்ஷி "யமாயிருக்கும். ஆனுல் பிரஸ்தாபிக்கப்பட்ட சங்கதி பி

"ஸ்நாபநஞ் செய்கிறவனுக்கே விரோதமாயிருப்பதாகத் "நிர்மாணிக்கப்பட்டிருக்கவேண்டும்." பெ-௫௨௩-பி.

௩௭. இரண்டாம் வகையாகிய முத்திரை சகிதமான பத்திரத்தினு லுண்டாகும் தடையைக்குறித்து.—முத்திரை சகிதமாய் பத்திரமெழுதிக்கொடுப்பது இங்கிலீஷ் தருமசாஸ்திரப்படி அதிகப் பிரமாணிக்கமும் ஆலோசனையுமுள்ள செய்கையாய் எண்ணப்பட்டிருப்பதால், ஒருவன் தன்னுடைய முத்திரை சகிதமாகிய சொந்தப் பத்திரத்திற்கு விரோதமாய் வாதிக்கவும் எதையாவது ருசுசெய்யவுங் கூடாதென்று தடுக்கப்படுகிறான். ஆனால் அந்தப் பத்திரத்தில் முக்கியமாய் காணப்படாமல், வாதத்தினால் பத்திரத்திலிருந்து ஊகிக்கத் தக்கதாயாவது, அறியத் தக்கதாயாவது இருக்கிற யாதொரு விஷயத்திற்கு மேற்படி விதி உபயோகப்படமாட்டாது. ஸ்டா - ௯௯. பெ - ௫௨௪ - பி.

௩௮. மூன்றாவதாகிய வெளிப்படையான சங்கதிகளினால் உண்டாகும் தடையைக் குறித்து.—வெளிப்படையான சங்கதிகளென்பன:—பூர்வீகத்தில் ஊரிலாவது, அண்டையசலிலாவது, யாவருக்குஞ் சாதாரணமாய்த் தெரியத் தக்கவைகளாயும், விசேஷமான விசாரணை யில்லாமலே சுலபமாய்த் தெரிந்துகொள்ளத் தக்கவைகளாயுமிருக்கிற காரியங்களென்று கிரகிக்கத் தக்கவையாகத் தோன்றுகின்றவையேயாம். பெ-௫௨௫-பி. லா - லெக்ஸிகன்-"பெய்ஸ்".

௩௯. இந்தவகைத் தடைகளானவை சிலகாலமாய்ப் பிரசித்தமில்லாதவிஷயங்களிலும் உபயோகப்பட்டுக்கொண்டுவருகின்றன. "எவனாயினும் ஒரு காரியத்திற்குச் சம்மதித்து, அதனால் ஒரு சுதந்தரத்தை யடைந்து அனுபவித்து "வருவானாகில், அவன் அந்தக்காரியத்தைக்குறித்துக் குற்"றஞ் சொல்லக்கூடாதென்று" ஸ்டார்க்கி என்பவர் தன்னுடைய கிரந்தத்தின் ௧00-வது பக்கத்தில் பொதுவிதி ஏற்

படுத்தியிருக்கிருர். எப்படியெனில், குடிக்கூலி பாக்கிகளை வரப்பற்றுவதற்காகக் கொடுக்கப்படும் வியாச்சியத்தில், நிலத்தை யனுபவித்துக்கொண்டிருக்கிற குடிக்கூலிக்காரனானவன் யாருடைய பாத்தியதையின்பேரில் தான் நிலத்தை அனுபவிக்கிருனே அந்தச் சொந்தக்காரனுடைய பாத்தியதையைக்குறித்து ஆக்ஷேபியாமலிருக்கும்படி தடைசெய்யப்பட்டிருக்கிருன். ம-டை-ஆ-வ-குத்தகைவிஷயம்-உ-ந.

சo. மேலும் "எவனுயினும் மனப்பூர்வகமாய்த் தன் "பேச்சினுலாவது நடத்தையினுலாவது காரியங்கள் இவ் "விதமாயிருக்கின்றனவென்று மற்றொருவன் நம்பும்படி "செய்து அவன் எந்த நம்பிக்கையின்பேரில் முன்னிருந்த "தனது சொந்தநிலைமையை மாற்றிக்கொள்ளும்படி உடன் "படுத்துகிறபக்ஷத்தில் அப்படி நம்பிக்கையுண்டாகச்செய் "தவன் நம்பும்படி செய்தகாலத்திலேயே உண்டாயிருந்த "விஷயங்கள் வேறுவிதமாயிருந்தனவென்று நம்பினவனு "க்கு விரோதமாய்ச்சொல்லாமல் தடுக்கப்படுகிருனென் "று" அடால்பஸ் எல்லிஸ் இவர்களுடைய ரிபோர்ட்டுகளின் கூ-வது புத்தகத்தின் சகூகூ-வது பக்கத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிற பிக்கர்ட்டு என்பவருக்கும் சீர்ஸ் என்பவருக்கும் நடந்த வியாச்சியத்தில் லார்ட்டு டென்மென் என்கிறவர் விதி ஏற்படுத்தியிருக்கிருர்.

சக. ஆயினும் மேற்சொன்னவிதியில் வழங்கப்படுகிற "மனப்பூர்வகமாய்" என்கிற வார்த்தைக்கு ஒரு மனிதன் பொய்யானதென்று தான் அறிந்திருந்ததை உண்மையானதென்று தெரிவிக்கிறதாக அர்த்தமாகாமற்போனுலும், தான் தெரிவித்ததை நம்பி நடப்பிக்க வேண்டியதாகத் தான் எண்ணினுனென்றும், அந்தப்படியே நடப்பிக்கப்பட்டதென்றும், நாம் தெரிந்துகொள்ளவேண்டும். மேலும் ஒரு மனிதனுடைய உண்மையான கருத்து என்னமாயிருந்

தபோதிலும், அவன் தெரிவித்ததை நியாயவானாகிய ஒருவன் உண்மையென்றெண்ணி அந்தப்படி தான் நடந்துகொள்ளவேண்டுமென்று உபதேசிக்கப்பட்டதாக நம்பி, அப்படி உண்மையானதாகவே நினைத்து நடந்திருந்தால், அந்தச் சங்கதியைத் தெரிவித்தவன் அது உண்மையானதல்லவென்று ஆக்ஷேபிக்கக்கூடாது. பின்னும் வர்த்தகசம்பந்தமான வழக்கத்தினாலாவது, மற்றெவ்விதத்தினாலாவது உண்மையைத் தெரிவிக்கவேண்டியது ஒருவனுடைய கடமையாயிருக்கிறபோது அசாக்கிரதையாய் நடந்தாலும் செய்யவேண்டியதைச் செய்யாமற்போனாலும் முன் கூறப்பட்ட முடிவே வெருவாயுண்டாகும். எப்படியென்றால், கூட்டுவியாபார வேலையினின்று நீங்கிப்போகிற பங்காளியானவன் அந்தக் கூட்டுவியாபாரத்தை நடத்திக்கொண்டிருக்கும் மற்ற பங்குக்காரர்கள் தனக்கு (ஏஜெண்டு) காரியஸ்தர்களாயிருக்க இனி அவர்கள் அதிகாரமுடையவர்களல்லவென்று அந்தக் கூட்டுவர்த்தகச்சாலையில் கொள்முதல்செய்கிற வழக்கக்காரர்களுக்கு வழக்கப்படி தெரிவிக்கத் தவறிப்போவானாயின் அந்தப் பங்காளிகளுக்கு அப்படிப்பட்ட அதிகாரமிருக்கிறதாக நம்பிப் புரத்தியார் அவர்களுடன்செய்யும் எல்லா உடன்படிக்கைகளுக்குங் கட்டுப்பட்டவனாவான். ஸா-ஜ எ-கஅ-பு-ககக-பக்கத்தில்கண்ட பிரீமென்-எதிரி-கூக் இவர்கள் வியாச்சியத்தில் பாரன் பார்க் என்பவர் சொல்லிய அபிப்பிராயம். எ-பா-உ-பு-க-பக்கத்தில்கண்ட ஹவ்வர்ட்-எதிரி-டிராட்ஸன் வியாச்சிய விஷயத்தையும்பார்த்துக்கொள்க.

"எப்படியெனில், ஒருவன் ஒரு ஸ்திரீ தன்னுடைய மனை
'வியென்று ஒரு வர்த்தகனுக்குத் தெரிவித்து அதனால் அவ
"னுக்கு அந்தவர்த்தகன் சரக்குகளைக் கொடுக்கும்படிச்செ
"ய்தால் தான் தெரிவித்த சங்கதியினால் அவன் கட்டுப்படு
"வான். அந்த ஸ்திரீ தன் மனைவியல்லவென்று பின்பு அ

"வன் செய்யும் ருசு ஒப்புக்கொள்ளப்படமாட்டாது.' ஸ்டா - ௧௦௦.

௪௨. (ரிகார்ட்டு) கிரந்தத்திலாவது முந்தின சகிதமான பத்திரத்திலாவது தடையுண்டாயிருந்தால் அதைக்குறித்து வாதிக்கவேண்டுமென்பது இங்கிலீஷ் தருமசாஸ்திரத்தின் விதியாயிருக்கின்றது. சமயம்நேர்ந்தபோது (பிளீடிங்ஸ்) விவாதபத்திரங்களில் அதைக் காண்பிக்காவிட்டால் அதனால் ஜூரிகள் அவசியமாய்க் கட்டுப்படமாட்டார்கள். அது பின்னிட்டு அவர்கள் யோசிக்கத்தக்க விஷயமாகமாத்திரமிருக்கும். எப்படியெனில் ஒரு வியாச்சியத்தில் அதேவிஷயத்தைப்பற்றி அதே கக்ஷிக்காரர்களுக்கு முன் வழக்குண்டாகித் தீர்ப்புச்செய்யப்பட்டிருந்தால் அந்தத் தீர்ப்பு விவகாரபத்திரங்களில் ஆதாரமாயுதகரிக்கப்பட்டிருக்குமாயின் அது அந்தச்சங்கதியின் சாராம்சங்களைக்குறித்து எவ்வளவேனும் விசாரணை செய்வதற்குத் தடையாயிருக்கும். ஆனால் விவகாரபத்திரங்களில் முந்தின தீர்ப்பைக்குறித்துப் பிரஸ்தாபிக்கப்படாமலிருந்தால் அந்த விஷயம முழுமையும் விசாரிக்கத்தக்கதாகி, முந்திய தீர்ப்பைக்குறித்து யோசிக்கவேண்டியதாகமாத்திரமிருக்கும். பெ-௩௨௯-பி. ஸ்டா-௩௪௩. நா-௯௭0-பி.

௪௩. மேற்சொன்னது (இன்பேஸ்) வெளிப்படையான சங்கதிகளினாலுண்டாகும் தடைகளுக்கு உபயோகப்படமாட்டாது.' ஏனெனில் அப்படிப்பட்ட தடைகளைப்பற்றி விவகாரபத்திரங்களில் கண்டெழுதுவது அவசியமாயுமிராது. அப்படிக் கண்டெழுதுவது பலதடைவைகளில் யுக்தமாயுமிராது. மேலுமிப்படிப்பட்ட தடைகளைப்பற்றி வாதிக்கப்படாமல் போனபோதிலும் ஜூரிகள் அவைகளை யனுசரித்து நடக்கவேண்டிய கடமையுள்ளவர்களாயிருக்கிறார்கள். லா - ஜ - ஏ - ௧௮-பு-௧௧௯-பக்கத்தில் பிரீமென் எதிரி கூக்வியாச்சியம். செ-ஹை-கோ-ரி-௨-பு-௩௧-பக்கத்தில் சிவராவு நாருஜி-எதிரி-ஜீவனராவு வியாச்சியம்.

௩௩. கடைசியாய் ஒருவன் தான்செய்த தீங்கு, குற்றம், அல்லது மோசத்தினால் பிரயோசனமடையும்படி எவனுக்கும் இடங்கொடுக்கக்கூடாதென்று தருமசாஸ்திரத்தில் விதியாயிருக்கின்றது. இந்த ஏதுவைப்பற்றி எவனுவது நீதிக்கும் சட்டத்துக்கும் விரோதமான யாதொரு உடன்படிக்கையைச் சிவில் வியாச்சியமூலமாய் ஊர்ச்சிதப்படுத்திக்கொள்ளக்கூடாதென்று தீர்க்கப்பட்டிருக்கின்றது. (மெ - ௩௨௬ - பி.) கஅ௱௧௧-வருஷத்துத் தீர்ப்புப் புஸ்தகத்தின் ௭௭௪-வது பக்கத்தில் உதகரிக்கப்பட்டிருக்கின்ற ராஜா ராம் நாராயணராய், எதிரி - ஜகந்நாத பிரசாதமல்லிக் முதலியவர்கள் - இவர்களுக்கு நடந்த வியாச்சியத்திலும், கஅ௱௨௯ வருஷத்துத் தீர்ப்புப்புஸ்தகத்தின் ௫௭௨-வது பக்கத்தில் உதகரிக்கப்பட்ட ராமசந்திர சந்தியாஸ், எதிரி - ராஜா ஆனந்தராய் முதலியவர்கள்-இவர்களுக்கு நடந்த வியாச்சியத்திலும், கலகத்தா சதர் திவானி அதாலத்துக்கோர்ட்டார் விதித்திருப்பதென்னவென்றால்:—ஒருவன் தனக்குக் கடன்கொடுத்தவர்களை மோசஞ்செய்யும்பொருட்டுத் தன் சொத்துக்களை முறைப்படி மற்றொருவனுக்கு எழுதிக்கொடுத்துவிட்டால், அப்படி எழுதிக்கொடுத்தது மனதறிந்து செய்ததல்லவென்கிற காரணத்தைப்பற்றி மறுபடியும் அந்தச் சொத்துக்களை வரப்பற்றிக்கொள்ளக்கூடாது.

மேலும் இப்படிப்பட்ட வியாச்சியத்தைப் பிடிக்கிறதில்லையென்று கோர்ட்டார் மறுப்பதினால், வாதிக்குச் சமானமான குற்றவாளியாயிருக்கத்தக்க உடன்படிக்கையிற் சேர்ந்த மற்றொருவனுக்குப் பிரயோசனமுண்டாக்கத்தக்கதாயிருந்தபோதிலும், ஒரு அநீதிவிஷயமான தாவாவைக் கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளாமல் மறுத்து, அவர்கள் எந்த நிலையிலிருந்ததாகக் கோர்ட்டாருக்குக் காணப்பட்டார்களோ, அந்த நிலையிலேயே அவர்களிருக்கும்படிச்

செய்வது கோர்ட்டாருக்கு நியாயமாயிருக்கும். ௬௱-௬௰௩-பி. மா-டை-௲-பு-வி-அ-கிரம உடன்படிக்கைகளென்கிற விஷயம்.

டச்செஸ் - ஆப் - கிங்க்ஸ்டன் என்பவளுடைய வியாச்சியவிஷயத்துக்குச் சேர்க்கப்பட்ட குறிப்பில், தடையைப் பற்றிய இங்கிலீஷ் சித்தாந்தத்தைக் குறித்த ஒரு அருமையான விர்த்தாந்த மெழுதப்பட்டிருக்கின்றது. ஸ்மி-லீ-கே-௨-பு-௬௱௦௭-ம.

அநுமேயங்கள்.

௬௫. நடந்த சங்கதிகளினால் உண்டாகும் ஊகிப்பு அல்லது நிச்சயமானது அநுமேயமென்று சொல்லப்படும். அநுமேயத்தை வெளியிடுவது, நமக்குத்தெரிந்த சங்கதிகளைக்கொண்டு இதுவரைக்குந் தெரியாத வேறொரு சங்கதியை ஊகித்தறிவதேயாம். நடுராத்திரியில் நமதறைக்குள் ஒரு அன்னியனைப்பார்த்தோமேயானால் அவன் திருடவந்தானென்று அநுமேயமுண்டாகின்றது. மேலும், ஒருவன் மரணத்தை யுண்டாக்கத்தக்க ஆயுதத்தைப் பிரயோகித்தால், அவன் கொலைசெய்வதற்கோ, பலமான சரீர இம்சைசெய்வதற்கோ, உத்தேசித்தானென்று நாம் ஊகிக்கலாம்; அல்லது அப்படிப்பட்ட அநுமேயம் நமக்குண்டாகலாம். அநுமேயங்களைக்குறித்த மற்ற திருஷ்டாந்தங்களை சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தைப்பற்றி விவரிக்குமிடத்தில் கண்டுகொள்ளலாம்.

௬௬. சிலவிஷயங்களில் சில சங்கதிகளைப்பற்றித் தருமசாஸ்திரப்பிரகாரம் கற்பித அநுமேயமுண்டாகின்றது. அப்படிக்கில்லாமற்போனாலும் சுபாவமான ஒரு அநுமேயமானது எந்தச் சங்கதிகளைப்பற்றியுண்டாகின்றதோ அந்தச்சங்கதிகளினால் பகுதி சாதாரணமாய்த் தோன்றுகிற கருத்தோடு தருமசாஸ்திரப்படி சுயமான வலுமையும் சிரேஷ்டத்துவமும் அதற்குண்டாகின்றது. இதற்குத் திரு

ஷ்டாந்தம் வியாச்சியங்கள் கொண்டுவரப்படவேண்டிய காலவரையறைச் சட்டத்தைக்கொண்டு சாதாரணமாய்க் கொடுக்கப்பட்டிருக்கின்றது. சில்லரையாக விற்கப்படும் சரக்குகளின் கிரயத்தொகையை வரப்பற்றிக்கொள்வதற்காக, ௧௮௭௧ ௵ - ௯ - வது ஆக்ட்டு - ௮ - வது பிரிவின்படி, மூன்றுவருஷங்களுக்குள் வியாச்சியங் கொண்டுவரப்படவேண்டியதென்று வரையறை யேற்படுத்தப்பட்டிருக்கின்றது. அக்காலமுடிவில், அந்தக்கடன் செலுத்தப்பட்டதாகத் தருமசாஸ்திரப்படி முடிவான அநுமேயமுண்டாகின்றது. அப்படிப்பட்ட விஷயங்களில் கடன்செலுத்தப்பட்டதென்று இயற்கையாயுண்டாகிற அநுமேயமானது காலஞ் செல்லச்செல்லப் பலப்படுகின்றது. ஆயினும் அவ்வநுமேயம் இன்னதினத்தில் முடிவானதாகுமென்பது புத்தியினால் சொல்லப்படுவதல்ல; ஆனபோதிலும், மூன்றுவருஷம் முடிகிறதற்கு ஒருநாள் முந்தி அந்தக்கடன் தீர்ந்துபோனதாகச் சட்டப்படி உண்டாகாத அநுமேயம், அந்த மூன்றுவருஷமானவுடனே உண்டாகின்றது.

௪௭. மேற்சொல்லியபடி சில சட்ட நிபந்தனைகளினால் ஊயபலத்தைப் பெற்றிருக்கிற அநுமேயங்கள் தரும சாஸ்திர அநுமேயங்களென்று சொல்லப்படுகின்றன. அப்படிப்பட்ட கற்பித பலத்தை உடைத்தாயிராமல், ஒருவிஷயத்தின் சங்கதிகளைப்பற்றிமாத்திரம் மனதில் இயற்கையாய் உண்டாகும் அநுமேயங்கள், சுபாவ அநுமேயங்களென்றாவது, சங்கதிகளைக்குறித்த அநுமேயங்களென்றாவது சொல்லப்படுகின்றன.

௪௮. தருமசாஸ்திர அநுமேயங்கள் சாதாரணமாய் நியாயத்தையும் நீதியையும் அநுசரித்து ஏற்பட்டவையாயிருந்தபோதிலும், அவை லோகநீதியையும் சவுக்கியத்தையும் நோக்கிக் கற்பிக்கப்பட்டவையாயிருக்கின்றன. மேற்படி திருஷ்டாந்தத்தில் கண்டதுபோலவே, நீடித்த கட

மான சங்கதிகளைக்குறித்து அடிக்கடி விசாரிக்கவேண்டிய சல்லியத்தை நிவர்த்திசெய்வதே அவற்றின் உத்தேசமாயிருக்கின்றது.

சக. தருமசாஸ்திராநுமேயங்கள் இரண்டுவகையாகப் பாகிக்கப்பட்டிருக்கின்றன. முதலாவது, தீர்மானமான அநுமேயங்கள்; இவற்றைத் தருமசாஸ்திரப்படி ஆக்ஷேபிக்கவும், சரியானதல்லவென்று ருசுப்படுத்தவுங்கூடாது. இரண்டாவது, எதிர்க்கக்கூடிய அநுமேயங்கள். இவைகளைப்பிரதிகூலமான சாக்ஷியத்தைக்கொண்டு தடுக்கக்கூடியதுமல்லாமல், யாதொரு விஷயத்திலும் இவை அபத்தமென்று நிரூபிக்கவுங்கூடும்.

ருo. வழக்குகளைக் கொண்டுவருகிறதைக்குறித்து ஏற்பட்டிருக்கிற காலவரையறைச் சட்டத்திலிருந்தெடுத்து மேலே உதகரிக்கப்பட்டிருக்கிற திருஷ்டாந்தமானது, தரும சாஸ்திரத்தின் தீர்மானமாகிய அநுமேயமாயிருக்கின்றது. இந்தியன் பீனல்கோட்டின்-அஉ-வது பிரிவில் மற்றொருதிருஷ்டாந்தம் கண்டிருக்கின்றது. ஏழுவயதுக்குள்பட்ட குழந்தை தண்டிக்கத்தக்க குற்றஞ்செய்யச் சக்தியற்றதென்று தீர்மானமான அநுமேயமுண்டாயிருக்கின்றது.

ருக. அதுபோலவே முத்திரைசகிதமான ஒரு பத்திரமானது, தகுமானதும் போதுமானதுமான பிரதிபலன் பெற்றுக்கொண்டு எழுதிக்கொடுக்கப்பட்டதென்று இங்கிலீஷ் தருமசாஸ்திரப்படித் தீர்மானமான அநுமேயமுண்டாகின்றது. மேலும் ஒரு ரசீதை எழுதிக் கையெழுத்துப்போட்டு முத்திரைவைத்துக்கொடுத்தால், அதற்குச் சரியாய்ப் பணஞ்செலுத்தப் பட்டதென்று கொள்ளப்படும். ஆனால் முத்திரைசகிதமான சாதனங்களுக்கு இந்து மகம்மதிய தர்மசாஸ்திரங்களின்படி அப்படிப்பட்ட கற்பிதமான பலம் எதுவுமுண்டாகமாட்டாது.

ருஉ. தருமான அதிகாரமுடைய கோர்ட்டாரால், மு டிவாய்த் தீர்ப்புச்செய்யப்பட்ட ஒரு விஷயம் சரியாகவே நிர்மாணிக்கப்பட்டதாய்த் தருமசாஸ்திரப்படிக் கொள்ள ப்படும். அதைக்குறித்து அந்தக் கக்ஷிகாரர்களேவேறொ ரு வியாச்சியத்தில் மறுபடியும் ஆக்ஷேபிக்க அந்தச் சாஸ் திரம் இடங்கொடாது. ஆயினுந் தீர்ப்புகளின் நிர்மான மான முடிவையுடைய சங்கதியை, விவகார சம்பந்தமான விதிதகங்களைக்குறித்துச் சொல்லப்படுமிடத்தில் பூர்ணமாய் யோசிக்கலாகும்.

ருங. பன்னிரண்டுவயதுக்கு மேற்பட்ட தெளிவான புத்தியையுடைய யாவர்களும் தருமசாஸ்திரம் தெரிந்தவ ர்களென்றே நிர்மானமான அனுமேயமுண்டாகும். (பீனல் கோட்டு-அங-வது பி.) வெகுவாய் அந்தச் சாஸ்திரம் அ வர்களுக்கு வாஸ்தவமாய்த் தெரியாமலிருந்தபோதிலும் அவர்கள் தங்களுக்குத் தெரியாதென்று வாதிப்பது அங்கீ காரமாகமாட்டாது.

ருச. (காரியர்) கூலிக்குச் சரக்குகளை எடுத்துக்கொ ண்டுபோகிற ஒருவன், அந்தச் சரக்குகளைத் தெய்வச்செய லினாலாவது, இராணியவர்களுடைய சத்துருக்களின் இரு த்தியத்தினாலாவது போக்கடிக்காமல் வேறுவிதமாய்ப் போக்கடித்த விஷயத்தில் அவைகளை அவன் தன் சொந்த அசாக்கிரதையினாலேயாவது, மோசத்தினாலேயாவது, அ வன் உடந்தையாயிருந்ததினாலேயாவது போக்கடித்துவி ட்டவனாய் இங்கிலீஷ் தருமசாஸ்திரப்படித் தீர்மானமா ய் எண்ணப்படுவான். "தன்னை வேலையில் நிச்சயித்து அ "மர்த்திக்கொண்டவனுடைய சரக்குகளைக் கூலிக்காகவா "வது, மற்றெந்தப் பிரயோசனத்தைப்பற்றியாவது ஓரிட "த்திலிருந்து மற்றோரிடத்துக்குக் கொண்டுபோகப் பூ "ண்டுகொள்ளுகிறவன்" (காமன் காரியர்) சாதாரணமான கூலிக்காரனென்று சொல்லப்படுவான். சாதாரணமான

கூலிக்காரனென்கிற இந்த வார்த்தையானது, புகைவண்டி
களின் சொந்தக்காரர்களுக்கும், கப்பலினெசமானர்களு
க்கும், புகைக்கப்பலினெசமானர்களுக்குங் கூட உபயோ
கமாகும். லா - லெக்ஸிகன - காரியர் - என்கிற விஷயம - ஸ்டோ-பெ-௪௮௮-பி. ஸ்மி-லீ-கே-௩-பு-௧௫௯-ப-காக்ஸ் எதிரி-பெர்ணர்ட்-வியாச்சியம்.

"தெய்வச்செயலென்பதற்கு, பெருங்காற்று அல்லது பு
"சல், இடி, ஜலப்பிரவாகம், பூகம்பம், முதலான மானிடச
"ம்பந்தத்தினால் நடக்கமாட்டாத காரியங்களென்று அர்
"த்தமாம். இராணியவர்களுடைய சத்துருக்களென்பத
"ற்கு, தேசத்தார் எவர்களோடு பகிரங்கமா யுத்தஞ்செ
"ய்துகொண்டிருக்கிறார்களோ அப்படிப்பட்ட பகிரங்
"கமான சத்துருக்களென்று பொருளாம். ஆகையால்
"விசேஷ சங்கியையுடையதைப்பற்றி எதிர்க்கக்கூடாத
"ஒரு கும்பு பறித்தால் அது மன்னிக்கத்தக்கதாகாது."
பெ-௪௧௫-பி.

௫௫. எதிர்க்கக்கூடிய தருமசாஸ்திர அநுமேயங்களில் நிரபராதத்தத்திற்கு அநுகூலமாயுண்டாகும் அநுமானம் மிகவும் பலமானதாயும் பிரசித்தமானதாயு மிருக்கிறதென்று தோன்றுகின்றது. குற்றவாளியென்று ருசுவாகிறவரையில் ஒவ்வொரு மனிதனுங் குற்றமற்றவனென்கிற அநுமேயமுண்டாகும். இந்த அநுமேயத்தின் பலத்தைப்பற்றியே எப்படிப்பட்ட காரியங்களை நடப்பிக்காமல் விட்டுவிடுவது குற்றமாயிருக்குமோ, அப்படிப்பட்டகாரியங்கள் நடந்வையாகவே அநுமேயமுண்டாயிருக்கும். அதெப்படியெனில், உல்லியம்ஸ்என்கிறவன் ஈஸ்டிந்தியா கம்பெனியார்பேரில் கொண்டுவந்த ஒரு வியாச்சியத்தில், வாதியானவன் தன்னுடைய கப்பலில் பிரதிவாதிகளின் காரியஸ்தன் நெருப்புப்பற்றத்தக்கவஸ்துவை வைத்ததாகவும், அந்தவஸ்துவின் குணமிப்படிப்பட்டதென்று சட்டப்படித் தனக்குத் தெரிவி

க்கவேண்டியிருக்க, அவன் அதைத் தனக்குத் தெரிவிக்காமலிருந்துவிட்டதாகவும், அதனுல் அந்தக்கப்பல் எரிந்துபோய்விட்டதாகவும், பிரியாதுசெய்தான். இந்த விஷயத்தில், பிரதிவாதிகளின் (ஏஜெண்ட)காரியஸ்தன் பேரில் குற்றமில்லையென்பதற்கு அநுகூலமாய், வாதிக்குக் கிரமப்படி அறிக்கை செய்யப்பட்டதென்று அநுமானிக்கப்பட்டது. அறிக்கைசெய்யப்படவில்லையென்று வாதி ருசுப்படுத்தமாட்டாதவனுயிருந்தபடியால், அவன் வழக்குத் தோற்றுப்போய் விட்டது. ஸ்டா-எருகூ-எருள. டெ-கூஅ-பி.

ருசு. மேலும், எல்லாக்காரியங்களும் சரியாயுங் கிரமமாயுஞ் செய்யப்பட்டவையாகவே கொள்வது தருமசாஸ்திரமுறைமையாம். கிரமவிரோதமாய் நடத்தப்பட்டவைகளாசத் தருமஸாஸ்திரப்படி அநுமேயமுண்டாகமாட்டாது. முதலில் இது, சர்க்காருத்தியோகஸ்தர்களின் உத்தியோககாரியங்களுக்கு உபயோகப்படுகின்றது. அந்தக்காரியங்கள் சரியாய் நிறைவேற்றப்படவில்லையென்று ருசுவாகிறவரையில் சரியாய் நிறைவேற்றப்பட்டவையாகவே எப்பொழுதுங் கொள்ளப்படும். நியாயவிசாரணைசெய்கிற கோர்ட்டாராலாவது, மேஜிஸ்திரேட்டு அதிகாரிகளாலாவது, செய்யப்பட்ட தீர்ப்புகள் சரியென்று நினைக்கிறவிஷயத்தில் இந்த அநுமேயம் சில சமயங்களில் முடிவானதாயிருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. அதைக்குறித்து இனி தெரிவிக்கப்படும். மேற்சொறித்த காரணத்தைப்பற்றியே நியாயவிசாரணைக் கோர்ட்டுகளின் சகல (ரிகார்ட்) கிரந்தங்களும், சட்டப்பிரகாரம் ஏற்படுத்தப்பட்ட சர்க்கார் (ரிஜஸ்டர்) பதிவு புத்தகங்களும் சரியானவைகளென்று கொள்ளப்படுகின்றன.

மேற்படி கருத்தையனுசரித்தே துர்நீதி, துர்நடத்தை, மோசம், இவைகளில் ஏதாவது நடந்ததாகத் தருமசாஸ்திரப்படி அநுமேயமுண்டாகமாட்டாது.

அல்லாமலும், சில விஷயங்களில் அவரவர்கள் சொந்தமாய் நடத்துகிற விவகாரங்களிலும், மேற்படி சித்தாந்தம் உபயோகப் படுத்தப்படுகின்றது. அப்பிரகாரமே (உ0உ-பி.) சில சந்தர்ப்பங்களில் முத்திரை சகிதமான பூர்வீக பத்திரம் அல்லது மரணசாசனம் கிரமமாய் எழுதிக்கொடுக்கப்பட்டதென்றும், பூர்வகாலத்துக் கடிதங்கள், பதிவுகள், ரசீதுகள் முதலியவை, யதார்த்தமானவை அல்லது சுத்தமானவையென்றும் தரும சாஸ்திரப்படி நிர்மாணமான அநுமேய முண்டாகின்றது. (ட-எச-பி.) இது போலவே, கஸ்டம் அவுசென்னுஞ் சுங்கச் சாவடிக் கணக்கில் பதிவா யிருக்கவேண்டியவையாகிய ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகள் கிரமப்படி கணக்கில் பதிவு செய்யப்பட்டவையாகவே கொள்ளப்படுகின்றன. (ஸ்டா- எ௫எ.) இந்த அநுமேயத்திற்கும் விரபாரதத்திற்கு அநுகுணமாயுண்டாகிற அநுமேயத்திற்கும் எவ்வளவு சாமீப சம்பந்தமுண்டாயிருக்கின்றதோ அது மேற்சொல்லப்பட்ட விஷயங்களினாலே தெரியவருகின்றது.

௫எ. இங்கிலீஷ் தரும சாஸ்திரப்படி ஒரு (பில் ஆப்-எக்ஸ்சேஞ்ஜ்.) உண்டியாவது (பிராமிஸ்ஸொரிநோட்) வெங்ஙிலைக் கடன்பத்திரமாவது தகுமானதும் போதுமானதுமான பிரதிபலனைப் பெற்றுக்கொண்டு எழுதிக்கொடுக்கப்பட்டதென்று முதலில் அநுமானிக்கவேண்டியதே யல்லாமல் நிர்மானமாய்க் கொள்ளக்கூடாது. ஆயினும் அது அந்தப்படி பிரதிபலனைப் பெற்றுக்கொண்டு எழுதிக் கொடுக்கப்படவில்லையென்று ருசுவும் படுத்தலாம். இவ்வளவு வரையில் மேலே சொல்லப்பட்ட அநுமேயத்தை இந்தியாவில் வழங்கப்படுகிற உண்டிகளுக்கும் மற்ற விதமான பில் ஆப்-எக்ஸ்சேஞ்ஜ் முதலியவைகளுக்கும் உபயோகப்படுத்துவதினால் கெடுதி ஒன்றுமில்லையென்று தோன்றுகின்றது.

௫௮. கார்ப்பண்ணிய விஷயமாய்க் கொள்ளப்படுகிற அநுமேயத்தைக்குறித்து லார்ட்டு மான்ஸ்பீல்ட் என்பவர் (பரோ ரிபோர்ட்ஸ் - ௫ - பு - ௨௯௯௱-ப.) விதித்திருக்கிற தென்னவென்றால் "குற்றம் அல்லது குற்றமல்ல "வென்கிற வித்தியாச மில்லாமலே ஒருகாரியம் செய்யப் "பட்டதாயிருந்து ஒரு முக்கியமான உத்தேசத்தோடு செ "ய்யப்பட்டிருக்கிறபட்சத்தில் குற்றமாகுமாயின் அப்பொ "ழுது அந்த உத்தேசம் ருசுப்படுத்தப்பட்டுத் தீர்மானிக்கப் "படவேண்டும். அப்படிக்கில்லாமல் அந்தக்காரியம் தனக் "குத்தானே அநியாயமானதா யிருக்கிற பட்சத்தில் அஃ "தாவது பார்க்கச்சே அநியாயமானதாயும், விலகரிக்கப்ப "டாமையினால் அநியாயமானதாயுமிருக்கிற விஷயத்தில் "அது சரியானதென்றாவது அல்லது அதற்கு முகாந்திரம் "உண்டென்றாவது ருசுப்படுத்தவேண்டியபாரம் பிரதிவா "தியின் பொருப்பா யிருக்கின்றது. அப்படி அவன் ருசு "ப்படுத்தத் தப்பிப்போனால் அவன் குற்றமுள்ள உத்தேச "த்தை உடையவனா யிருந்தானென்றுத் தருமசாஸ்திரப்படி "தெளிவாகும்." அப்படியே "ஊழியக்காரர்களுடைய "யோக்கியதா பத்திரிகைகள், அந்தரங்கமாய்ப் புத்திசொ "ல்வது, ஆலோசனை கேட்கிறவர்களுக்காயினும் அதைப் "பெறும்படியான பாத்தியதை யுள்ளவர்களுக்காயினும் "தெரிவித்த சமாச்சாரங்கள், இவைபோன்ற விஷயங்க "ளில்நூ ஷணைக்காகக் கொண்டுவரப்படும் வழக்குகளில் அ "ப்படி தூஷணையைப் பேசினதற்காவது எழுதினதற் "காவது சொல்லும் காரணம் பிரத்தியக்ஷமாய் மன்னிக்க "த்தக்கதாயிருந்தால் வாஸ்தவமாய்க் கார்ப்பண்ணிய மு "ண்டாயிருந்ததாக வாதி ருசுப்படுத்தவேண்டும்." டவுலிங், ரைலெண்ட், ரிபோர்ட்-௯-பு-௧௦௧-ப-புருமேஜ்-எதிரி-புரோஸர் வியாச்சியத்தில் ஜட்ஜி பெயிலிசொன்னது.

ஆகையால் செய்தகாரியம் தனக்குத்தானே அநியாயமானதாயும் நியாய மேவுதல் செய்யக் கூடாததாயும்

இருந்தபோதுமாத்திரம் கார்ப்பண்ணிய முண்டாயிருக்கி றதாகக் கொள்ளப்படுமேயொழிய, மற்ற விஷயங்களி லெல்லாம் அதை ருசுப்படுத்தவேண்டியதாயிருக்கும். எப் படியெனில் "கொலையைக்குறித்த ஒவ்வொரு பிரியாதுவி "ஷயத்திலும் சித்தமாய் அந்நியாயமானதெனக் காணப்ப "டுகிற கொலைச்சங்கதி முதலில் ருசுப்படுத்தப்பட்டு, பின் "பு அக்குற்றம் நடந்தது தற்செயலினுலேயோ, ஆவசியம் "நேரிட்டமையினுலேயோ, பலஹீனத்தினுலேயோ இந்தச் "சங்கதிகளெல்லாம் காவலாளியின்பேரில் கொண்டுவரப் "படுகிற சாக்ஷியத்தினுல் வெளிப்படாமற் போனுல் காவ "லாளியே அவைகளைத் திருப்திகரமாய் ருசுப்படுத்தவே "ண்டும். ஏனென்றல் கார்ப்பண்ணியமில்லையென்று ரு "சுப்படுத்துகிறவனாயில் அந்தக்காரியம் கார்ப்பண்ணிய "த்தினுல் நடப்பிக்கப்பட்டதாகவே தரும சாஸ்திரப்படி "அநுமேய முண்டாகின்றது." ரா-உ௦-ப-ல்-குறிப்பிட்ட ஜட்ஜி பாஸ்டருடைய அபிப்பிராயம்.

கார்ப்பண்ணியமென்பது தரும சாஸ்திரப்படி யாவ னெருரு மனிதன்பேரிலிருக்குந் துவேஷத்தைத் தெரிவி க்கிறதாக அர்த்தம் செய்யக்கூடாது. எந்தக்காரியத்தி னுல் ஒருவன் துன்பமடைவானே அந்தக்காரியமான து அவன்பேரில் துவேஷமில்லாமலே உத்தேசித்துச்செய் யப்பட்டு மேவுதல் செய்யப்படக்கூடாததாயிருந்தால் அதற்குக் கார்ப்பண்ணியமென்கிறபதம் உபயோகிக்கப் படுகின்றது. எப்படியெனில், ஒருமனிதன் A என்கிற வனைக் கொல்ல உத்தேசித்து-B-என்கிறவனைக் கொன்றல் அவன் கார்ப்பண்ணியத்தோடு கொலைசெய்த குற்றவாளி யாகிறன். ஒருவனுக்காகவைக்கப்பட்டிருந்த விஷத்தை மற்றெருருவன் வாங்கிக்கொண்டால் அதுவும், மேற்சொல் லியபடி கொலையாகும். பெ-சகக-பி. பீ-கோ-கூ௦௧-பி.

௫௬. யுக்தமான வயசும் தெளிவான புத்தியுமுள்ள ஒ ரு மனிதன், தான்செய்கிற செய்கையினுல் சகஜமாய் இன்

னது நடக்குமென்றாவது, இன்னது நடக்கலாமென்றாவது, உத்தேசித்தே செய்ததாகத் தருமசாஸ்திரப்படி அநுமேயமுண்டாகும். ஆதலால், கொலையை உண்டுபண்ணத்தக்க ஒரு ஆயுதத்தை எவனாவது யோசனையாயும், கடுமையாயும், பிரயோகித்தால் அவன் கொலைசெய்ய உத்தேசித்திருந்ததாக அநுமேயமுண்டாகும். எந்தெந்த விஷயங்களில் ஒரு காரியத்தைச்செய்கிறதினால் மோசம் சம்பவிக்கலாமோ அந்தந்த விஷயங்களில் மோசஞ் செய்யவேண்டுமென்கிற உத்தேசம் இருந்ததாகவே கொள்ளப்படும். டெ-௬அ-௭க. ரா-௨க.

௲ ஏழு வயசுக்குமேற்பட்டுப் பன்னிரண்டுவயசுக்கு உட்பட்ட குழந்தையானது குற்றஞ்செய்வதற்குச் சக்தியுள்ளதல்லவென்று தரும சாஸ்திரப்படி அநுமேய முண்டாகின்றது. ஆயினும், கிருத்தியம் நடந்த சமயத்தில் அந்தக் குழந்தையானது "தான்செய்த காரியம் இப்படிப்பட்டதென்றும், அதனால் இன்னது உண்டாகுமென்றும், "யோசிக்கத்தக்க பரிபக்குவபுத்தி யுடையதாக" ருசுச்செய்வதினால் மேற்சொல்லிய அநுமேயம் அடிபட்டுப்போகும். பீ-கோ-அ௩-பி.

௬0. குடிக்கூலிக்கிருக்கிறவன் குடிக்கூலி செலுத்திச் சொந்தக்காரனிடத்தில் ரசீது பெற்றுக்கொண்டால், அதற்குமுன் குடிக்கூலி எவ்வளவும் அவன்பேரில் பாக்கியில்லையென்று அநுமேயம் உண்டாகின்றது. பெ-௩௧0-பி.

௬௧. கலியாணம் செய்துகொண்டு வாழும்போது பிறந்த குழந்தை குலசம்பவனாகத் தர்மசாஸ்திரப்படிக் கொள்ளப்படும். அக்குழந்தையின் தாய்தந்தைகளுக்குப் புணர்ச்சிச் சம்பந்தமுண்டாயிருக்கவில்லையென்று ருசுச்செய்வதனால் அவ்வநுமேயம் அடிபட்டுப்போகும். பெ-௩௩0-பி.

கூஉ. மனிதர்களுக்குச் சாதாரணமா யிருக்கவேண்டிய சக்தி சாமர்த்தியங்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டா யிருக்கின்றனவாகத் தருமசாஸ்திரப்படிக்கொள்ளப்படும். ஆதலால், பிறப்பிலேயே ஊபத்தியம், புத்திமாருட்டம், செவிடு, இந்திரியக்குறைவு, முதலிய சரீரசம்பந்தமான குறைவுகளுண்டாயிருப்பனவாக எவ்வளவும் அநுமானிக் கப்படாது. பெ-ஙு-அ௦-பி.

கூங. தாயாவது, தகப்பனாவது, தன்குழந்தைக்குக் கொடுக்கும் பணம் தானமாய்க் கொடுத்ததாகக் கொள்ள வேண்டியதேயொழிய கடனாகக் கொடுத்ததாய் எண்ணப் படாது. (பெ-ங-அங-பி.) ஏனென்றால், அப்படிக் கொடுக் கும் விஷயங்களில் இயற்கையாயுண்டாகிற அன்பே தகுந் ததும், போதுமானதுமான பிரதிபலனாக எண்ணப்படும்.

கூச. வேறே யாருக்காயினும் பணங் கொடுக்கப்பட் டால் அது முன்வாங்கியிருந்த கடனுக்குச் செல்லாகக் கொடுக்கப்பட்டதா யெண்ணப்படும். பெ-ங-அச-பி.

கூரு. காரியங்கள் முன்னிருந்த ஸ்திதியிலேயே இருப் பனவாகத் தர்மசாஸ்திரப்படி அநுமேயம்உண்டாகும். எ ப்படியெனில், ஒருவன் ஒரு ஆஸ்தியைத்தன்சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருந்தாலும், ஒரு அலுவலிலிருந்தாலும், அவன் அந்தப்படியே இருக்கிறானென்று எண்ணப்படும். அப்படியே, ஒருவனுக்குப் புத்திமாருட்டம் முன்னமே உண்டாயிருந்ததாகத் தெரியவருகிறபட்சத்தில், அந்த வியாதி அதேரீதியாயிருப்பதாக எண்ணப்படும். அப்படி யில்லாமலிருந்தால் அதை ருசுப்படுத்தலாம். ஒருவன்கட னாளியாயிருந்தால் அந்தக்கடன் செலுத்தப்பட்டதென்று வது,அதற்காகவியாச்சியம் கொண்டுவரவேண்டிய காலங் கடந்துபோய்விட்டதென்றுவது, ருசுவாகிறவரைக்கும், அல்லது, கடன் தீர்ந்ததாகவாவது ருணவிமுகத்தனுதாக வாவது, நடந்திருக்கிற சங்கதிகளினால் ஊகிக்கப்படுகிற

வரைக்கும் அந்தக் கடன் நிராமலிருப்பதாகவே எண்ணப்படும். பெ-ங-கஙூ-பி.

கூசு. இந்தக் கோட்பாட்டின்படியே, ஒருகாலத்தில் உயிரோடிருந்த ஒருவன் இன்னமும் உயிரோடிருக்கிறானென்றே தர்மசாஸ்திரப்படி எண்ணப்படுவான். இங்கிலாண்டுதேசத்திலோ, எவனுவது தேசாந்தரம்போய் ஏழு வருஷம்வரைக்கும் அவனைக்குறித்து யாதொருசெய்தியும் தெரியாதிருந்தால், அவன் விஷயத்தில் அப்படிப்பட்டஅநுமேயமுண்டாகமாட்டாது. ஏனென்றால், ஏழுவருஷமான உடனே அவன் இறந்துபோனானென்றே எண்ணப்படும். ஆனால், அவனிறந்தது ஏழுவருஷங்களின் துவக்கத்திலோ, நடுவிலோ, முடிவிலோ வென்கிற சங்கதியைக்குறித்துயாதொரு அநுமேயமுமுண்டாகமாட்டாது. பெ-ங-கஙு-பி.

சிலவிஷயங்களில் ஒரு மனிதன் ஏழு வருஷம் முடிவதற்கு முன்னமே இறந்துவிட்டானென்று சில விசேஷமான ஏதுக்களைப்பற்றி ஊகிக்கப்படலாம். அவன் ஒரு கப்பலில்இங்கிலாண்டு தேசத்தை விட்டு வெஸ்டு இந்தியாவுக்குப் புறப்பட்டுப்போனதில், அந்தக்கப்பல் மூன்று வருஷ காலமாய்க் காணமற்போனதினாலே உண்டாகிற அநுமானம் இதற்குத் திருஷ்டாந்தமாம். ரா-உக.

கூஎ. ஒருவன் தன் வியாச்சியத்தின் உண்மையை வெளிப்படுத்தத்தக்க சாக்ஷியத்தைக் கொண்டுவராமல் அக்கிரமமாய் மறுத்தால் அதினாலே அவனுக்கு மிகவும் பிரதிகூலமாய் தரும சாஸ்திரப்படி அநுமேயமுண்டாகும். இதற்குத் திருஷ்டாந்தம் ஸ்மித்ஸ் லீடிங்கேஸெஸ் - க-பு-உடுகூ-வது பக்கத்தில் கண்ட ஆர்மோரி என்பவன் வாதியாயும், டிலாமிரியென்பவன் பிரதிவாதியாயுமிருந்த வியாச்சியம். அதில் வாதியாகிய ஓரெளிய சிறுவன் விலைபெற்ற ஒரு நகையைக் கண்டெடுத்து அதின் விலையைத் தெரிந்துகொள்வதற்காகப் பிரதிவாதியாகிய ஒரு தட்டானி

டத்திற்குக் கொண்டுபோனான். வாதி அதை மறுபடியுங் கேட்டதின்பேரில் பிரதிவாதியினுடைய வேலைக்காரன் அதிலிருந்த ரத்தினங்களைப் பேர்த்துக்கொண்டு ரத்தினங்களில்லாத ஒம்மச்சை மாத்திரம் வாதியினிடத்தில் கொடுத்தான். அதன்பேரில் அந்த ரத்தினங்களுக்காக வாதி வழக்கிட்டான். இந்த விஷயத்தில் பிரதிவாதியினுடைய வேலைக்காரன் அந்த ரத்தினங்களை அக்கிரமமாய் வைத்துக் கொண்டிருந்ததனால் அவற்றைப்பார்த்து அவற்றின் விலையை நிச்சயிக்கக் கூடாமற்போய்விட்டபடியால், வாதிபட்சந்திர்ப்புச்சொல்வதில் எவ்வளவு உயர்ந்த விலையுள்ள ரத்தினங்கள் அந்த ஒம்மச்சுக்குச் சரியானவையாயிருக்குமோ அவ்வளவு உயர்ந்த விலையுள்ளவைகளாயிருந்தனவாக எண்ணவேண்டியதென்று முதன்மையான நியாயாதிபதி ஜூரிகளுக்குத் தெரிவித்தார். அந்தச் சித்தாந்தப்படிக்கே, கடிதமுதலிய லிகிதமூலமான சாக்ஷியத்தைக் கொண்டுவரச்சொல்லிக் கிரமமாய் அறிக்கை கொடுக்கப்பட்டபின்பு அவற்றைக்கொண்டு வராமல் அக்கிரமமாய் மறித்தாலும் அழித்துவிட்டாலும் அவை மறித்தவனுக்குப் பிரதிகூலமாயிருப்பனவாகக் கொள்ளப்படும். ஸ்மி-லீ-கே-௧-பு-௨௬௧-ப.

௬அ. ஆனால் சாக்ஷியத்தை அக்கிரமமாய் அழிக்கிறவன் அல்லது மறைப்பவனுக்கு அப்படி அழிக்கிறதினாலாவது மறைப்பதினாலாவது தர்மசாஸ்திரப்படி பிரதிகூலம்ான பலத்த அநுமேயமுண்டானபோதிலும், சாக்ஷியத்தை புண்டுபண்ணுவதினால் தர்மசாஸ்திரப்படி எவ்வித அநுமேயமுமுண்டாகமாட்டாது. ஆயினும் சங்கதியைக்குறித்த அநுமேய முண்டாகலாம். அதற்குத் தர்மசாஸ்திரத்தினால் கற்பித பலம் எதுவு முண்டாகமாட்டாது.

௬௧. கிரிமினல் விஷயங்களில் காவலாளிக்குப் பிரதிகூலமாகச் சங்கதியைக்குறித்த இந்த அநுமேய முண்

டாக்குவதில் மிகவும் ஜாக்கிரதையாகவே இருக்கவேண்டும். ஏனென்றால் குற்றமற்றவனும் தன்னைக் காத்துக்கொள்ளும் பொருட்டுச் சாக்ஷியத்தை யுண்டுபண்ணுகிறதுண்டு. இந்த விஷயத்தைக்குறித்து லார்ட் கோக்கு என்பவர் இதனடியில் எழுதியிருக்கிற திருஷ்டாந்தத்தைச் சொன்னார் ஒரு சிறுபெண்ணானவள் தன் சிற்றப்பனுடைய சம்ரக்ஷணையிலிருந்தாள். அவன் அவளுக்குப்பின் அவளுடைய ஆஸ்தியை யடையத்தக்க பாத்தியஸ்தனாயுமிருந்தான். ஒருநாள் அவள்செய்த ஏதோ ஒரு தப்பிதத்துக்காக அவன் அவளை அடித்தபோது அவள் "தயையுள்ள சிறியதகப்பனே என்னைக் கொல்லாதேயும்" என்று கூவினது கேட்கவந்தது. அதன்பின்பு அவள் காணப்படவில்லை. அஸ்ஸைஸ ஜட்ஜிகள் அந்தச் சிறுபெண்ணை ஆஜர் செய்யும்படி அச்சிறியதகப்பனைக் கேட்டபோது அவன் அந்தச் சிறுபெண்ணைப்போலே மற்றொருத்திக்கு வேஷம் போட்டுக் கொண்டுவந்து நிறுத்தினான்; ஆனால் இந்தத் தந்திரம் வெளிப்பட்டதின்பேரில் இந்தச் சங்கதிகளினால் குற்றஞ் செய்யப்பட்டதென்று உண்டாகிய அநுமேயத்தைப்பற்றி அவன் குற்றஞ்செய்தவனென்று நிர்மாணித்து அவனைத் தூக்கிவிட்டார்கள். பின்பு அந்தப் பெண் மறுபடி வெளிப்பட்டுவந்து தான் தன் சிறியதகப்பன் வீட்டைவிட்டு ஓடிப்போயிருந்ததாய்ச் சொன்னாள். கொ-இ-ந-பு-கo௪-அத்.

எo. "இந்துக்களுடைய குடும்பங்களின் ஏற்பாட்டை "ப்பற்றி அதுகள் விபக்தமானவையென்று ஸ்தாபிக்கப் "படுகிறவரையில் அவைகள் அவிபக்தமாயிருக்கின்றனவாக "கவே அநுமேயமுண்டாகின்றது. ஆகையால் குடும்பம் 'விபக்தமாச்சுதென்று எவன்சொல்லுகின்றானோ அவனே "அந்தச் சங்கதியை ருசுச்செய்யவேண்டிய பொருப்புடைய "பவனாயிருக்கிறான்". "ஒரு குடும்பம் விபக்தமாச்சுதென்று" சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தினால் "ஸ்தாபிக்க

"வேண்டியதற்கு அந்தக் குடும்பம் விபக்தமான ஸ்திதியிலி "ருக்கிறதேயல்லாது கூறேர்த ஸ்திதியிலாவது இருக்கிற "தாகச் சொல்லக்கூடாமையான தன்மையுள்ள சங்கதிக "ளைருசுச்செய்யவேண்டியதவசியம்." கஅருருவரு வி-அ-ந-கூரு-ல்-ச-கோ-ர்-கஅருருவரு டிசம்பர் ருஉ செய்த தீர்ப்பு.

அவிபக்தமாயிருக்கிற ஒரு இந்துக் குடும்பச் சொத்துக் களிலெல்லாம் அந்தக் குடும்பஸ்தர்கள் யாவருக்கும் பாக முண்டென்று இந்து தர்மசாஸ்திரப்படி அநுமேயமுண் டாகின்றது. அப்படிப்பட்ட குடும்பத்தைச்சார்ந்த எவனு வது தனியாகச் சொத்துக்களைச் சம்பாதித்ததினால் அது கள் தனக்குக் கிடைக்கவேண்டுமென்று தாவாசெய்தால் அவனே அந்தச் சங்கதியை ருசுப்படுத்தவேண்டும். மா-டை-அ-வி- "சாட்சிய விஷயம்" க00-றா-வி- "சாட்சிய விஷயம்" ரு.எ. கஅரு0வரு செப்டம்பர் ௲0உ க-ச-தி-அ-கோ-ரால் தீர்க்கப்பட்ட வியாச்சிய விஷயங்கள்-ருருரு-பக்கத்தில் பார்த்துக்கொள்க.

இதுபோலவே அவிபக்த சகோதரர்களால் நடத்தப்ப டும் வியாபாரமானது கூட்டுவியாபாரமாகக் கொள்ளப் படும். மா-டை-அ-வி- "சாட்சிவிஷயம்" கஉ; ஆனால் கஅருருவரு டிசம்பர் ருஉ உள்ள கஅருருவரு வி-அ-ந-கக-ச-கோ- தீர்ப்பைப் பார்த்துக்கொள்க.

எக. சுவீகாரம் நடந்திருக்கிறதாக இந்து தர்மசாஸ் திரப்படி அநுமேயமுண்டாகமாட்டாது. அந்தச் சுவீகா ரமானது மோசமாய் நடந்திருப்பதாக எவ்வளவாயினும் சந்தேகத்துக் கிடமில்லாததாயும், அது நடந்திருக்குமா வென்று சந்தேகிப்பதற்கு இடமில்லாமலிருக்கும்படி ஒற் றுமையுள்ளதாயும் நம்புமபடியான தன்மையுள்ளதாயும் இருக்கிற சாக்ஷியத்தைக்கொண்டு ருசுச்செய்யப்படவே ண்டும். மா-டை-அ-வி-சாட்சியவிஷயம்-சு-எ.

எ௨. ஒருவன் பன்னிரண்டுவருஷம் காணாமலிருந்து அவனைக்குறித்து யாதொன்றுங் கேள்வியாகாமலிருந்தால் அவனிறந்துவிட்டானென்று இந்து தர்மசாஸ்திரப்படி அநுமேயமுண்டாகின்றது. (மா-டை-அ-வி- சாட்சியவிஷயம்-க) காசிபட்டணத்திலோ இந்தக்கெடு பதினைந்து வருஷமாக ஏற்பட்டிருக்கின்றது. அதற்கு அதிககாலமாகவும் இருக்கலாம். மா-டை-அ-வி-சாட்சிய விஷயம்-க0-உ-குறிப்போடு.

எ௩. காணமற்போன மனிதன் பிறந்ததுமுதல் அவனுக்கு கூ0-வருஷமாயிருந்தால், அவன் கடைசிதடவையில் ஐந்துவருஷத்திற்குள்ளே பார்க்கப்பட்டிருந்தபோதிலும், இறந்துபோனவனாகவே மகம்மதிய தர்மசாஸ்திரப்படி அநுமேயமுண்டாகின்றது. ம-சி-புரோ-உகக. மா-டை-அ-வி-சாட்சிவிஷயம்-உ0.

எச. ஸ்திரீ புருஷர்கள் கூடி இடைவிடாமல் சம்சாரஞ்செய்துகொண்டிருப்பது, அவர்கள் விவாகம் செய்துகொண்டவர்களென்பதற்கும், ஒரு குழந்தை தன்னுடைய தாய்தந்தை இன்னாரென்று ஒப்புக்கொள்ளுவது அந்தக் குழந்தை ஔரஸ ரீதியாய்ப் பிறந்ததென்பதற்கும் மஹம்மதிய சாஸ்திரப்படி போதுமான அநுமேய சாக்ஷியமாயிருக்கின்றன. மா-டை-அ-வி-சாட்சிவிஷயம்-கக-கள-கஎ-ம், ச-குறிப்புடன்-கச-ம்.

எரு. மேற்குறித்த இந்து மஹம்மதிய தர்மசாஸ்திரங்களின் அநுமேயங்களெல்லாம் எதிர்க்கத்தக்கவைகளாயிருக்கின்றன.

எசு. உலகசுபாவத்தின் கிரமத்தைப்பற்றியும் மனிதர்களுடைய காரியங்களைப்பற்றியும் நமக்குண்டாகிற சாதாரணமான அநுபவத்தினால் சுபாவ அநுமேயங்கள் அல்லது சங்கதிகளைக்குறித்த அநுமேயங்கள் உண்டாகின்றன. அவைகளுக்குத் தர்மசாஸ்திரத்தினால் எவ்விதமான கற்பித பலமும் ஏற்றமும் உண்டாகமாட்டாது. மேலும்

அவைகள் மனிதர்களுடைய காரியங்களும் நடவடிக்கைக ளும் எப்படி பலவகைப்பட்டவையாயும் ஏராளமானவை யாயும் இருக்கின்றனவோ அப்படியே யிருக்கின்றன

௭௭. குற்றச் செய்கையின்பலன், அஃதாவது திருடப் பட்ட பொருளையொத்தது புதிதாய் ஒருவனுடைய சுவாதீ னத்தில் இருந்தால் அவன் குற்றஞ் செய்தானென்கிற அநு மேயத்தைச் சில கிரந்தகர்த்தர்கள் தர்மசாஸ்திரீய அநு மேயமென்கிற வகுப்பில் சேர்த்திருக்கின்றார்கள் ஆயி னும் ஒருவிஷயத்தின் சங்கதிகளைப்பற்றி அந்த அநுமேய த்துக்கு நியாயமாய் எவ்வளவு பலமுண்டாகுமோ அதை ப்பார்க்கிலும் அதிகமான கற்பிதபலம் தர்மசாஸ்திரத் தால் அதற்கு உண்டாக்கப்பட்டிருக்கவில்லை. ஆனால் ஸ்டார்க்கி என்கிறவர் இதைச் சங்கதிகளைக்குறித்த அநு மேயமென்றே யோசித்தது சரியென்று தோன்றுகிறது இந்த அநுமேயத்தைக்குறித்து-௧௦௮-வது பிரிவில் சங்கதி களைக்குறித்த சாக்ஷியத்தைப்பற்றிப் பேசுமிடத்தில் மிக வும் விரிவா யோசிக்கப்படும்.

௭௮. எதிர்க்கத்தக்க அநுமேயமானது பிரத்தியக்ஷ சாக்ஷியத்தினுல்மட்டுமல்லாமல் அநுமேய சாக்ஷியத்தினு லும் அல்லது சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தினுலும் பரி கரிக்கப்படலாம். இதனுலேயே சில விஷயங்களில் பொ ருந்தாத அநுமேயங்கள் உண்டாகின்றன.

௭௯. பொருந்தாத அநுமேயங்களின் பலாபலத்தைக் குறித்து யோசிக்குமிடத்தில் விசேஷ அநுமேயங்கள் அஃ தாவது ஒரு விஷயத்தின் முக்கியமான சங்கதிகளினுல் உண்டாகிற அநுமேயங்கள் பொதுவான அநுமேயங்களை விலக்கிப்போடுமென்கிறது முதலாவது பொதுவிதியாயி ருக்கின்றது. எப்படியெனில், ஒருவன் குற்றவாளியென் று ருசுவாகிறவரையில் குற்றமற்றவனென்று கொள்ளப் படுவானென்கிற பொதுவான அநுமேயமானது, கொலை

ண்டுபண்ணத்தக்க ஒரு ஆயுதத்தைக் கையாடுவதினால் கார்ப்பண்ணிய மிருந்ததென்று உண்டாகும விசேஷமான அநுமேயத்தினால் விலக்கப்படலாம். பெ-கூ-ப-பி.

அ0. சாமானியமான பிரகிருதி சுபாவத்தைப்பற்றி யுண்டாகும் அநுமேயங்கள் மிகவும் பலிஷ்டமானவைகளாக எண்ணப்பட்டிருக்கின்றன. ஸ்திரீயைக் கெடுப்பது முதலிய பலாத்காரமாகச் செய்யப்படுங் குற்றங்களைச் செய்ததற்கு குற்றஞ்சாட்டப்பட்டவர்களின் வயதையும், பலத்தையும் யோசிப்பதினாலுண்டாகின்ற அநுமேயங்கள் மேற்கண்ட வகையிற் சேர்ந்தவையாம். பெ-கூஉக-பி.

அக. கடைசியாய், ஒருவன் குற்றமற்றவனென்று கொள்ளும் அநுமேயத்திற்குத் தர்மசாஸ்திரம் அநுகுணமாயிருக்கின்றது. பெ-கூஉகூ-பி.

## சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம்.

அஉ. விவாதத்திலிருக்கிற ஒருசங்கதியானது, கண்ணினாற்கண்ட சாக்ஷிகளால் ருஜுச்செய்யப்படுமானால் அப்படிப்பட்ட சாக்ஷியம் பிரத்தியக்ஷ சாக்ஷியமென்றாவது, அடுத்தசாக்ஷியமென்றாவது, ரூடியான சாக்ஷியமென்றாவது, சொல்லப்படும். ஆனால், விவாதத்திலிருக்கிற சங்கதியானது கண்ணாற்கண்டவர்களுடைய சாக்ஷியத்தினால் ருஜுச் செய்யப்படக் கூடாமற்போனால் அதற்கு முன்னாவது, தொடர்ந்தாவது, பின்னிட்டாவது வழக்கமாய் நடக்கும் சங்கதிகளைக்கொண்டு கொஞ்சம் ஏறக்குறைய நிதானிக்கப்படலாம். அதற்குத் திருஷ்டாந்தம், காயங்கள் பட்டு இரத்தம் வடிந்துகொண்டிருக்கிற ஒரு பிணம் கண்டுபிடிக்கப்பட்டு, அதிலுள்ள காயங்களைப்பார்க்க, அவைகளுள்ள ஸ்தானத்தினாலும், அவைகளின் சுபாவத்தினாலும், அவை தற்செயலா யுண்டானவையாயாவது, மரணமடைந்தவனே உண்டுபண்ணிக் கொண்டவையாயாவது, இருக்கக் கூடாதபக்ஷத்தில் கொலைசெய்யப்பட்டதென்கிற சங்க

தி ஷுகிக்கப்படலாம், அல்லது அநுமானிக்கப்படலாம். மேலும், அந்தக் கொலையைச்செய்தவனுக்கு மரணமடைந்தவன் பேரிலிருந்த விரோதத்தைப்பற்றி முதலில் அவன் மேல் சந்தேகமுண்டாகிப் பின்பு அவன் அந்தவிடத்திலெ றிந்துபோன கத்தியினுலாவது, வேறே யாதொரு வஸ்து வினுலாவது, அவன் கால்டிக் குறிப்புகளினுலாவது, பூமியி ல்காணப்படுகிற மற்ற அடையாளங்களினுலாவது, கொலை செய்தவனவனேயென்று நிச்சயிக்கப்படலாம். விவாத த்திலிருக்கிற ஒரு அம்சம் எந்தச்சங்கதிகளைக்கொண்டு ஷுகிக்க அல்லது நிதானிக்கக்கூடுமோ அப்படிப்பட்ட சங்கதிகளைக்குறித்த சாக்ஷியமானது சங்கதிகளைக்குறி த்த சாக்ஷியமென்றாவது, அப்பிரத்தியக்ஷமான சாக்ஷிய மென்றாவது, கௌணசாக்ஷியமென்றாவது, அநுமேய சா க்ஷியமென்றாவது சொல்லப்படுகின்றது. அப்படிப்பட்ட சங்கதிகளே சங்கதிகளைக்குறித்த சாக்ஷியமாய் ஏற்படுகின் றனவென்றும் அந்தச் சங்கதிகள் எந்தச் சாக்ஷியத்தினால் ருசுச் செய்யப்படுகின்றனவோ அந்தச் சாக்ஷியம் சுபாவ மாகவே பிரத்தியக்ஷமானதாயிருக்கின்றதென்றும் சொல் வது மிகவும் சரியாயிருக்கும். வி-ச-ஏ-கசு-பார்த்துக் கொள்க.

அரு. அப்படிப்பட்ட சங்கதிகள் விவாதத்திலிருக்கும் முக்கியமான சங்கதியை ஸ்தாபிக்கத்தக்க தாழ்ந்த சங்க திகளாயிருக்கின்றன. அந்தத் தாழ்ந்த சங்கதிகள் சாக்ஷி யத்தைப்பற்றிய சாதாரணமான விதிகளின்படி ருசுச்செ ய்யப்படவேண்டும். அதாவது, ஒரு முக்கியமான சங்கதி யை ருசுச்செய்வதற்கு எந்தச் சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப் படமாட்டாதோ அந்தச் சாக்ஷியம் ஒரு தாழ்ந்தசங்கதி யை ருசுச்செய்வதற்கும் சாதாரணமாய் ஏற்றுக்கொள்ள ப்படமாட்டாது. எப்படியெனில் (விசேஷமான பிரமே யங்களில் தவிர) தாழ்ந்த சங்கதியாவது விஷயமாவது

ஹியர்சே) சுருத சாக்ஷியத்தினுல் ஸ்தாபிக்கப்படக்கூடாது. கா-௨௩௩-பி.

௮௪. சங்கதிகளைப்பற்றியாவது விஷயங்களைப்பற்றியாவது உண்டாகும் துணிவு அநுமேயமென்று சொல்லப்படும். வி-௧௬ ௧௭-௧௮.

௮௫. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்துக்குள்ள ருசுச்செய்யும்பலம் ருசுச் செய்யப்பட்ட சங்கதிகளெல்லாம் அவைகளைப்பற்றி யுண்டான துணிவுடன் ஒத்திருக்கவேண்டுமேயல்லாமல் வேறே எந்த நியாயமான துணிவுடனும் ஒத்திருக்கக்கூடாது என்கிற சங்கதியைப்பற்றியதாயிருக்கின்றது. ஒரே முடிவைக் காட்டுகிறதாகிய ருசுச் செய்யப்பட்ட பிரத்தியேக சங்கதிகளினுடையவும் அப்படிப்பட்ட சங்கதிகளைக் குறித்து வாய்மூல மெழுதி வைக்கிற வெவ்வேறு சாக்ஷிகளினுடையவும் சங்கியையை அனுசரித்து அந்தச் சாக்ஷியத்தின் பலம் சாதாரணமா யுயர்ந்தாலும் உயரும், குறைந்தாலுங் குறையும். வி-௨௦௧.

௮௬. ஸ்டார்க்கி என்பவர் தன்னுடைய நூலின்-௮௪௨-பக்கத்தில் எழுதியிருப்பதென்னவெனில்;—“உண்மையாய் “நேரிட்ட எல்லாச் சங்கதிகளும் விஷயங்களும் உண்மை “யா யொன்றோடொன்று ஒத்திருந்தன. ஆகையால் அ “வை அந்தப்படி முழுமையும் ஒப்பியிருந்தனவென்று தெ “ளிவாயிருக்கின்றது.” உண்மை என்பது எப்போதும் ஒரு அம்சம் மற்றொரு அம்சத்துடன் சகலவிதத்திலும் ஒத்திருக்கவேண்டும். ஆகையால் ருசுச்செய்யப்பட்ட சங்கதிகளில் ஏதாவதொன்று உண்டான துணிவுடன் உண்மையா யொத்திராதபக்ஷத்தில் அந்தத் துணிவு உண்மையாக இருக்கமாட்டாது.

௮௭. ஆனால் ஒரு சங்கதி ஒரே முடிவைக்காட்டுகிற அநேக இதரவிஷயங்களுக்கு பேதப்படுகிறதாய்க் காணப்படுமாயின் அப்போது (முதலில்) அந்தப் பேதப்பட்ட ச

ங்கதியானது சந்தேகமற ருசுச் செய்யப்பட்டதாவென்பதும், (இரண்டாவது) பிசகுண்டாக்கவேணுமென்கிற எண்ணத்தோடு அது உண்டாக்கப்பட்டதாயிருக்கக்கூடாதாவென்பதும், (மூன்றாவது) அப்படி ஒத்திராமை உண்மையானதா அல்லது பார்வைக்குமாத்திரம் அந்தப்படி தோன்றப்படுகின்றதாவென்பதும், ஆகிய இந்த மூன்று சங்கதிகளையும் சாக்கிரதையாய் விசாரித்தறியவேண்டும். மேலும் இந்தக் கடைசி அம்சத்தைக்குறித்து ஆலோசனைச் செய்யுமிடத்தில் சங்கதிகள் எவ்வளவு கிரமமாய் நேரிடுமென்று நாம் நினைக்கிறோமோ வாஸ்தவமாய் அவ்வளவு கிரமமாய் நேரிட்டனவாவென்றாவது அல்லது பிரஸ்தாபசங்கதி நாள்தோறும் நம தனுபவத்தில் வரப்பட்டதாயிருந்து காரணத்தாங்களைத் தெரிவிப்பது துஸ்தரமாயிருக்கப்பட்ட சங்கதியைப் போன்றதாவென்றாவது யோசிப்பதும் நலமாயிருக்கும்.

௮௮. சாக்ஷியத்தின் பொதுவான நோக்கத்துக்கொத்திராத முக்கியமானதல்லாத ஒரு சங்கதியின் ருசுவைக்குறித்தோவென்றால், அநேக சாக்ஷிக்காரர் தாங்கள் பார்க்கிறதையாவது கேள்விப்படுகிறதையாவது சரியாய்க் கிரகிப்பதற்கு வழக்கப்பட்டிராததினால் வெகுசாய் பிசகுநேரிடலாமென்றும், சிலர்மாத்திரமே கடினமான எதிர் கேள்வி கேட்கப்படும்போது அவர்கள் கிரகித்ததைச் சரியாய்ச் சொல்லுவதற்குச் சக்தி யுள்ளவர்களாயிருப்பார்கள் என்றும், சிலர் கலவரப்பட்டு முக்கிய அம்சங்களில் நிசமான ஒரு விருத்தாந்தத்தை மிகவும் உண்மையானதாய்த் தோற்றும்படி செய்வதற்காகவோ தாம் பிரதிஷ்டை யடைவதற்காகவோ அத்துடன் சில பொய்யான சங்கதிகளைச் சேர்க்கிறார்களென்றும் சொல்லலாம்.

௮௯. மேலும் ஒரு சங்கதியைக்குறித்தே விளங்குகிற வெவ்வேறு சாக்ஷிகளின் சாக்ஷியத்தில் உண்டாகும் பேதங்களையும் வழுவுகளையும் குறித்தோவென்றால், ஒரு சங்கதி

யைக் கவனித்தல், ஞாபகத்தில் வைத்தல், அதிந்ததைச் சொல்லுதல், இந்தச்சக்தி மனிதர்களிடத்தில் ஒரேரீதியாயி ருப்பதில்லை. ஆதலால் ஒரு காரியம் நடக்கும்போது பார்த்தவர் அதைக்குறித்து அவர்கள் உள்ளுக்குள்ளே கட்டுப்பாடாய் கலந்து பேசிக்கொள்ளாமல் ஒரேவிதமாய்ச் சொல்வது அரிதென்று கூறுவது போதுமானதாயிருக்கின்றது. அப்படிப்பட்ட விஷயத்தைப்பற்றிய சாக்ஷியத்தை எல்லாம் மொத்தமாகச் சொல்லவேண்டும். எது முக்கிய அம்சங்களில் யதார்த்தமுள்ளதென்று வேறுவிதமாய்க் காணப்படுகின்றதோ அந்தச் சாக்ஷியத்தை அல்ப அம்சங்களிலுண்டாகும் சில வேறுபடுதலைப்பற்றி அவசரப்பட்டு நீக்கிவிடக்கூடாது.

கூ0. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் கிரிமினல் விசாரணைகளில் எந்த நிபந்தனைகளின்படி அங்கீகரிக்கப்படுமோ அந்த நிபந்தனைகளின்படியே சிவில் விசாரணைகளிலும் சாதாரணமாய் அங்கீகரிக்கப்படும். ஆயினும் கிரிமினல் வியாஜ்ஜியங்களில் செய்யப்படும் ருசு சிவில் வியாஜ்ஜியங்களில் செய்யப்படும் ருசுவைவிட அதிக நிச்சயமானதாயிருக்கவேண்டுமென்று கோர்ட்டார் விரும்புவார்கள். சிவில் வியாஜ்ஜியங்களில் ஒரு பக்ஷத்துச் சாக்ஷியத்தைவிட மற்றொரு பக்ஷத்துச் சாக்ஷியம் அதிகப்பட்டிருப்பதே தீர்ப்புச் சொல்வதற்கும் போதுமானதாயிருக்கும். (பெ-சஉ௩-பி. பி-சா-அநுமேய சாக்ஷிய விஷயம்.) ஆனால் இவ்விதமான சாக்ஷியம் கிரிமினல் வியாஜ்ஜியங்களில் வெகுசாய் நேரிடுகின்றது. ஏனென்றால் குற்றங்கள் சாதாரணமாய் ரகசியமாகச் செய்யப்படுகிறபடியால் அதுகளைப் பிரத்தியக்ஷ சாக்ஷியத்தினால் ருசுப்படுத்துவது அரிது.

கூக. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தைக்கொண்டு கிரிமினல் விஷயத்தில் குற்றத்தைஸ்தாபிக்கவேண்டுமானால் ருசுச்செய்யப்பட்ட சங்கதிகளெல்லாம் குற்றம் சாட்டப்பட்டவனுடைய குற்றத்தோடு ஒத்திருக்கவேண்டியதும

ல்லாமல் அவை வேறே எவ்வித அநுமானத்துடனும் ஒ த்திருக்கக்கூடாதென்பது அவசியமாயிருக்கிறது. அப்படிக்கி அந்தச் சங்கதிகள் வேறே எந்த அநுமானத்தோடாவது ஒத்திருக்குமாயின் குற்றஞ்செய்யப்பட்டதென்கிற துணிவு முடிவானதா யிருக்கமாட்டாது; ஆகையால் குற்றம் ஸ்தாபிக்கப்படமாட்டாது. மேலும் இந்த அம்சத்தைக்குறித்து யோசிப்பதில் குற்றஞ் சுமத்தப்பட்டவன் சொல்லுகிற எதிர்வாதத்தை மிகுந்த சாக்கிரதையுடன் பரிசோதிக்கவேண்டும். எதினாலெனில், அப்படிச் செய்வதினால் வியாச்சியத்தின் எந்தஸ்திதியானது எல்லாச்சங்கதிகளோடும் ஒத்திருக்குமோ அந்த நிஜஸ்திதி பலமுறை வெளிப்படும்.

கஉ. மேற்படி விதியைப் பலப்படுத்தத்தக்க ஒரு விஷயம் ஸ்டார்க்கி அசுரு-பக்கத்திலும் பெஸ்ட்-சரு௲-பிரிவிலும் உதகரிக்கப்பட்டிருக்கின்றது. ஒரு வேலைக்காரி தன்னுடன் ஒண்டியாய் ஒரு வீட்டிலேயே குடியிருந்த தன்னெஜமானிச்சியைக் கொலைசெய்ததாகக் குற்றஞ் சுமத்தப்பட்டாள். அவ் வீட்டிற்குள் மற்ற யாருக்கும் பிரவேசமுண்டா யிருக்கமாட்டாதென்கிற அநுமேயத்தை முக்கியமாய்க்கொண்டு அவள்பேரில் குற்றம் ஸ்தாபித்து அவளைத்தூக்கிவிட்டார்கள். ஆனால் பின்பு உண்மையாய்க் கொலைசெய்தவர்களில் ஒருவன் தான் மற்றுஞ் சிலருடன் கூடி எதிர் வீட்டிலிருந்து தெருவுக்குக் குறுக்காய் வைக்கப்பட்ட ஒரு பலகையின்பேரில் நின்று அவ்வீட்டிற் புகுந்ததாக ஒப்புக்கொண்டான். குற்றஞ் சாட்டப்பட்டவன் திறந்தவாயுள்ள காயம்பட்ட ஒரு மனிதனருகில் தான் நித்திரைசெய்துகொண்டிருந்த சங்கதியை அறியாமல் தன் வஸ்திரங்களின்மேலிருந்த இரத்தக்கறைகள் இன்னவிதமாயுண்டாயிற்றென்று சொல்லமாட்டாதவனு யிருந்தானென்கிற ஒருவிஷயத்தையும் பெஸ்ட் என்கிறவர்-கசுசு-பிரிவுக்குச் சேர்க்கப்பட்ட (h) குறிப்பில் கண்டிருக்கிறார். மே

ஹும் விக்ஸ் என்கிறவர் சங்கதிகளைப்பற்றிய சாக்ஷியத்தைக் குறித்த தன் கிரந்தத்தின்-கஉஅ-வது-பக்கத்தில் எழுதியிரு ப்பதென்னவெனில்:—"வயதுசென்ற ஒரு ஸ்திரீயைக் கொ "ன்றதைக்குறித்துச் செருப்புத்தைக்கிறவ னொருவனை வி "சாரணைசெய்ததில் அவன் வைத்திருந்த தோற்பையின் மே "ற்றோலைத் துண்டு துண்டாக உரித்தபடியால் அதில் கு "ண்டு குண்டாய் அநேக அடையாளங்க ளிருந்தனவாயு "ம், அந்துண்டுகளிருந்த இடங்களில் இரத்தப்பொட்டுக "ளிருந்ததினால் அவைகளை அவன் உரித்தானென்றும் எ "ண்ணப்பட்டிருந்தது. ஆனால் அவன் அந்தத் துண்டுகளை "அண்டை வீட்டுக்காரனுக்கு பிளாஸ்திரிக்காக உரித்துப் "போட்டானென்று ருசுப்படுத்தப் "டது." கர்னாலில் ஒரு மனிதனைக் கொன்றதற்காக விசார ணைசெய்யப்பட்ட போத்தனாகக் கர்ணா திப்பு என்பவ னுடைய வியாச்சியம் மற்றொரு திருஷ்டாந்தமா யிருக்கி ன்றது. அவ்விஷயத்தில் மரணமடைந்தவன் அருணோதய காலத்தில் மரணத்தைசயில் தன் கட்டிலின்மீது படுத்தி ருந்ததைப் பார்த்தபோது அவன் கன்னச்சுழியில் நூதன மான ஒரு பெரியகாயமிருந்தது அது ஒரு கோடாலியினு லுண்டாக்கப்பட்டதாகக் காணப்பட்டது. குற்றஞ் சுமத் தப்பட்டவன் அதற்கு முன்னால் மரணமடைந்தவன்பேரில் போலீசாருடன் பிரியாது செய்திருந்தானுகையால் அவ ன்பேரில் சந்தேக முண்டாயிற்று. அம்மரணத்துக் கே துவான அடி அடிக்கப்பட்டபோது அவன் தன் வீட்டிலி ருக்கவில்லை என்றும், வீட்டிற்கு வந்தமாத்திரத்தில், அவ னேதோ ஒரு வார்த்தைச் சொன்னானென்றும், அவ்வார் த்தை அக்கொலையைக் குறித்ததாகப் பின்பு தெரியவந்த தென்றும் ருசுச் செய்யப்பட்டது. ஆனால் அவன் சொன் ன வார்த்தைகள் இன்னவை என்கிறதைக்குறித்த சாக்ஷி யம் திருப்தியில்லாததாயும் பிசகுள்ளதாயு மிருந்தது. அ தக் காவலாளி சக்கிலி, பின்னும் அவன் வீட்டில் அகப்

பட்ட அவன் தொழிலுக்குரிய ஆயுதங்களிலொன்றாகிய ஒரு சிறு கோடாலியானது மரணமடைந்தவனுடைய நெற்றியிலிருந்த காயத்துக்குஞ் சரிப்பட்டிருந்தது. இந்த விசாரணையை நடப்பித்த அதிகாரஸ்தர் காவலாளியைக் குற்றவாளியாக்க வேண்டுமென்றும் அவனுக்கு மரணதண்டனை விதிக்கவேண்டுமென்றும் தெரிவித்தார். ஆனால் சென்னப்பட்டணத்துப் பவுசுதாரி அதாலத்துக்கோர்ட்டார் சாக்ஷியம் முடிவானதா யிருக்கவில்லையென்று நினைத்து அவனை விடுதலைசெய்தார்கள். மற்றொரு மனிதன் தான் அந்தக் கொலையைச் செய்ததாக ஒப்புக்கொண்டானென்று அவ்விடத்துள்ள அதிகாரஸ்தர் மூலமாக மறுநாள் கோர்ட்டாருக்குத் தெரியவந்து பிறகு அவன்பேரில் குற்றஞ்சாட்டப்பட்டு அவன் தூக்கிலிடப்பட்டான். (ஆ - கி௵-சே-௨௨௭.) எப்படிப்பட்ட சாக்ஷியமானது குற்றமென்கிற துணிவைத்தவிர வேறே எந்த துணிவோடாவது ஒத்திருக்கிறதோ அப்படிப்பட்ட சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தைக்கொண்டு குற்றம் ஸ்தாபிபபதனாலே உண்டாகும் அபாயத்தைத் தெரிவிப்பதற்கு மேற்சொல்லிய விஷயங்கள் போதுமானவையா யிருக்கும்.

௧௩. "சாதாரணமாகக் குற்றங்களையும், முக்கியமாய்,
"மிகவும் அபாயகரமானவையும் விசேஷமான சங்கதிக
"ளுடன் கூடியவையுமான குற்றங்களையும் கண்டுபிடிக்க
"வேண்டுமென்கிற கவலை மிகுதியாயிருக்கின்றது. ஆகை
"யால் சாக்ஷிகள் சங்கதிகளைப் பிசகாய்க் கிரகிப்பதும் அ
"தைப் பெருப்பித்துச் சொல்வதும் வெகுசாய் நேரிடுவது
"மல்லாமல் நியாய பரிபாலன சபையாரும் அவசரப்ப
"ட்டு துணிவுகொள்ளவும் நேரிடுகின்றது. அன்றியும், வ
"ஸ்துக்களுக்கு வாஸ்தவமா யிருக்கிறதைவிட அதிகக்கிர
"மமும் ஒற்றுமையும் உண்டென்று நினைப்பது மனிதர்களு
"க்குச் சுபாவகுணமா யிருக்கின்றது. அந்தப்படியே, வெ
"வ்வேறான அநேக சங்கதிகளைப்பற்றி அநுமேயங்களைக்

'கொள்வதில் ஒரு விதமான செருக்கு உண்டாகின்றது.
"அதனால் புத்தி மோசம்போவதற்கு இடமுண்டாகின்
"றது" என்று பெஸ்ட் என்பவர் உஅஅ-வது பிரிவில் சொ
ல்லுகிறார். "ஒரு சங்கதியை மற்றொரு சங்கதியுடன் ஒத்
"திருக்கும்படி செய்கிறதிலும், அவசியமானால், ஒன்றோ
"டொன்றைச் சம்பந்தப்படுத்தி அவை யாவும் ஒன்றாகச் சே
"ர்ந்திருக்கும்படிச் செய்வதற்கு அந்தச் சங்கதிகளைக் கு
"றிப்பதிலும் மனசுக்கு உல்லாச முண்டாகின்றது. மே
"லும், ஒருவனுடைய புத்தி எவ்வளவு சூக்ஷ்மமாயிருக்கு
"மோ அவ்வளவும் அவன் அப்படிப்பட்ட விஷயங்களைக்
"குறித்து யோசிப்பதில் அவன் புத்தி அவனையே மோசஞ்
"செய்வது மல்லாமல் வெகுசாய்த் தப்பு அபிப்பிராயம்
"கொள்ளும்படியாயும் குறைவாயிருக்கிற யாதொரு சங்க
"தியையாவது நிறைவுகிறதாயும் முதலில் உண்டான அ
"ளிவுக்கு ஒத்திருப்பதும் அவற்றைப் பூர்த்தி செய்வதற்கு
"அவசியமானதுமான யாதொரு சங்கதியாவது நடந்த
"தாகக் கொள்ளுகிறதாயும் வெகுசாய் நேரிடுகின்றது"
என்று ஹாட்ஜிஸ் என்கிறவனுடைய வியாச்சியத்தில் பா
ரன் ஆல்டர்ஸன் என்கிறவர் சொன்னதாகத் தெரியவருகி
ன்றது. கி-௩உ-பக்கத்தையும்-ஹு-கிரௌ-கே-உ-பு-உஉஎ-
வது பக்கத்தையும் பார்த்துக்கொள்க.

௬௪. இந்தியா தேசத்தில் கிரிமினல் விசாரணைகளில்
நியாய பரிபாலனஞ் செய்வதில் சம்பந்தித்திருக்கிற யாவ
ருக்கும் அநேக விஷயங்களில் போலீசாராலாவது குற்ற
ஞ்சுமத்தப்பட்டவனுடைய சொந்த சத்துருக்களாலாவது-
பொய்யான சங்கதிகள் உண்டுபண்ணப்பட்டனவென்று
நன்றாய்த் தெரிந்திருக்கவேண்டும். அப்படிக் குற்றஞ் சா
ட்டப்பட்ட நிர்ப்பாக்கியன் வீட்டில் சொத்தை ஒளித்துவை
த்து அந்த வீட்டை மிகவுஞ் சீக்கிரமாய்ச் சோதித்து அவ்
வீட்டில் அந்தச் சொத்து அகப்பட்ட சங்கதியை அவன் கு
ற்றவாளி என்பதற்கு உசித சாக்ஷியமாய் எண்ணுகிறார்கள்.

ஆனால் ஸ்டார்க்கி என்கிறவர் - அருஎ-வது பக்கத்தில் சொல்லுகிறபடி "பொய்யான சங்கதியை உண்மையான "சங்கதிகளுடன் தந்திரோபாயத்தினால் இணைப்பது கஷ்ட "மென்று பிரத்தியக்ஷமாய்த் தெரிந்திருக்கிறதாகையால் "பொய்யான சங்கதிகள் அகத்தியமாய்க் கண்டுபிடிக்கக் "கூடுமானவையாயிருக்கும்." அப்படிப்பட்ட பொய்யான சங்கதிகளை இதர சங்கதிகளுடன் செம்மையாய் ஒப்பிடுவதினால் அவை கற்பிக்கப்பட்டனவென்று சாதாரணமாய்த்தெரிந்துகொள்ளலாம்.

கரு. சாக்ஷியமானது சார்பான சங்கதிகளைத் தள்ளிவிட்டு விவாதாம்சத்தை மாத்திரம் அனுசரித்திருக்கவே வேண்டுமென்கிற நியமத்தைக்குறித்து முன்னமே யோசித்திருந்தோமல்லவா. ஆயினும் சாக்ஷியத்திற் சொல்லப்படும் ஒரு சங்கதி சார்பானதென்றும் ஒவ்வாததென்றும் நீக்கப்படவேண்டியதாவென்கிற அம்சம் வெகுசாய் மிகுந்த கஷ்டமானதாயிருக்கின்றது. அப்படிப்பட்ட விஷயங்களில் "சொல்லப்பட்ட சாக்ஷியத்தின் அம்சங்களை "யொத்த எத்தனை அம்சங்களாவது இருக்கிறதாகப் பா "வித்துக்கொண்டு அவைகளைத் தீர்ப்புக்கு ஆதாரமாகச் "செய்யக்கூடுமா" வென்பதைப்பற்றி யோசிக்க வேண்டுமென்று பெஸ்ட் என்கிறவர் பிரஸ்தாபித்திருக்கிறார். இந்த விஷயத்தைக்குறித்து அவர் - கக0-வது பக்கத்தில் சொல்லியிருக்கிற சங்கதிகள் நன்றாய்ச் சிந்தனை செய்யத்தக்கவைகளாயிருக்கின்றன. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தில் ஏதாவதொரு பாகம் ருசுச் செய்யவேண்டிய அம்சத்துடன் நியாயமாய்ச் சம்பந்தப்பட்டிருந்தால் அது ஒரு முடிவாகிய அநுமேயங் கொள்வதற்குத் தன் கடையாய்ப் போதாததாயிருக்கிறதென்கிற காரணத்தைப்பற்றி அதை நீக்கிவிடப்படக்கூடாதென்பது சாதாரணமான ஒரு விதி என்று சொல்லப்படலாம். எதினாலெனில், தனிப்பட மதிக்கத்தக்கதாயிராத ஒரு சங்கதியானது இதர சங்கதி

களுடன் சேர்த்து யோசிக்கப்படும்போது மிகவு முக்கிய மானதா யிருக்கலாம்.

கசு. ருசுச் செய்யப்பட்ட சங்கதிகளைப்பற்றி ஏதாவ தொரு அநுமேயம் உண்டாக்க வேண்டியதற்காக அப்படிப்பட்ட சங்கதிகள் முக்கியமான சங்கதிக்குச் சமீபமாயும் அகத்தியமாயும் சம்பந்தப்பட்டிருக்கவேண்டிய தவசிய மாகையால் பிரத்தியக்ஷமான ருசு விருந்தால் எவ்விதமோ அவ்விதமாகவே இந்தச் சாக்ஷியம் நிச்சயத்தை உண்டாக்கத்தக்கதா யிருக்கவேண்டும். சங்கதிகள் எவ்வளவு சந்தேகிக்கத் தக்கினவைகளா யிருந்தாலும் வெறும் ஊகையைப்பற்றி அனுமானிப்பது அபாயகரமாயிருக்கும். இந்த விதிக்குத் திருஷ்டாந்தமாய் மெஸ்டர் வில்ஸ் என்கிறவர் அதிக பிரயோஜனகரமான அநேக விஷயங்களைச் சொல்லி யிருக்கிறார். கஙஎ-முதல்-கசச-வரையிலுள்ள பக்கங்களைப் பார்த்துக்கொள்க.

கஎ. குற்றம் நடந்ததென்கிற அநுமேயம் நியாயமானதென்றெண்பிப்பதற்காகச் சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் இவ்வள விருக்கவேண்டுமென்று நிச்சயிப்பது சில சமயங்களில் கஷ்டமாயிருக்கும். ஆனால் மானிங்ஸ் என்கிறவர்களுடைய வியாச்சியத்தில் லார்ட் சீப் பியாரன்பாலக் என்கிறவர் ஜூரிகளுக்குச் சங்கதிகளைப் போதிப்பதில் சொன்னதென்னவெனில், "பெரிதானவையும் முக்கியமானவையு "மான உங்களுடைய சொந்த வியாபாரங்களில் எவ்வள "வு நிச்சயமிருந்தால் நீங்க ளந்த வேலைகளை நடப்பிப்பீர்க "ளோ அவ்வளவு நிச்சயம் இந்தவிஷயத்திலு மிருக்கிற "தாக உங்களுக்கு நிச்சயமுண்டானால் தர்ம சாஸ்திரப் "படி வேண்டியதும் குற்றஞ் செய்தவனென்று நீங்கள் தீ "ர்ப்புச் சொன்னால் அதை நியாய மேவுதலாக்கத் தக்கது "மான நிச்சயம் அவ்வளவுதான்." வி-உக0.

கஅ. கிரிமினல் வியாச்சியங்களில் அவசரப்பட்டுத் தீர்ப்புகள் செய்யப்படாம லிருக்கும்பொருட்டுக் குற்றஞ்செ

ய்யப்பட்டதாக மிகவுந் தெளிவான சாக்ஷியத்தினால் ருசுச் செய்யப்பட்டாலொழிய காவலாளி குற்றத்தில் சம்பந்தப்பட்டானென்பதற்கு சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் அங்கிகரிக்கப்படக் கூடாதென்பது சாதாரணமாய் வழங்கிவரப்பட்ட விதியாயிருக்கின்றது.

கக. எப்படியெனில் மரணமடைந்தவனுடைய பிணம் அகப்படாமற் போனாலும் மரண முண்டுபண்ணத்தக்க காயமுண்டாக்கினபின்பு சரீரம் சமுத்திரத்தி லெறியப்பட்டு காணாமற்போன விஷயத்தில் எப்படியோ அப்படியே அந்தந்த வியாச்சியத்தின் சங்கதிகளைப்பற்றி மரணமுண்டான சங்கதியை ஸ்பஷ்டமாய் அநுமானிக்கத்தக்கதா யிராமற்போனாலும் குற்றஞ் சாட்டப்பட்டவன் கொலைசெய்த குற்றவாளி ஆனானென்று ருபிப்பதற்கு அநுமேய சாக்ஷியமாவது சங்கதிகளைக்குறித்த சாக்ஷியமாவது அங்கிகரிக்கப்படமாட்டாது. அப்படியே திருட்டு நடத்தப்பட்டதென்று ருசுச் செய்யப்பட்டாலொழிய திருடப்பட்ட சொத்தை ஒருவன் வாங்கிக்கொண்டானென்றாவது திருடினானென்றாவது சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தைக்கொண்டு ஸ்தாபிப்பது தகுதியானதாயிராது. ஆர்-உ0அ. வி-கசுஉ. க-ரி-அ-கஅருசு(ரூ)த்திய தீர்ப்பு புத்தகத்தின் - சுஅஎ-பக்கத்தில் தாராபிரசாத்பஹாரி என்கிறவனுடைய வியாச்சியம்.

க00. முதலில் அவசியமாய் ஸ்தாபிக்கவேண்டிய கிரிமினல் விஷயமான சங்கதி (கார்பஸ்டிலெக்டை) குற்றத்தின் சுவரூபமென்று சொல்லப்படும். அது சாதாரணமாய் இரண்டு வெவ்வேறான பாகங்களை யுடையதா யிருக்கும். முதலாவது. அந்தக்குற்றத்தின் மூலாதாரம், அதாவது கொலை விஷயத்தில் இறந்தவனுடைய பிணத்தைக் கண்டுபிடித்தல், அல்லது வீடுகளைக் கொளுத்துகிற குற்ற விஷயங்களில், கொளுத்தின சங்கதி. இரண்டாவது. குற்றம் இன்ன முகாந்திரத்தால் நடந்ததென்பதே காரணமா யிரு

த்தல் முதலியவை. குற்றச் சுவரூபத்தின் மூலாதாரம் பிரத்தியக்ஷமான சாக்ஷியத்தைவிட வேறுவிதமாய் தரும சாஸ்திரப்படி ஸ்தாபிக்கப்படக் கூடுமாவென்பது சந்தேகாஸ்பதமாயிருந்தது. ஆயினும் பிரத்தியக்ஷமான சாக்ஷியம் கொண்டுவரக் கூடாமற்போனால், அந்த வியாச்சியத்தின் மற்றப் பாகமெல்லாம் எப்படி ருசுச் செய்யப்படுமோ அப்படியே சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் ஸ்பஷ்டமானதாயும் முடிவானதாயு மிருந்தால் அதனால் குற்றச் சுவரூபத்தின் மூலாதாரம் ருசுப்படுத்தப் படலாமென்பது சரியான அபிப்பிராயமாகத் தோன்றுகின்றது. அப்படிப்பட்ட குற்றச் சுபாவத்தின் மூலதாரத்துக்கு விரோதமாய் ரூபிப்பதற்காகச் சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் எப்போதும் ஏற்றுக்கொள்ளப்படத் தக்கதாயிருக்கும். பெ-சஉரு-முதல்-சஙூ0-வரை-பி-கள். வி-எ-அத்.

க0க. சில பழய வியாச்சியங்களில் குற்றத்தின் சுவரூபம் நன்றாய் ஸ்தாபிக்கப்படாமலே குற்றஞ் சாட்டப்பட்டவன்பேரில் குற்றத்தைஸ்தாபித்து அவனைத் தூக்கிவிட்டபிறகு கொல்லப்பட்டவனாக நினைக்கப்பட்டிருந்த மனிதன் வெளிதேசத்திலிருந்து வந்து சேர்ந்தான். (வி-கசுஉ-பார்க்க.) ஆகையால் ஒரு கொலைச் சங்கதியின் விசாரணையில் ஒரு கிணத்திலகப்பட்ட மனுஷிய எலும்புகளும் மயிரும் காணமற் போனவனுடையதென்று தெளிவாய் ரூபிக்கப்படாததைப்பற்றி சென்னப்பட்டணம் பவுசுதாரி அதாலத்துக்கோர்ட்டார் காவலாளியின்பேரில் குற்றம் ஸ்தாபிக்கிறதில்லையென்று நிராகரித்தது மிகவும் கிரமமாகவே யிருக்கின்றது. வெலுத்திடத்த உண்ணி கிருஷ்ணன் என்கிறவனுடைய வழக்கு. ஆ-கிரொ-கே-கக.

க0உ. குற்றச் சுவரூபத்தின் மூலாதாரமாக ஏற்படுஞ் சங்கதி (அதாவது மரணம் நேரிட்ட சங்கதியைப்போன்றது.) ஒருதடவை ஸ்தாபிக்கப்பட்டால் அது குற்றஞ் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தோடு செய்யப்பட்ட

தேயொழிய, மின்னல், குளிர் முதலிய பிரகிருதி காரணங்களினாலாவது தற்செயலாயாவது வியாதியினாலாவது தற்கொலையினாலாவது உண்டான தல்லவென்று ருசுப்படுத்தச் சங்கதிகளைக் குறித்த சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப் படத்தக்கதா யிருக்கின்றதல்லவா. (பெ-சா.௯.௧-பி.) எப்படியெனில் ஒரு பிணத்தின் தோற்றத்தைக் குறித்தும் அதின்மேலிருக்கிற துணிகளுடைய ரூபத்தைக் குறித்தும் அந்தப் பிணத்தினிடத்திலிருக்கிற காயங்களின் தன்மையையும் பட்ட யிடத்தையுங் குறித்தும் முகக்குறியைக் குறித்தும் இரத்தமாவது அபாயமுண்டாக்கத்தக்க யாதாமொரு ஆயுதமாவது அவ்விடத்தி லிருந்ததைக் குறித்தும் அல்லது அவ்விடத்தில் ஒரு சண்டை நடந்திருந்ததாகக் காட்டுகிற அடையாளங்களைக்குறித்தும் சங்கதிகளைப் பற்றின சாக்ஷியம் சாதாரணமா யேற்றுக்கொள்ளப் படுகின்றது.

௧0௩. இராஜத்துரோகம், பலர்கூடி துராலோசனைச்செய்தல், வெவ்வேறுதரமான துர்ப்பாஷையைப் பிதற்றுதல், இப்படிப்பட்ட சில குற்றங்களில் எண்ணமென்பதே முக்கியாம்சமா யேற்படும். அப்படிப்பட்ட குற்றங்களின் சுபாவத்தைப்பற்றி குற்றஞ் செய்தவன் இன்னுனென்று குறித்துத் தெரிவிக்காமலே குற்றமுள்ள காரியம் ஸ்தாபிக்கப்படமாட்டாது. அப்படிப்பட்ட குற்றங்கள் முற்றிலும் சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தினுலேயே ஸ்தாபிக்கப்படலாமென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. விபசாரகுற்றமும் அப்படியே ருசுப்படுத்தப்படலாம். பெ-சஉ௫-பி.

௧0௪. வஸ்து சாக்ஷியம்:—வஸ்துக்களினுல் ஏற்படும் சாக்ஷியமானது வஸ்து சாக்ஷியமென்று சொல்லப்படும். மேலும் வஸ்து சாக்ஷியத்தை உண்டுபண்ணினுல் அது எதிர்ப்பார்க்கப்படாத ஏதாவதொரு பிசகினுலே வெகுசாய்க் கண்டுபிடிக்கக்கூடும். ஒரு பிணத்தின் இடதுதோளின் மேல் இடதுகையை வைத்ததாக இரத்த அடையாளமிரு

ந்தலைதக்கொண்டு அவன் தர்க்கொலைசெய்துகொண்டா னென்று அநுமேயம் உண்டாக்குவதற்கு பொய்யான சங் கதிகள் கற்பிக்கப்பட்டனவென்று தெரிந்துகொள்ளப்பட் டது. அந்தப்படியே ஒருவன் துபாக்கி குண்டினாலே சுட ப்பட்டுக் கிடந்திருந்தான். அவனருகில் அவனுடைய சொ ந்ததுபாக்கியே இருந்ததினாலே அவன் தனக்குத்தானே கொலைசெய்துகொண்டானென்று முதலில் எண்ணப்பட் டது. ஆனால் அந்தப் பிணத்தினிடத்திலிருந்து எடுக்கப்ப ட்ட குண்டு மிகவும் பெரிதாயிருந்ததினாலே அந்தத் துபா க்கியில் பிடிக்காமல் போச்சுது. இதைப்பற்றி உண்மை யாய்க் கொலைசெய்தவன்பேரில் சந்தேகம் உண்டாயிற்று. ஸ்டா-அ௫அ.

கoரு. பலாத்காரமாய்ச் செய்யப்படும் குற்றங்களில் வஸ்து சாக்ஷியத்தின் தன்மையையுடைய அடையாளங்கள் சாதாரணமாய்க் கண்டுபிடிக்கப்படுகின்றன. அப்படிப்ப ட்ட அடையாளங்கள் விசேஷ பிரயோசனகரமா யிருக்க லாம். எப்படி எனில், ஒரு திருடன் ஒரு சன்னலை யுடைத் துத் திறப்பதில் அவனுடைய பேனுகத்தி ஒடிந்து அதினு டைய நுனி அந்தச் சன்னலின் சட்டத்தில் சிக்கிக்கொ ள்ள அப்படியே விட்டுப்போனான். பிறகு அப்படி ஒடிந்த நுனி குற்றஞ் சாட்டப்பட்டவனுடைய ஒடிந்த கத்தியோ டுசேர்த்துப் பார்க்கையில் சரிப்பட்டிருந்தது. அந்தப்படி யே குண்டுடன் சுட்டுக் கொலைசெய்யப்பட்ட மற்றொரு வி யாச்சியத்தில் கொன்றவனிடத்திலிருந் தகப்பட்ட ஒரு க டிதத்தின் சில பாகத்தை அவன் துபாக்கியை கெட்டிலை செய்வதில் தக்கைக்குப் பதிலாக உபயோகித்ததினால் கொ லைசெய்தவன் இவன்தானென்று நிச்சயிக்கப்பட்டது. ஸ் டா-அசச-பி.

கoசு. பெஸ்ட்டு என்கிறவர் (க௬௫-வது பிரிவில்) ஒ ருவிஷயம் உதகரித்திருக்கிறார். அதென்னவெனில் ஒரு வன் பழங்களைத் திருடினான். இரண்டு முன் பற்களில்லா

தவனால் கடிக்கப்பட்டதாக அடையாளத்துடன் அவனால் எறியப்பட்ட பழத்தைப்பார்த்து திருடினவன் அவனே என்று நிச்சயிக்கப்பட்டது. ஆயினும் இப்படிப்பட்ட சாக்ஷியம் முடிவானதாக எண்ணப் படக்கூடாதென்று அந்தக்கிரந்தகர்த்தாவே சொல்லியிருக்கிறார்.

௧0௭. கடிதாசியினிடத்திலிருக்கும் நீர்க்குறியானது ஒரு தஸ்தாவேசு பொய்யாய் உண்டுபண்ணப்பட்டதென்று கண்டு பிடிப்பதற்குச் சாதனமாயிருக்கலாம். ஆனால் கடிதங்களைச் செய்வோர் சிலசமயங்களில் தங்கள் கடிதங்களின்பேரில் வரப்போகிற தேதியைப் போடுகிறதுண்டு. ஆகையால் அப்படிப்பட்ட சாக்ஷியம் முடிவானதாயிராது. கடிதாசியின் ரூபத்தையும் அதின்பேரில் இருக்கிற இங்கியின் தோற்றத்தையும் பார்த்து ஒரு தஸ்தாவேசு வெகுபழமையானதாவென்று சந்தேகிக்கஅடிக்கடி இடமுண்டாகும். ஆனால் உஷ்ணப்பிரதேசங்களில் சாதாரணமான காட்டு இங்கி காத்தில் வைக்கப்படாமல் தஸ்தாவேசு வைக்கிற அறையிலேயே வைத்து வைக்கப்பட்டால், அது-௫0-வருஷம்வரையில் கறுப்பாகவேயிருக்கிறதைப்பார்த்து இந்தக்கிரந்தகர்த்தாவுக்கு மிகவும் ஆச்சரியமுண்டாச்சுது. இங்கிலண்ட்தேசத்தின் இங்கியினுடைய வர்ணம் சில வருஷங்களிலேயே மாறிப்போகின்றது.

௧0அ. திருட்டு நடந்தவுடனே திருடப்பட்ட சொத்து எவன் சுவாதீனத்தில் பராதீனமாகாமலிருந்ததோ, அவனே திருடினதாக அவன்பேரில் குற்றஞ் சாட்டுவதற்கும் அச்சங்கதி விவரிக்கப்படாமற்போனால் அவன் குற்றவாளியென்று தீர்மானிப்பதற்கும், அப்படிப்பட்ட சுவாதீனமே போதுமான ஆதாரமாயிருக்கின்றது. ஆனால் (௧-வது) அந்தத்திருட்டு நூதனமாய் நடந்ததாயும். (௨-வது) அந்தச் சுவாதீனம் தனித்ததாகவும் இருக்க வேண்டுமென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

கo௯. (க-வது.) திருட்டுச்சொத்து குற்றஞ் சாட்டப்ப ட்டவனுடைய சுவாதீனத்தில் அகப்படுவதற்கு கொஞ்சம் முன்னதாக திருட்டு நடந்திருக்கவேண்டும்.

திருட்டு நடந்த வெகுநாளைக்குப் பிறகு சொத்து ஒருவ ன் சுவாதீனத்திலிருந்ததென்கிற காரணத்தைப்பற்றி அவ ன்பேரில் திருட்டுக் குற்றஞ் சாட்டக்கூடாது. ஆனால் அ ந்தத் திருட்டு நடந்ததற்கும் திருட்டுச்சொத்து சுவாதீன த்தி லிருந்ததற்கும் மத்தியில் எவ்வளவுகாலஞ் சென்றிரு ந்தால் அப்படிச் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்கி றவன் குற்றத்தில் நின்று விமோசனம் செய்யப்படுவானெ ன்கிற கேழ்விக்கு நேரான மறுமொழி சொல்லக்கூடாமல லிருக்கின்றது. பிரதிவிஷயமும் அத்துடன் சேர்ந்த எல் லாச்சங்கதிகளையும் அனுசரித்து தீர்மானிக்கப்படவேண் டும். ஆயினும் அநேகவஸ்துக்கள் திருடப்பட்டு அவைக ளெல்லாம் ஒருவன் சுவாதீனத்திலேயே அகப்பட்டால் அ ந்தச் சங்கதி மிகவும் சந்தேகத்துக் கிடமாயிருக்கு மாகை யால் வெகுகாலம் கடந்திருந்தபோதிலும் அவன் அதைத் திருடினானென்று குற்றஞ் சுமத்தப்படலாம். அப்படிக் கில்லாமல் அநேக வஸ்துக்களில் ஒன்றுமாத்திரம் அவன் சுவாதீனத்தி லகப்பட்டால் அந்தத் திருட்டு நூதனமாய் நடந்திருந்தாலொழிய அவனை விசாரணைக்குட்படுத்தக்கூ டாது.

கக0. இதுவுமல்லாமல் இப்படிப்பட்ட விஷயங்க ளைக்குறித்த காரியங்களை நடப்பிப்பதில் அந்த வஸ்து துணி, கோடாலி, ஆடு, பேனாகத்தி, இப்படிப்பட்ட சுலப மாய் கைமாறத்தக்க வஸ்துவா, அல்லது அசைப்பதற் குக் கஷ்டமாயிருக்கும் மேஜை, பீரோ, இப்படிப்பட்ட வஸ்துக்களைப் போன்றதா என்று யோசிக்கவேண்டும். முதலில் சொல்லப்பட்ட வகுப்பில்சேர்ந்த வஸ்துக்கள் யாரிடத்திலகப்பட்டனவோ அவன் சுவாதீனத்திற்கு வரு வதற்குமுன் அநேகங் கைகள் மாறியிருக்கலாம். திருட

ப்பட்டனவென் றறியாமல் அவை விலைக்கு வாங்கப்பட்டாவது இருக்கலாம். அல்லது வழியில் கண்டெடுக்கப்பட்டாவது இருக்கலாம். பின் குறிக்கப்பட்ட வகுப்பில்சேர்ந்த வஸ்துக்களானால் அற்பகாலத்தில் ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்கு அவ்வளவு சுலபமாய் மாறத்தக்கவையல்ல.

கக௧. மேலும் ஒரு வஸ்துவை வைத்திருக்கிற மனிதனுடைய நிலையைக்குறித்து யோசிக்கையில் அவனதை யோக்கியமாய்ப் பெற்றிருக்கக் கூடாதாவென்றும் நாம் யோசிக்கவேண்டும். ஒரு ஏழையினிடத்திலாவது நாடோடியாகிய உபாயமான யோக்கியதை யுடையவனிடத்திலாவது விலையுயர்ந்த கெடியாரம் அகப்பட்டால் அதை அவனே திருடினனென்று அது திருடப்பட்ட அநேக மாசங்களுக்குப் பிறகு அவன்பேரில் குற்றஞ் சுமத்தப் போதுமான ஆதாரமாயிருக்கும். ஆனால் அந்தக் கெடியாரமே ஒரு பாக்கியவானுடைய சுவாதீனத்திலாவது உயர்ந்த நிலையிலிருக்கிற ஈரோப்பியனிடத்திலாவது அகப்பட்டால் அது சில நாளைக்குமுன் திருடப்பட்டதா யிருந்தால்தான் அவன்பேரில் குற்றஞ் சுமத்துவார்கள்.

ககஉ. கொள்ளை நடந்த ஈாலு வருஷத்துக்குப்பின்பு காவலாளியின் சுவாதீனத்தில் திருட்டுச்சொத்து அகப்பட்டால் அக்கொள்ளை அவனால் நடத்தப்பட்டதென்பதற்கு அநுமேய சாக்ஷிய மாகமாட்டாதென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. மா-டை-ரூ-வி-கிரிமினல் தர்மசாஸ்திர விஷயம் - கஎ - ൨.

ககஙு. மேற்கண்ட சித்தாந்தங்களே குற்றஞ் சாட்டப்பட்டவன் சொல்லுகிற சமாதான விஷயத்துக்கும் உபயோகிக்கப்படவேண்டும். காரிங்டன் கர்வான் என்பவர்களுடைய ரிபோர்ட்டின் - க - வது புத்தகம் ௬எ0 - வது பக்கத்தில் உதகரிக்கப்பட்டிருக்கும் குரோஷர்ஸ்ட் என்பவருடைய வியாச்சியத்தில் ஒரு மரத்துண்டு காணு

மற்போன ஐந்து நாளைக்குப் பின்பு காவலாளியினுடைய கடையிலிருந்தகப்பட்டு அதை அவன் திருடினதாகக் குற்றஞ் சாட்டப்பட்டான். அந்த மரத்துண்டை இரண்டு மைல் தூரத்தில் குடியாயிருக்கிற நாஷ் என்பவனிடத்திலிருந்து தான் வாங்கினதாகக் காவலாளிசொன்னுன். நாஷ் என்கிறவன் இரு கக்ஷிக்காரர்களில் ஒருவர் பக்ஷத்திலாவது சாக்ஷியாக வரவழைக்கப்படவில்லை. பாரன் ஆல்டர்ஸன் என்பவர் இந்த வியாச்சியத்தின் சாரம் சங்களைச் சுருக்கமாகச் சொல்வதில் தெரிவித்தது யாதெனில்:—"இத்தன்மையுள்ள விஷயங்களில் திருடப்பட்ட "சொத்து எவனிடத்திலிருந் தகப்படுகின்றதோ அவன் "எவனிடத்திலிருந்து அந்தச் சொத்து வாங்கிக்கொள்ள "ப்பட்டதோ அப்படிப்பட்டவன் வாஸ்தவமாய் ஒருவனி "ருக்கிறதாகத் தெரிந்திருந்து அவன்பெயரைச் சொன்னு "லெப்படியோ அப்படியே தனக்கு அந்தச் சொத்து எ "ன்னவிதமாய் கிடைத்ததோ அதைக்குறித்து நியாயமான "முகாந்தரத்தைத் தெரிவித்தால் அந்தச்சங்கதி பொய்யெ "ன்று பிரியாதுக்காரன் ருசுப்படுத்தவேண்டுமென்பது "சாதாரணமான சித்தாந்தமாக ஏற்றுக்கொள்ளவேண்டு "ம். ஆனுல் காவலாளிசொன்ன சங்கதி பிரத்தியக்ஷமா "ய் நியாயமற்றதாயாவது நம்பத்தகாததாயாவது இரு "ந்தால் அது யதார்த்தமானதென்று ருசுச்செய்யவேண் "டிய பாரம் அவனதேயாகும். அதற்குத் திருஷ்டாந்தம். "இந்தக் கெடியாரத்தைத் திருடினதாக என்பேரில் ஒரு "வன் குற்றஞ்சாட்டினுன். அதை இன்ன வர்த்தகனிடத் "தில் விலைக்கு வாங்கினேனென்று அவன் பெயரைச்சொ "ன்னுல் அது முதலில் நியாயமான முகாந்தரமாயிருக்கு "மாகையால் அது பொய்யென்று ருசுச் செய்யப்பட்டா "லொழிய என்பேரில் அப்பெருங் குற்றத்தை ஸ்தாபிக்கக் "கூடாது." அதன்பேரில் காவலாளி குற்றவாளி அல்லவென்று தீர்ப்புச் சொல்லப்பட்டது.

௧௧௪. அறியாத ஒரு மனிதனிடத்திலிருந்து சாமான்களை வாங்கினதாகக் காவலாளி வாதித்து, அப்படிப்பட்ட மனிதனைக்குறித்துச் சாக்ஷியமொன்றும் கொடுக்கப்படாதபக்ஷத்தில் அந்தச்சாமான் முதலில் அவன்வசத்தில் வந்ததாக ஊகிக்கப்படும் காலமுதல் அவனுடையநடத்தை அவன் வாதித்த விஷயத்துடன் எவ்வளவுமட்டும் ஒத்திருக்கின்றதோ அதைக்குறித்து யோசிப்பது மிக முக்கியமான விஷயமாயிருக்கிறதென்று மெஸ்டர் ஈஸ்ட்டு என்பவர் சொல்லுகிறார். ஈ-பிளீ-கிரௌ-உ-பு-௬௬௫-ப-௧௦௦-பி.

௧௧௫. (ட-வது) அந்தச் சுவாதீனமானது தனித்ததாயிருக்கவேண்டும். அஃதாவது சொத்து காவலாளிதவிர மற்றவர்கள் போகக்கூடாத இடத்திலிருந்து அகப்பட்டிருக்கவேண்டும். அப்படிக்கில்லாவிட்டால் அவன்மீது சந்தேகிப்பதற்கு இன்னும் இதர காரணமொன்றுமில்லாமல் அவனை விசாரணைக்குட்படுத்தக்கூடாது. (பெ-௨௦௬-பி) இந்த நிபந்தனையைக் கண்டிப்பாய் அநுசரிப்பதினால் ஒரு வீட்டிலே ஓரிடத்தில் வேறொருவரால் போட்டிருக்கக்கூடிய திருட்டுச்சொத்து அவ்விடத்திலகப்பட்டதாகச் சொல்லப்படும் அநேக விஷயங்களைச் சுலபமாய்த் தீர்மானிக்கலாம்.

௧௧௬. திருட்டுச்சொத்தானது எவன் சுவாதீனத்திலிருந்தகப்படுகின்றதோ அவனே அதைத் திருடினவனென்று நம்பாமல் போகும்படி செய்யத்தக்க விசேஷமான சங்கதிகள் சில விஷயங்களில் இருக்கிறதுண்டு. ஹா-கிரௌ-கே-௧-பு, ௧௧௫-ப-இராணி எதிரி அரண்டல் வியாச்சியமும்; ஜூரிஸ்டு-௪-பு, ௭௦௯-ப-இராணி எதிரி காலியர் வியாச்சியமும்.

௧௧௭. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் குற்றஞ் சாட்டப்பட்டவனுடைய பூர்வநடத்தை அல்லது நிலைக்கு அடிக்கடி சம்பந்தப்பட்டிருக்கிறதுண்டு. அந்தப் பூர்வநடத்

தை அல்லது நிலைஎன்பது "குற்றஞ்செய்வதற்கு நிமித் "தியங்கள் - அதைச் செய்வதற்குண்டான சாதகங்கள்- "சந்தர்ப்பங்கள் - அதைச் செய்வதற்காகச் சித்தஞ்செய் "யப்பட்ட காரியங்கள் - அதை நிறைவேற்றவேண்டுமெ "ன்று முன் செய்யப்பட்ட பிரயத்தினங்கள்-அதைச் செ "ய்யப்போகிற உத்தேசத்தைத் தெரிவிக்கும் பேச்சுகள்- "பிரட்டுதல்-இவையாம்." பெ-சா-க-ரு-பி.

கஅ. காயலானி குற்றஞ் செய்ததற்கு அவனுக்குமா த்திரமே தெரிந்திருந்த நிமித்தங்களிருந்திருக்கலாம். ஆ கிலும் வெளிப்படையான யாதொரு முகாந்தரமும் கா ணப்படாத பக்ஷத்தில் அது எப்போதும் அவனுக்குஅனு கூலமான பலசத அம்சமாயிருக்கும். அப்படிக்கனலாம ல் யாதொரு முகாந்தர முண்டாயிருந்தபோதிலும் அது விசேஷமாய் யோசிக்கத்தக்கதாயிராது. ஏனெனில் கு ற்றஞ் செய்வதற்கு முகாந்திரமுடைய அநேகர்களில் சி லர்தான் வாஸ்தமாய் குற்றஞ்செய்கிறார்கள். குழந்தை கள் தாய்தந்தைகளைக்கொல்ல சாதாரணமாய் நிமித்தங்க ளுடையவர்களாயிருந்தாலும் அவர்கள் அப்படிக்கொல் வது எவ்வளவு அரிதாயிருக்கிறதென்று பெஸ்ட் என்பவர் சா-க-வ-பக்கத்தில் சொல்லியிருக்கிறார். ஆகையா ல் முகாந்திர மிருக்கிறதென்கிற சங்கதி குற்றஞ் செய்த தற்குண்டாயிருந்த காரணத்தைத் தெரியப்படுத்தத்தக்க தாயிருக்குமே யொழிய அதைக்கொண்டே சந்தேகிப்ப தற்கு ஆதாரமாகமாட்டாது.

ககூ. விஷம், ஆயுதங்கள், பொய்க்கோலம், இவைக ளில் எதையாவது விலைக்குக்கொள்ளுதல், மாறு சாவிக ள்செய்தல், அயலார்களின்பேரில் சந்தேகமுண்டாக்கும் படியாவது யாரைக் கொல்லவேண்டுமென்று உத்தேசிக் கப்பட்டதோ அவன் வியாதியா யிருக்கிறானென்று உல கத்தார் நினைக்கச் செய்யும்படியாவது பொய்ச் சமாசா ரங்களைப் பரவச்செய்தல், இப்படிப்பட்ட காரியங்கள்

குற்றஞ் செய்வதற்குச் சாதாரணமாய் அவசியமானவைகளாயிருக்கின்றன. இவைகளில் கடைசியில் சொல்லப்பட்ட சங்கதி மிகவும் சந்தேகாஸ்பதமாயிருக்கிறது. ஆயுதங்கள் ஆத்மசம்ரக்ஷணைக்காக வாங்கப்பட்டிருக்கலாம். விஷம் க்ஷுத்ர ஜெந்துக்களைக் கொல்வதற்காக வாங்கப்பட்டிருக்கலாம். ஆனால் தப்புச் சமாசாரங்களைப் பரவச் செய்வதற்காகத் தருப்பக்கரமான சமாதானஞ் சொல்வது அரிது. குற்றஞ் செய்வதற்கு முன் பயமுறுத்தியதைக் குறித்த சாக்ஷியம் ஜாக்கிரதையாய் அங்கீகரிக்கப்படவேண்டும். ஏனெனில் தப்பமப்பட்ட மிரட்டுதல் சாக்ஷிகளால் பிசகாயக் கேட்கப்பட்டாவது தப்பாய்த் தெரிவிக்கப்பட்டாவது இருக்கலாம். அதுவுமன்றி மிரட்டினபடி நிறைவேற்ற வேண்டுமென்கிற உண்மையான உத்தேசமில்லாமலே மிரட்டியிருந்தாலுமிருக்கலாம். டெய்ட் என்பவர் ஒரு விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். அதென்னவெனில், ஒரு மனிதன் பகிரங்கமாய் மற்றொருவன் மிரட்டிக்கொண்டிருக்கும்போது கேட்டிருந்த வேறொருவன் அந்த மிரட்டுதலை அப்படி மிரட்டினவன்பேரில் சந்தேகமுண்டாகுமென்று நம்பி அவனை யவனே மிரட்டினவனை அவனைக் கொன்றுவிட்டான். டெ-சஎக-பி-(III) குறிப்பு.

கஉ0. சில சமயங்களில் சங்கதிகளைக் குறித்த சாக்ஷியமானது குற்றம் செய்யப்பட்டபின்பு குற்றஞ் சாட்டப்பட்டவனுடைய நடத்தையைப் பற்றியதாயிருக்கும். பிடிப்பட்டவுடனே அவன் நடந்துகொள்ளும் விதம், அவன் நியாயபரிபாலனைத்தற்குட்படாமல் ஒடிப்போகுதல், தப்பித்துக்கொள்ளவாவது சாக்ஷிகளுக்கு லஞ்சங்கொடுக்கவாவது யத்தனப்படுதல், இருந்தவிடம்போனிருக்க பாக்கியமானாலும் ஒப்புவிக்கப்பட்டவைகள் அக்கடி குற்றத்திற்கு சாக்ஷியமாய்க் கொள்ளப்படுகின்றன. ஆனால், அப்படிப்பட்ட சங்கதிகள் வெகுசாய் மதிக்கக்கூடாத

வைகளாயிருக்கும். குற்றஞ் சாட்டப்பட்டவனுடைய நடத்தை கட்பிதமாய்க் கிரகிக்கப்பட்டிருக்கலாம். சகஜமான பிரயத்தனத்தினால் அவனுக்குப் பயமுண்டாயிருக்கலாம். அல்லது அந்த விஷயத்தைச் சேர்ந்த சங்கதிகள் தனக்குப் பிரதிகூலமாயிருப்பதாகக் காணப்பட்டனவென்று, தனக்குப் பலவந்தர்களான சத்துருக்களிருந்தார்களென்றும், லஞ்சம் வாங்குகிறவனாயாவது சாமர்த்தியமில்லாதவனாயாவது இருக்கிற அதிகாரி தன்னை விசாரிக்கப்போகிறானென்றும், இப்படிப்பட்ட நியாயமான ஹேதுக்களினால் அவனுக்குப் பயமுண்டாயிருந்திருக்கலாம். தென்னிந்தியாதேசத்து ஜனங்கள் சுதாவாய்ப் பிதப்பைத்தனமுள்ளவர்களாயும் அதிகாரிகளிடத்தில் விசேஷ நம்பிக்கை இல்லாதவர்களாயுமிருக்கின்றமையால் அவ்விடத்தில் மேற்சொல்லிய விஷயங்கள் முக்கியமாய் யோசிக்கப்படவேண்டியவைகளாயிருக்கின்றன. அப்படிக்கில்லாமல் குற்றஞ் சாட்டப்பட்டவனுக்கு நியாயம் நடக்கவொட்டாமல் தப்பித்துக்கொண்டுபோகச் சமயம் நேரிட்டிருந்து அதையவன் உபயோகப்படுத்திக்கொள்ளாமற் போயிருந்தால் அவனுக்கு மிகவும் அனுகூலமாயிருக்கும். மேலும் அவன் விசாரணைக்குத் தானாய் உட்படாமற்போனால் தன்னைப் பிடித்துக்கொள்வார்களென்கிற நிச்சயம் தனக்கில்லாதபோது விசாரணைக்குத்தானே சுதாவாய் உட்பட்டிருந்தால் அது அவனுக்கு இன்னமும் அனுகூலமாயிருக்கும். வி-சஉஎ.

சஉக. முடிவாய் சங்கதிகளைக் குறித்த சாக்ஷியம் குற்றஞ் சாட்டப்பட்டவன் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டதற்குச் சம்பந்தப்பட்ட[illegible] யிருக்கலாம். அப்படிப்பட்ட சாக்ஷியத்தை ஏற்றுக்கொள்வதைக் குறித்துச் சுருத சாக்ஷியம் என்கிற தலைப்பில் அவசியமாய்ச் சொல்லவேண்டியதாயிருக்கின்றது. அவ்விடத்திலேயே குற்றங்களை ஒப்புக்கொள்ளும் விஷயங்களை எல்லாம் யோசிப்பது

மிகவும் அனுகூலமாயிருக்கும். கூஅ - வது பிரிவைப் பார்த்துக்கொள்க.

கஉஉ. தர்ம சாஸ்திரப்பிரகாரம் சங்கதிகளைக்குறித்த சாக்ஷியமானது பிரத்யக்ஷ சாக்ஷியத்தைவிட குறைந்த தன்மை யுள்ளதல்ல. ஆகையால் பிரத்யக்ஷ சாக்ஷியத்தைக்கொண்டு வரக்கூடுமானபோது சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தை நிராகரிக்கக்கூடாது. ஆனபோதிலும் பிரத்யக்ஷ சாக்ஷியமிருந்தும் அதைக் கொண்டுவராமல் விட்டு விடுவதினால் சாதாரணமாகச் சந்தேகத்திற்கிடமுண்டாகின்றது. ஆகையால் ஒரு அம்சத்தைக்குறித்துப் பிரத்தியக்ஷ சாக்ஷியம் கொணடுவரக் கூடுமானபோது கேவலம் சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தையே நம்பாமலிருப்பது சாதாரணமான வழக்கமாயிருக்கின்றது. (ஸ்டா - அசஅ. டெ - உஅஅ - பி. நா - உஅகூ-அது மேய சாக்ஷிய விஷயம்.) இங்கிலண்டு தேசத்து ஜனங்கள் சத்யத்தை மிகவும் பாலிக்கிறார்கள். அசத்தியத்தை மிகவும் அவமானமுள்ளதாக எண்ணுகிறார்கள். ஆதலால் அவ்விடத்தில் சுதாவாய்ப்பார்த்த சாக்ஷிகளினுடைய பிரத்தியக்ஷ சாக்ஷியம் சஙகதிகளைக்குறித்த சாக்ஷியத்தைப்பார்க்கிலும் அதிகமாய் நயபத் தருந்தென்று சாதாரணமாய் எண்ணப்படுகின்றது. ஆனால் தப்பு சாக்ஷியத்திலும், பொய்யிலும், அதிக லக்ஷியம வைத்திருக்கிற தேசத்தில் பிரத்தியக்ஷ சாக்ஷியம் அவ்வளவு மதிக்கத்தக்கதாயிராது.

கஉங. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியத்தில் இரண்டு விதமாய்ப் பிசகு நேரிடலாமென்று தோன்றுகிறது. எதினாலெனில், சாக்ஷிகளினால் கோர்ட்டாருக்காவது ஜூரிகளுக்காவது பிசகு நேரிடும்படி சமபவிக்கிறதுமல்லாமல் சொல்லப்பட்ட சங்கதிகளைக்கொணடு ஊகிப்பதிலும் பிசகு நேரிடலாம். பிரத்தியக்ஷ சாக்ஷிய விஷயத்திலோவென்றால், மேற்சொல்லப்பட்ட இரண்டாவது காரணத்தி

னுல் பிசகுண்டாகமாட்டாது. இதற்குப் பதிலாய் ருசச் செய்யப்பட்ட சங்கதிகளைப்பற்றி உண்டாகிற அநுமேயம் மிகவும் பலமானதாயிருந்து பிசகு நேரிடுவதற்கு மார்க்கம் கொஞ்சமாகிலுமில்லாமல் போகலாம். எப்படியெனில், சங்கதிகள் அநேகமாயும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாமல் பிரதியேகமானவைகளாயும் இருந்தால் முக்கியமான சங்கதியை நம்புகிறதற்காவது நம்பாமல் போகிறதற்காவது அவையாவும் அத்தனைப் பிரத்தியேகமான ஒவ்வொரு நியாயங்களாயிருக்கும். மேலும் ஒரு நியாயஸ்தலத்தில் பொய்ச்சாக்ஷியத்தினுல் ஒரு முக்கியமான சங்கதியை ஸ்தாபிப்பதைவிட அநேகமான முக்கியமல்லாத சங்கதிகளைப் பொய்ச்சாக்ஷியத்தினுல் ஸ்தாபிப்பது மிகவும் கஷ்டமாயிருக்கவேண்டும். இதுவுமல்லாமல் முக்கியமல்லாத அநேக சங்கதிகள் ஒன்றோடொன்று கலந்தாவது சம்பந்தப்பட்டாவது இருப்பதினுல் விசாரணையில் அகஸ்மாத்தாய் வெளி யிடப்பட்ட அச்சங்கதிகளைக் குறித்து அநேக சாக்ஷிகள் விளங்கிய சாக்ஷியம் ஒத்திருக்கவேண்டிய பக்ஷத்தில் அந்தச் சாக்ஷியத்தின் உண்மையாவது பொய்யாவது சாதாரணமாய்க் கண்டுபிடிக்கப்படும்.

கஉச. சங்கதிகளைக்குறித்த சாக்ஷியமும் பிரத்தியக்ஷ சாக்ஷியமும் வெவ்வேறு விதங்களானவையாகையால் அவற்றை ஒன்றோடொன்று ஒப்பிடுவது அசாத்தியம். இந்தியாதேசத்தில் ஒரு முக்கியமான சங்கதியைக்குறித்துக் கிடைக்கும் சாமானியமான வாய்மொழிச் சாக்ஷியத்தைவிட சில விஷயங்களில் சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் மிகவும் நம்பத்தக்கதா யிருக்குமெனுதுமாத்திரம் உறுதியாய்ச் சொல்லலாம்.

## சர்வோத்தமமான சாக்ஷியங்கொண்டுவரப்படவேண்டும்.

கஉரு. தர்மசாஸ்திரப்படி சார்பான சங்கதிகளைக்குறித்துச் சாக்ஷியத்தை ஏற்றுக்கொள்ளக் கூடாதென்கிற

விஷயத்தை முன்னமே தெரியப்படுத்தி யிருக்கின்றோமல்லவா. அந்தச் சாக்ஷியத்தைவிட தாழ்ந்த விதமான சாக்ஷியத்தை மறுக்கத்தக்க மற்றொரு விதியைக்குறித்து இனி ஆலோசிக்கலாகின்றது. இவ்விடத்தில் ஏற்றுக்கொள்ளத்தகாத சாக்ஷியத்தற்கும் நம்பத்தகாத சாக்ஷியத்துக்குமிருக்கிற பேதத்தைப் பரிஷ்காரமாய்த் தெரிந்துகொள்ளவேண்டியது மிகவும் முக்கியமா யிருக்கின்றது.

கஉரு. தர்மசாஸ்திரப்படி அங்கீகரிக்கப்படாத அல்லது கொண்டுவரப்படக்கூடாத சாக்ஷியமானது அங்கீகரிக்கப்படத்தகாத சாக்ஷியமாம். பின்னும் அப்படிப்பட்ட சாக்ஷியம் தர்ச்செயலாய் ஏற்றுக்கொள்ளப்பட்டால் அது (கோர்ட்டு) கிரந்தத்திலிருந்து எடுத்துவிடப்படுந்தானதாக எண்ணப்படும்.

கஉள. ஆயினும் சாக்ஷியம் பூர்த்தியாய் அங்கீகரிக்கப்படத்தக்கதாயிருந்தும் நம்பத்தகாதது யிருக்கலாம். அப்படிப்பட்ட விஷயத்தில் அது நம்பத்தக்கதா யிராமற்போனபோதிலும் கோர்ட்டார் அதைக் கேழ்க்கமாட்டோமென்று நிராகரிக்கமாட்டார்கள்.

கஉஅ. சாக்ஷியம் அங்கீகரிக்கப்படத்தக்கதா யிருப்பதைக்குறித்து வியாச்சிய நீதக்கொத்த சர்வோத்தமமான சாக்ஷியம் கொண்டுவரப்படவேண்டியதென்பது விதியாயிருக்கின்றது.

கஉகூ. மேற்கண்டவிதியில் சர்வோத்தமமான சாக்ஷியமென்கிற வார்த்தைக்கு மிகவும் நிச்சயமான சாக்ஷியமென்றாவது மிகவும் நம்பத்தக்க சாக்ஷியமென்றாவது அர்த்தமல்ல. ஏனெனில் ஒருசாக்ஷிக்காரன் ஒரு சங்கதியைப் பிரத்தியக்ஷமாய்ப்பார்த்த அனேக சாக்ஷிகளில் எவனையாவது தனக்கிஷ்டமானவனைக் கொண்டுவரலாம். அந்தச் சாக்ஷியைவிட அதிகமாய் நம்பத்தக்க வேறொரு சாக்ஷியை அவன் வரவழைத்திருக்கக்கூடுமென்கிற காரண

த்தைப்பற்றி அந்தச் சாக்ஷி சொல்வதைக் கோர்ட்டார் கேட்கமாட்டோமென்று சொல்லமாட்டார்கள். அதிகமாய் நம்பத்தக்க சாக்ஷி இல்லாமையினால் கொண்டுவரப்பட்ட சாக்ஷியத்தின் நம்பிக்கைக்குக் குறைவு வரலாமேயொழிய அந்தச் சாக்ஷியம் அங்கீகரிக்கப்படத்தக்கதாயிருப்பதைப்பற்றி விரோதமுண்டாகமாட்டாது.

௧௱௦. அந்தப்படியே ஒரு தஸ்தாவேசு காணமற்போய்விட்டதாய் ருசுச் செய்யப்பட்டால் அதின் சங்கதிகள் ஒரு பிரதிமூலமாயாவது அதைப் படித்தவர்களின் வாய்மொழியான சாக்ஷியத்தினாலாவது ருசுப் படுத்தப்படலாம். இவ்விரண்டிலும் பிரதி மூலமாய் செய்யப்படும் ருசு மிகவும் திருப்திகரமாயிருக்குமென்று தோனுகிறது.

௧௱௧. ஆனால் ஒரு காரியம் நடந்த காலத்தில் கூடவேயிருந்து அதற் சம்பந்தப்பட்ட ஒருவனுடைய சாக்ஷியத்தினால் அது ருசுச் செய்யப்படத்தக்கதாயிருக்கும்போது சாமானிய சங்கதிகளைக்கொண்டு ஊகித்தறியும்படி அதை விட்டுவிடுவது போதுமானதாயிராது.—௫௫-வது பிரிவில் வில்லியம்ஸ் எதிரி ஈஸ்டிண்டியா கம்பெனி இவர்களுடைய வியாச்சியம்.

௧௱௨. "கொண்டுவரப்படாத வேறு சில சாக்ஷியத்"தினால் பலம் அடைந்ததாய் மாத்திரம் பிரத்தியக்ஷமா"ய்க் காணப்படுகிற எந்த சாக்ஷியமும் ஏற்றுக்கொள்ள"ப்படக்கூடாது" என்பது மேற்கண்ட விதிக்கு ஓர் அர்த்தமென்று பெஸட் என்பவர் (௮௧-வது பிரிவில்) சொல்லியிருக்கிறார்.

௧௱௩. சர்வோத்தமமான சாக்ஷியங் கொண்டுவரப்படவேண்டுமென்று சொல்லியிருக்கிற விதியின் சாமானிய காரியமானது சுருத சாக்ஷியத்தையும் உபபல சாக்ஷியத்தையும் விலக்குவதற்காம். இவ்விரண்டுவகை சாக்ஷியங்களும் கொண்டுவரப்படாத வேறு சில சாக்ஷியத்தினின்று பலத்தை அடைகின்றன.

கக௪. ஒரு சாக்ஷியானவன் தான் சுதாவாய் அறியாமல் மற்றொருவன் சொல்லக்கேட்ட சங்கதியைச் சொல்லுவந்தால் அப்படிப்பட்ட சாக்ஷியம் சுருதசாக்ஷிய மெனப்படும். எவன் சொன்ன சங்கதி மறுபடியும் சொல்லப்பட்டிருக்கின்றதோ அவன் சத்தியத்திற்காவது பிரமாண வசனத்திற்காவது உட்படுத்தப்பட்டிருக்கவில்லை, அவனைக் கோர்ட்டில் எதிர் கேள்விகள் கேட்கவில்லை, என்கிற இரண்டு காரணங்களைப்பற்றி அப்படிப்பட்ட சாக்ஷியம் பெரும்பாலும் நீக்கிவிடப்படுகின்றது.

கக௫. எப்படியெனில் சாக்ஷியாகிய ராமன் விவாதத்திலிருக்கும் விஷயத்தைக்குறித்துச் சோமன் சொல்லத் தான் கேட்டதைக் கோர்ட்டாரிடத்தில் சொல்லக்கூடாது. ஏனெனில் சோமன் சட்டப்படி பிரமாணஞ் செய்யாமலும் எதிர் கேள்வி கேட்கப்படாமலும் அதைச் சொன்னதினாலே தான். சோமன் பரிகாசமாயாவது தகுந்த யோசனை செய்யாமலாவது சொல்லியிருந்தாலுமிருக்கலாம், அல்லது வேண்டுமென்று பொய்ச் சொல்லியிருந்தாலுமிருக்கலாம். மேலும் அவன் பிரமாணத்தின்பேரில் பகிரங்கமாய்க் கோர்ட்டில் விசாரணைச்செய்யப்பட்டால் அப்போது அவன் ஒருவேளை வேறுவிதமாய்ச் சொல்லியிருப்பான். இல்லாவிட்டால் எதிர கேள்வி கேட்பதினால் அவன சொன்ன சங்கதி பொய்யென்று தெரிந்து கொள்ளப்பட்டிருக்கலாம்.

கக௬. மேலும் "சுருதம்" என்கிற மொழியினால் ஒருவன் சொல்லக்கேட்ட சங்கதியைமாத்திரம் குறிக்கிறதாகத் தோன்றியபோதிலும் ஒருவர் பொருப்புப்பட்டு எழுதிக் கொடுத்தவையாயிராத சாமானியமான லிகிதங்களும் அதில சேர்ந்திருக்கின்றதாக ஏற்றுக்கொள்ள வேண்டியது. ஆகையால் கக்ஷிக்காரர்களல்லாத வேறொருவனால் எழுதப்பட்ட ஒரு கடிதம் கொண்டுவந்து காட்ட

ப்பட்டால் அதில் சொல்லியிருக்கிற சங்கதிகள் நிச்சயம் என்பதற்கு அது சாக்ஷியமாய் அங்கிகரிக்கப்படத்தகாது. ஏனெனில் அந்தச் சங்கதிகள் உண்மை என்பதற்கு அந்தக் கடிதத்தை எழுதினவன் சத்தியஞ் செய்யவுமில்லை, அதைக்குறித்து அவன் எதிர் கேள்வி கேட்கப்படவுமில்லை.

கஙஎ. பிலிப்ஸ் என்பவர் தெரிவித்திருக்கிறபடி சுருத சாக்ஷியத்தைவிட பிரத்தியேக மானவையென்று பகுத்தறியத்தக்க விஷயங்க ளிரண்டுண்டு. அவ்விஷயங்களின் சாக்ஷியத்தைச் சுருத சாக்ஷியமென்று சொல்வது சரியல்ல.

(முதலாவது) "பூர்வம் ஒரு வியாச்சியத்தின் விசார "ணையில் பிரமாணத்தின்பேரில் விசாரிக்கப்பட்ட சாக்ஷி "க்காரன் இறந்துபோயிருக்கிற பட்சத்தில் இரண்டாவது "வியாச்சியத்திலும அந்தக் க்ஷிக்காரர்களே விவாதப்ப "ட்டிருந்த விவாத அம்சமும் முன் வியாச்சியத்திலுள் "ளதாகவே யிருந்தால், அப்படி இறந்தவனுடைய சாக்ஷி "யம் இரண்டாவது வியாச்சிய விசாரணையில் ஏற்றுக் "கொள்ளத் தக்கதாகும். மேலும் அவன் சாக்ஷிசொல்லு "ம்போது கேட்டுக்கொண்டிருந்தவனால் அது ருசுச்செய் "யப்படலாம். ஏனென்றால் அந்தச் சாக்ஷியம் பூர்வ வி "சாரணையில் பிரமாணத்தின்பேரில் கொடுக்கப்பட்டதே "யொழிய விவகாரத்துக்கு விரோதமான விதமாய்க் கொ "டுக்கப்பட்டதல்ல. இரண்டு வியாச்சியங்களின் க்ஷிக் "காரர்களும் விவாதத்திலிருந்த அம்சமும் ஒன்றாகவே "யிருப்பதுமல்லாமல எதிர் கேள்வி கேட்பதற்கும் அவ "காசமும் கொடுக்கப்பட்டிருந்தது. இந்தச் சங்கதிகளி "னுலே மேற சொல்லப்பட்ட சாக்ஷியம் சுருதசாக்ஷியத் "தைவிட வேறு விதமானதென்று ஸ்பஷ்டமாய்த் தெரிய "வருகின்றது." பி-சா-"சுருதம் என்பது சாக்ஷியமல்ல" என்கிற விஷயம்.

கடஅ. அந்தப்படியே ஒரு கிரிமினல் வியாச்சியத்தில் சாக்ஷிக்காரன் விசாரணைக்குமுன் இறந்துபோனாலும் யாதொரு தகுந்த காரணத்தைபபற்றி அவன் வரக்கூடாமலிருப்பதாகக் கோர்ட்டாருக்கு ருசுவானாலும், அவனுடைய வாக்குமூலத்தில் அவனை விசாரணைசெய்த மாஜிஸ்திரேட்டு கையெழுத்துச்செய்திருந்து அது குற்றஞ்சாட்டப்பட்டவன் முன்னிலையில் பிரமாணத்தின்பேரில் எழுதப்பட்டதாயிருந்தால், அது சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்படலாம். கஅக·(ஒரு) உரு-வது ஆக்ட்டு-கடகூகூ-பி. செ·சளகூ-பி. மா-டை-பு-வி· கிரிமினல் சாஸ்திரவிஷயம்·கஉக.

கடக. அப்பிரகாரமே கஅருக ஒரு ப் துஅ-வது-ஆக்ட்டு களுரு-வது-பிரிவின்படி அதிகாரம் பெற்றிருக்கிற கமிஷனர்களினால் விசாரணை செய்யப்பட்ட ஆஜரில்லாத சாக்ஷியினுடைய வாக்குமூலம்-சளகூ-வது பிரிவினபடி எதிர் கக்ஷிக்காரனுடைய சம்மதத்துடனாகிலும் அல்லது "அப்படி சா"க்ஷிசொன்ன நபர்கோர்ட்டெல்லைக்கப்பால இருக்கிறனென்"ன்றாவது, இறந்துபோய் விட்டானென்றாவது, வியாதியி"னாலாகிலும் தள்ளாமையினாலாகிலும் நேரில் ஆஜராகமா"ட்டாதவனாயிருக்கிறனென்றாவது, ஆதானியோசனையோ"டுபோயிராமல், யதார்த்தமாய்க் கோர்ட்டு இருக்கிற இட"த்திற்கு நூறுமயில் தூரத்துக்கப்பால் வாசஞ்செய்துக்"கொண்டிருக்கிறனென்றாவது, மேன்மையைப்பற்றியா"கிலும் ஸ்திரீஜாதியாயிருப்பதைப் பற்றியாகிலும் நேரா"ய்க் கோர்ட்டில் ஆஜராக வேண்டியதில்லையென்று உத்த"ரவு செய்யப்பட்டிருப்பதாகவாவது" ருசுவானதின்பேரிலாகிலும் ஒப்புக்கொள்ளப்படத்தக்கதாயிருக்கின்றது. "ஆனால் கோர்ட்டாருக்கு யுக்தமாகத் தோற்றினால் மேற்"படி சங்கதிகளில் எதுவும் ருசுச்செய்யப்பட வேண்டிய"தில்லையென்று தள்ளிவிடலாம்; அல்லது, எந்தச்சாக்ஷியி"னுடைய வாக்குமூலமாவது வாசிக்கப்படும் காலத்தில் "எதைப்பற்றி அந்த வாக்குமூலம் வாங்கவேண்டியிருந்த

"தோ அந்த அவசரம் போய்விட்டதென்று ருசுவானபோ
"திலும் அந்த வாக்குமூலத்தைச் சாக்ஷியமாக ஏற்றுக்கொ
"ள்ளும்படி உத்தரவு செய்யலாம்."

கஎ0. மேற்கண்ட பிரிவுக்கடுத்த (௪௮0-வது) பிரிவில் அந்தந்த இடங்களிலேயே விசாரணை செய்யும்படி நியமிக்கப்பட்டிருக்கிற கமிஷனருடைய ரிப்போர்ட்டையும் அவரால் வாங்கப்படும் வாக்குமூலங்களையும் சாக்ஷியமா யேற்றுக்கொள்ளலாமென்று விதி ஏற்பட்டிருக்கின்றது. அந்தக் கமிஷனரிடத்துக்கு விசாரணைக்காக அனுப்பப்பட்ட எந்தச் சங்கதிகளைக் குறித்தாவது அவருடைய ரிப்போர்ட்டில் தெரியவந்திருக்கிற எந்தச் சங்கதிகளைக் குறித்தாவது அவர் விசாரணை நடத்தின விதத்தைக் குறித்தாவது அந்தப் பிரிவின்படி கோர்ட்டாராவது அவர்களுத்தரவின்பேரில் கக்ஷிக்காரர்களாவது அயலாக் கோர்ட்டில் பகிரங்கமாய் விசாரணை செய்யலாம்.

கஎக. கணக்குகளைப் பரிசோதிப்பதற்காக நியமிக்கப்படும் கமிஷனருடைய ரிப்போர்ட்டைச் சாக்ஷியமாயேற்றுக்கொள்ளவேண்டுமென்று ௪௮௪-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கின்றது. க௮௬௯ௐ ௪-வது ஆக்டில் சொல்லியிருக்கிற இந்த விஷயங்களுக்கும் சாமானியமான கேள்வி சாக்ஷியத்திற்கும் வித்தியாசமுண்டாயிருப்பதாகத் தெரியவருவதால் அவைகளை இவ்விடத்தில் உதகரிக்க லாச்சுது.

கஎ௨. (இரண்டாவது.) அந்த சாக்ஷியத்தைவிட பிரத்தியக்ஷமானதாய்ப் பிலிப்ஸ என்பவர் சொல்லியிருக்கிற இரண்டாவது விஷயமென்னவெனில், மற்றொருவனால் சொல்லப்பட்டதாக ஒரு கக்ஷிக்காரன் கோர்ட்டாருக்குச் சொல்லத்தொடங்கிய வார்த்தைகள் விசாரணையிலிருக்கும் விஷயத்தைச் சார்ந்த ஒரு பாகமாயாவது அல்லது அதின் பிரகிருதியை நிரூபிக்கும்படியாக அதனுடன் மிகவுஞ் சம்பந்தப்பட்டாவது இருக்கிற விஷயமாம்.

௧௪௩. வாய்மொழியாயாவது லிகித மூலமாயாவது கொடுக்கப்படும் கட்டளை விஷயமாயாவது அவசி ஷ தர்ப்பாஷை முதலிய விஷயமாயாவது சொல்லப்பட்ட மொழிகளாவது எழுதப்பட்ட எழுத்துக்களாவது சுதாவாக விசாரணை விஷயமாயிருந்தால் அப்படிப்பட்ட மொழிகளின் சாக்ஷியம் மூலசாக்ஷியப் பிரகிருதியுடையதாயும் சுருத சாக்ஷியத்தைவிட பிரத்தியேகமானதாயும் இருக்கிறதல்லவா. எப்படியெனில், துராலோசனைக் கட்டுப்பாடு விஷயங்களில் முன்னமே சொல்லியிருக்கிறபடி எல்லாருடைய எண்ணமும் கைக்கூடி வரும்படியாய் உத்தேசத்தை அநுசரித்து இதர துராலோசனைக்காரர்கள் சொல்லிய வசனங்கள் அந்தக் கட்டுப்பாட்டிற்சேர்ந்த யாவரும் சொல்லியதாகவே கொள்ளப்படும். அப்படிப்பட்ட விஷயங்களில் அந்த மொழிகளே விசாரணை விஷயமாயிருப்பதால் அவற்றைக்குறித்த சாக்ஷியம் மூலசாக்ஷிய சுபாவமுடையதாயிருக்கின்றது. ஆயினும் அந்தத் துராலோசனைச் சம்பந்தமான காரியங்களைக்குறித்து அதிற் சேர்ந்தவர்களில் ஒருவனால் சொல்லப்பட்ட அல்லது எழுதப்பட்டவேயுள்ள சரித்திரமாவது வரலாறாவது சுருத சாக்ஷியமென்று நீக்கிவிடப்படும். ஏனெனில், அது முன்னதாயாலோசிக்கப்பட்ட ஏற்பாட்டை அனுசரித்து அந்தத் துராலோசனைக்காரர்களுடைய சாமானியமான உத்தேசத்தோடு செய்யப்பட்டிராததாகையால் அதைத் துராலோசனைக் காரர்கள் எல்லாரும சொல்லிய வசனமாகக் கொள்ளக் கூடாது.

௧௪௪. மேலும் "ஒரு முக்கியமான காரியத்தின் பிர "கிருதியைக் குறித்தாவது அந்தக்காரியத்தைச் செய்த "வனுடைய உத்தேசத்தைக் குறித்தாவது விசாரிக்கவேண் "டியது அவசியமாயிருந்தால், அந்தக் காரியத்தை நடப்பி "த்த காலத்தில் அவன் சொன்ன வார்த்தைகளின்றுசு அந் "தக்காரியத்தின் நிஜமான தன்மையைத் தெரிவிப்பதற்கு "ச்சாக்ஷியமாக அங்கீகரிக்கத்தகும்." பி-சா-௯-பு-௨௨௦-ப.

எப்படியென்ருல் ஒருவன் இன்ன உத்தேசத்துடன்தன் வீட்டைவிட்டுப் போனுனென்று ரூபிக்கவேண்டியது மு க்கியமாயிருந்தால் அவன் வீட்டை விட்டுப் போகும்போ து சொல்லிய வார்த்தைகள் வேறு காரியங்களுக்கு உத வாமற் போனபோதிலும் அவனுடைய உத்தேசத்தைத் தெரிவிப்பதற்கு சாக்ஷியமாக அங்கீகரிக்கப்படத் தக்கதா யிருக்கும். (பி - சா-உஉ ௦.) "மேலும் புருஷனுனவன் தன் "மனைவியை இம்சிப்பதினுல் அவள் தன் வீட்டை விட் "டுப் போகும்படி செய்தானென்று ருசுப்படுத்தும்பொ "ருட்டு அவள் வீட்டைவிட்டுப் போகுங் காலத்தில் சொ "ன்ன வார்த்தைகள் அவள் புருஷன்பேரில் அந்தச் சங் "கதியை ருசுப்படுத்துவதற்கு அங்கீகரிக்கத்தக்க சாக்ஷி "யமென்று தீர்மானிக்கப்பட்டது." ஸ்டா-அஎ.

கசரு. இவைப்போன்ற காரணங்களைப்பற்றியே ஒரு கடன்பத்திரத்தின் தொகை எவனுக்குக் கொடுக்கும்படி கண்டிருக்கின்றதோ அவனுலாவது அல்லது எவன் பே ருக்கு இண்டார்சு செய்யப்பட்டிருக்கின்றதோ அவனு லாவது அந்தப் பத்திரமெழுதப்பட்ட காலத்தில் பத்திர மெழுதிக்கொடுத்தவன் பேருக்கு எழுதப்பட்ட கடிதங் கள் அந்தப் பத்திரத்தின் தொகை பெற்றுக்கொள்ளப் பட்டதென்று ருசுப்படுத்துவதற்குச் சாக்ஷியமாக அங்கீ கரிக்கப்பட் டிருக்கின்றன. பி-சா-கூ-பதி-உஉ௦-ப.

கசசு. ஆனுல் எந்தக் காரியம் நடத்தப்படும்போது அவ்வார்த்தைகள் சொல்லப்பட்டனவோ அந்தக் காரியம் விசாரணைக்கு முக்கியமானதா யிருக்கவேண்டிய தவசி யம். மேலும் நாம் யோசித்துக்கொண்டிருந்த வார்த்தை கள் விசாரணையிலிருக்கும் விஷயத்திலேயே சேர்ந்த ஒரு பாகமா யிருப்பதினுலேயோ அல்லது அந்த விஷயம் அவ் வார்த்தைகளினுல் விசிதமாகின்ற தென்பதனுலேயோ (சாக்ஷியமாய்) அங்கீகரிக்கப்படத் தக்கவையாயிருக்கின்

றன. அவ்வார்த்தைகள் பிந்தி சொல்லிய ஏதுவைப் பற்றி அங்கீகரிக்கப்படுமிடத்தில் அவைகளின்பேரில் உண்டாயிருக்கிற மதிப்பானது அவை அவ்விடத்திலேயே முன்னாலோசனையாவது யத்தனமாவது இல்லாமல் சுதாவாய்ச் சொல்லப்பட்டிருக்கிற சங்கதியைப் பற்றியதா யிருக்கின்றது. அதனால் அந்த வார்த்தைகள் ஸ்டார்க்கி என்பவர் தெரிவிக்கிறபடி கக்ஷிக்காரனே ஒரு சாக்ஷியாய் விசாரிக்கப்பட்டால் அக் காரியத்தைக்குறித்துப் பின்பு என்ன சொல்லுவானோ அந்தச் சங்கதியைப் பார்க்கிலும் அந்தக் காரியத்தின் தன்மையைக்குறித்து உத்தமமான சாக்ஷியமா யிருக்கும். ஸ்டா-௮௧.

௧௪௭. மேலும் ஒருவன் மற்றொருவனா லடிக்கப்பட்டு காயப்பட்டால் அவன் தான் சகித்த சிரமத்தைக்குறித்தும், வேதனையைக் குறித்தும், தனக்கு சிகிச்சைசெய்யும் வைத்தியனுடன் சொன்ன மொழிகள் அவனுடைய வாஸ்தவமான தேகஸ்திதியை ருசுப்படுத்துவதற்குச் சாக்ஷியமா யங்கீகரிக்கப்படத் தக்கனவாயிருக்கின்றன. வியாதியஸ்தனுடைய தேகத்தின் வாஸ்தவமான ஸ்திதி இன்னசமயத்தில் இன்னவிதமா யிருந்ததென்பது விவாதஅம்சத்திற்கு முக்கியமாயிருக்கிற இதர விஷயங்களிலும் அப்படிப்பட்ட சாக்ஷியம் அங்கீகரிக்கப்படுகின்றது. மேலும் அப்படிப்பட்ட வார்த்தைகள் வைத்தியன் கேழ்க்கும் கேள்விகளுக் குத்தரவாயிருக்குமாயின் அந்தச் சாக்ஷியம் மிகவும் பலமானதாகக் காணப்படுகின்றது. ஏனென்றால் அந்த வைத்தியன் கேள்வி கேட்பது அவ்வியாதியின் சின்னங்களைக்குறித்து யோசிக்கத்தக்க ஒருவன் எதிர் கேழ்வி கேட்டதுபோ லாகின்றது. பி-சா-௯-பதி-௨௨௧-ப. ஸ்டா-௮௮ (௨) குறிப்பு. ரா-௨௪.

௧௪௮. ஒருவன்பேரில் வண்டியேறி அவன் மரணமடைந்தால் கார்ப்பண்ணியமில்லாமல் செய்யப்பட்ட அந்த நரவதைக் குற்றத்திற்காக வண்டிக்காரனை விசாரணை

ச்செய்யும்போது மரணமடைந்தவன் தனக்குக் காயம் பட்டவுடனே சொன்ன வார்த்தைகள் மேல் சொல்லப் பட்ட கோட்பாட்டின் பிரகாரம் சாக்ஷியமாக அங்கீகரிக்கப் பட்டது.

கசகூ. ஆனால் ஒரு வைத்தியனிடத்திலாவது மற்றொருவனிடத்திலாவது முறையிட்டுக்கொண்ட சங்கதி சிரமத்தையேற்றித்த சாக்ஷியமாயிருக்குமே யொழிய சிரமத்தை யுண்டாக்கினதாய்ச் சொல்லப்பட்ட யாதொரு முக்கியமான காரியத்திற்காவது அதற்குக் காரணமாயிருந்தானென்று யாதொரு மனிதன்மீது குற்றஞ் சாட்டுவதற்காவது அது சாக்ஷியமாக மாட்டாதென்று தோன்றுகிறது. இந்த ஏதுவைப்பற்றியே, ஸ்திரீயைக் கற்பழித்ததாகச் செய்யப்படும் பிராது விஷயங்களில் துன்பமடைந்த ஸ்திரீ அந்த துஷ்ட காரியத்தைக்குறித்து முறையிட்டுக்கொண்டாளா இல்லையாவென்று தெரிந்து கொள்ளவேண்டியது மிகவும் அவசியமாயிருப்பதால் அவள் அப்படி முறையிட்டுக்கொண்டதுண்டாவென்று பிராதுக்காரன் பக்ஷத்திய வக்கீல் ஒரு சாக்ஷியைக் கேட்கக் கூடுமானதாயிருந்தபோதிலும் எவன்பேரில் அவள் முறையிட்டுக்கொண்டாளோ அவன் பேரையாவது முறையிட்டுக்கொண்ட சங்கதியின் விவரங்களையாவது சொல்லச் சொல்லி அவன் கேட்கக்கூடாது. அந்த ஸ்திரீயே அப்படிப்பட்ட விவரங்களைக்குறித்து பிரமாணஞ்செய்து சொல்லவேண்டும். இதுவுமன்றியில் துன்பமடைந்த ஸ்திரீயினுடைய பிரத்தியக்ஷ சாக்ஷியத்தைக் கொண்டுவராமல் அக்கிரமமாய் நிறுத்திவைத்தால் அவள் முறையிட்டிருந்தாளெனகிற சங்கதியைக்குறித்த சாக்ஷியம் கேவலம் உபபலமான சாக்ஷியமாயிருக்கிறதினால் அங்கீகரிக்கப் படத் தக்கதாகாது. ரா-உக-ப-ல்-கட்ரிட்ஜ் என்றவனுடைய வியாச்சியம். ஸ்டா-அஅ (z) குறிப்பு. பி-சா-கூ-பதி-உஉ-ப.

கடு0. ஈருத சாக்ஷியமானது அடியில் வருகிற விஷயங்களில் பின்னால் சொல்லப்படும் விதிகளின்படி அங்கீகரிக்கத் தக்கதாயிருக்கும்.

முதலாவது. ஒருவியாச்சியத்தின் கக்ஷிக்காரன் தன் பிரயோஜனத்துக்கு விரோதமாய்ச் செய்யும் ஒப்புதல்கள்.

உ-வது. குற்ற ஒப்புதல்கள்.

ங-வது. லோக உபயோக விஷயங்கள்.

ச-வது. வம்சாவளி பந்துத்வம் அல்லது சம்பந்தம்.

ரு-வது. பூர்வீகமான சுவாதீனம்.

சு-வது. அன்னியரால் பிரயோசனத்துக்கு விரோதமாய்ச் சொல்லப்பட்ட மொழிகள், அல்லது எழுதப்பட்ட பதிவுகள்.

எ-வது. அலுவலை நடத்தும்போது வழங்குகிற வார்த்தைகள், அல்லது எழுதப்பட்ட பதிவுகள்.

அ-வது. இறந்துபோகிறவர் மரணசமயத்தில் சொல்லும் வார்த்தைகள்.

கூ-வது. வைத்தியர்களின் வாக்குமூலங்கள். (கிமிகல் எக்ஸாமினர்) ரசவாத பரிக்ஷகர்களின் ரிபோர்ட்டுகள்.

கடுக. ஒரு வியாச்சியத்தின் கக்ஷிக்காரனாவது அவன் பங்குக்காரனாவது அவன் காரியஸ்தனாவது எவன் மூலமாய் அவன் வழக்கிடலாமோ அந்த மனிதனாவது தன்னுடைய சொந்த பிரயோசனத்திற்கு விரோதமாய் ஒப்புக்கொண்டிருக்கும் ஒப்புதல்கள், அந்தக் கக்ஷிக்காரனுக்கு விரோதமான சாக்ஷியமா யேற்றுக்கொள்ளப் படத்தக்கவையாம். ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதிகள் விவாத பத்திரங்களிலேயாவது தெரிவிக்கப்பட்டிருக்கலாம். இல்லாவிட்டால் சில சமயங்களில் வாய்மொழியாயாவது விதிமூலமாயாவது ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கலாம்.

கருஉ. நியாய ஸ்தலத்தில் ஒரு வியாச்சியம் நடந்துக் கொண்டிருக்கிறகாலத்தில் விவாத பத்திரங்களில் கண்டிருக்கும் பலனைக்குறித்து இந்த கிரந்தத்தில் விவாதவிஷயத்தைப்பற்றி எவ்வளவுதூரம் விசாரணை செய்யலாமோ அதைவிட அதிகமாய் பிரவேசித்தாலொழிய நன்ருய்த் தெரிந்துகொள்ளக் கூடாமையாயிருக்கும். ஆயினும் இந்தக் கடினமான விஷயத்தைக்குறித்து இங்கிலண்டு தேசத்தில் வழங்குகிற மிகவு முக்கியமான சில நிபந்தனைகளை யோசிப்போம்.

கருா. "எதிர்க்கக்ஷியில் சொல்லப்பட்ட எந்தச் சங்கதி "வாதத்தில் மறுதளித்து வாதிக்கப்பட மாட்டாதோ "அப்படி மறுதளித்து வாதிக்கப்படத்தகுந்த விஷயத்தை "ஒப்புக்கொள்வதாக எதிர்வாதத்தில் கிரகிக்கப்படுமெ "ன்பது ஒருவிதியா யிருக்கின்றது." (வாதத்தைக்குறித்த ஸ்டீவன்ஸ் என்பவருடைய கிரந்தத்தின் கஅக-ப-) எப்படியென்ருல் எதிர்கக்ஷியில் சொல்லப்பட்ட முக்கியமான வசனங்களைக்குறித்து விவாதத்தில் யாதொரு ஆக்ஷேபணையும் செய்யப்படாமலிருந்தால் அப்படிப்பட்ட வசனங்களெல்லாம் ஒப்புக்கொள்ளப் பட்டதாகவே கொள்ளப்படும். ஆனல் அப்படிப்பட்ட வசனங்கள் விவாதங்களைக் குறித்து ஏற்பட்டிருக்கும் நிலையான விதிகளின்படி எப்படிப்பட்டவையானுல் ஆக்ஷேபிக்கப் பட்டிருக்கலாகுமோ அப்படிப்பட்டவையா யிருக்கவேண்டும். மா-டை-பு-வி-சாக்ஷியவிஷயம்-கஎ-வது-பக்கத்தில் உதகரிக்கப்பட்டிருக்கிற ஸர்ப்ஜீத் ஸிங்கு என்பவர் கார்தாசங்கு சௌகிதாரன் முதலானவர்கள்பேரில் செய்த வியாச்சியம் மேற்சொல்லப்பட்ட வகுப்பில் சேர்ந்ததா யிருக்கின்றது. "ப "யிரிட்ட தானியத்தை (எந்த ஒப்பந்தப்பிரகாரம் ஜமீந்தா "ரனும் குடித்தனக்காரனும் பங்கிட்டுக் கொள்ளுகிருர்க "ளோ அப்படிப்பட்ட) பெயோலி என்கிற ஒப்பந்தத்தின் படி சிலபேர் சில நிலங்களைப் பயிரிட்டு முழுமையும் அப

"த்து எடுத்துக்கொண்டு போய்விட்டதாக ஒருவன் வியா
"ச்சியம் கொண்டுவந்தான். அதற்கு அந்தப் பயிரிட்டவர்
"கள் சரியான காலத்தில் தங்களுக்கு விளை கொடுக்கவி
"ல்லையென்றும் அப்படி கொடுத்தபோது அந்த விளை பழு
"யதாயும் கெட்டுப்போனதாயு மிருந்ததென்றும் மறுமொ
"ழி சொன்னார்கள். அப்படிப்பட்ட உத்தரத்திலால் அந்த
"பெயோலி ஒப்பந்தத்தை அவர்கள் பரிஷ்க்காரமாய் ஒப்
"புக்கொண்டதாக விதிக்கப்பட்டது.

கருச. "மறுதளித்து வாதிக்கத்தக்க விஷயம்" என்ன
வென்று விசாரிக்குமிடத்தில் மறுதளித்து வாதிப்பதென்
பது எதிர்க்கக்ஷிக்காரனால்வாதிக்கப்பட்ட சங்கதியைப்பற்றி
ன விஷயத்தை மறுதளிக்கும்படியான வாதமென்று ஞி
யாபகத்தில் வைக்கவேண்டும். ஆகையால் கேவலம் தர்ம
சாஸ்திரத்தைக்குறித்த ஓர் அம்சம் மறுதளித்து வாதிக்
கப்படக்கூடாது. ஆயினும் தரும சாஸ்திரத்தையும் நட
ந்த சங்கதியையுங்குறித்த வசனம் மறுதளித்து வாதிக்கப்ப
டலாம். மேலும்எதிர்க்கக்ஷிக்காரன் தன வாதத்திற்சொல்லா
த விஷயத்தையாவது அந்தவாதத்திலாவ்அகதநியமாய் விள
ங்காத விஷயத்தையாவது மறுதளிக்கும் படியாய்வா
திக்கலாகாது. கடைசியாய்,ஒரு மனிதன் சில சந்தர்ப்ப
ங்களில் சங்கதிகளை மறுதளிக்கும்படியாய் வாதிப்பதினி
ன்றும் தடுக்கப்பட்டிருப்பதாக நேரிடுகின்றது. எப்படி
யெனில், ஒரு குடிக்கூலிக்காரன் தான் குடிக்கூலி செலுத்து
கிற நிலக்காரனுடைய பாத்தியதையை மறுதளிக்காமலி
ருக்கும்படி தடுக்கப்பட்டிருக்கிறான். ஸ்டி - கக்எ -ஞூ-
கள௦-வரைக்கும்-கஅஉ-ம்.

கருகு. ஒரு வாதத்தில் ஒரு சங்கதி ஒப்புக்கொள்ளப்
பட்டால் அது எந்த வியாச்சியம் நடக்கும்போது ஒப்புக்
கொள்ளும்படி நேரிடுகின்றதோ அந்த முக்கியமான வி
யாச்சியத்தில்மாத்திரஞ் செல்லுமென்றும் அதற்குப்பின்
தொண்டுவரப்படும் எந்த வியாச்சியத்திலும் முடிவான

தாக உபயோகிக்கப்படக்கூடாதென்பது ஓர் பொதுவிதி யாயிருக்கிறதென்றுந் தோன்றுகின்றது. ஆயினும் பின்பு கொண்டுவரப்பட்ட வியாச்சியம் முதல் வியாச்சியத்தில் செய்யப்பட்ட தீர்ப்பின்பேரில் கொண்டுவரப்பட்டதா யிருந்தால், முதல் வியாச்சியத்தில் வாதத்திலொப்புக்கொள்ளப்பட்டது இரண்டாவது வியாச்சியத்தில் உபயோகிக்கப்படலாம்.(௭-எசஞ-எசகூ-எசஎ-பி-கள்.) எப்படியாயினும் பின்பு கொண்டுவரப்பட்ட வியாச்சியத்தில் விவாத பத்திரங்களில் கண்ட ஒப்புதல்கள் அந்த விவாதபத்திரங்களில் கண்ட சங்கதிகளெல்லாம் உண்மையானவையென்று தெரியப்படுத்தத்தக்க உறுதி வசனங்களென்று எல்லாவிஷயங்களிலும் எண்ணப்படக்கூடாதொழிய கக்ஷிக்காரன் தன்னுடைய வழக்கைக்குறித்து சொல்லுகிற சங்கதிகளாகமாத்திரம் எண்ணப்படவேண்டும். அப்படிப்பட்ட சங்கதிகள் ஒப்புக்கொள்ளப் படுவதற்காகவாயினும், மறுப்பதற்காகவாயினும் அப்படி மறுப்பதாயிருந்தால் ருசுச்செய்வதற்காயினும் சொல்லப்பட்டிருக்கும். ஆயினும் ஒரு முக்கியமான விவகார காரியதினிமித்தமாய்ச் சொல்லப்பட்ட கேவல வசனங்கள் விவாத அம்சத்தைப்பற்றிக் கோர்ட்டாருடைய தீர்ப்பு திடமாய் எந்தெந்த சங்கதிகளைக்கொண்டு செய்யப்பட்டிருக்கலாமோ அப்படிப்பட்டமுக்கியமானவையும் அந்த வசனங்களுடன் சேர்க்கப்பட்டவையுமான சங்கதகளைக் குறித்துமாத்திரம் வேறொரு விவகாரத்தில் முடிவான சாக்ஷியமாயிருக்கக்கூடும். அந்த விஷயத்திலும் அந்த வசனங்கள் தீர்ப்பினால் உறுதிப்படுத்தப்பட்டனவென்கிற காரணத்தைக்கொண்டும் உண்மையானவையென்று எண்ணப்படவேண்டியதென்கிற காரணத்தைக்கொண்டும் அதேசுக்ஷிக்காரர்கள்விஷயத்தில் முடிவானதாயிருக்குமொழிய அந்தக் கக்ஷிக்காரருடைய வசனங்களென்கிற ஏதுவைப்பற்றியல்ல." (ம-ஹை-கோ-ரி-௫-பு-௩௪-பக்கத்தில் கண்ட சிவராவ ரீகசிவ எதிரி வீவராகவு

வியாச்சியம்.) எந்த வியாச்சியத்தில் ஒரு சங்கதி வாதத்தில் ஒப்புக்கொள்ளப்படுகின்றதோ அந்த வியாச்சியத்திலேயே அந்த ஒப்புக்கொள்ளுதலினாலுண்டாகும் முடிவைக்குறித்து டெயிலர் என்பவர் சாக்ஷியத்தைக்குறித்து எழுதியிருக்கிற கிரந்தத்தின்-௭௬௪-வது-பிரிவில் சொல்லப்பட்டிருக்கிற விதி என்னவெனில் "நன்றாய் வாதிக்கப்பட்ட ஒரு "முக்கியமான வசனத்தை எதிர்கக்ஷிக்காரன் வாதத்தில் "ஒப்புக்கொள்வதினாலாவது விலக்குவதினாலாவது யா "தொரு இதர விஷயத்தையாவது மறுதளித்து வாதிப்பதி "னாலாவது சட்டப்படி தடைப்படுத்துவதினாலாவது வியா "ச்சியத்திற் கெதிர்வாதஞ்செய்யாமல் போவதனால் பிரதி "கூலமான தீர்ப்பைச்செய்ய ஒட்டுவதினாலாவது அந்தவ "சனத்தை மறுக்காமல் விட்டுவிட்டால் அப்படிக்கி வி "ட்டுவிடுவதனால் அது விசாரணைக்காக அல்லாமற்போனா "லும் வாதத்தின்பொருட்டாவது ஜூரிகளின் முன்னிலை "யில் முடிவானதாய் ஒப்புக்கொள்ளப்பட்டதாக எண்ண "ப்படும்." ௩௯0-பி-பார்த்துக்கொள்க.

௧௫௯. அந்த ஒப்புதல் வாதிக்கப்படக்கூடாத அவசியமற்ற சங்கதிகளுக்கு உபயோகப்படமாட்டாது. மேலும் வேறே ஏதாவதொரு அம்சத்தை மறுதளித்து வாதிப்பதினால் ஒரு கக்ஷிக்காரன் ஒப்புக்கொண்டதாக வெளியானால் மறுதளித்து வாதிக்கப்பட்ட சங்கதி அவனுக்கு விரோதமாய் தீர்ப்புச்செய்யப்பட்டாலொழிய அப்படி ஒப்புக்கொண்டவனுக்கு அதனால் நஷ்டமிராது. இந்த அம்சம் ஒரு கடன்பத்திரத்தைக்குறித்து ராபின்சு என்பவர் லார்ட்டு மெயிட்ஸ்டன் என்பவர்பேரில் கொண்டுவந்த வியாச்சியத்தில் பரிஷ்கரிக்கப்பட்டிருக்கின்றது. அந்தப் பத்திரத்தின் பிரதிபலன் அதிற்கண்ட மொத்தத்தைப்பார்க்கிலும் குறைந்ததாகையென்றும் அதுவுஞ் செலுத்தப்பட்டதென்றும் பிரதிவாதி வாதித்தான். வாதியானவன் அதன்பேரில் அந்தத்தொகை செலுத்தப்பட்டதாய்ச் சொன்ன சங்க

நியைமறுத்து பிரதிபலன் பத்திரத்திற்கண்டதொகையைப் பார்க்கிலும் குறைந்ததென்றுசொன்னசங்கதியை பிரஸ்தாபியாமல் மறுமொழிகொடுத்தான். அந்த வியாச்சியம் வாதிபக்ஷம் தீர்ப்புசெய்யப்பட்டு அந்தப் பத்திரத்தில் கண்டதொகை முழுமையும் அவனுக்குக்கொடுக்கும்படி உத்தரவு செய்யப்பட்டது. எதினாலெனில் பிரதிவாதி செலுத்தின சங்கதியை ருசுச்செய்யாமற்றப்பிப்போனதால் அவனுடைய வாதம் யெவ்வளவும் சித்தியாமல் போயிற்று. ஆகையால் [illegible]வாதி ஒப்புக்கொண்டதாக வெளியான சங்கதி பிரதிவாதிக்கொன்றும் பிரயோஜனகர மாகாமற் போயிற்று. (டெ-எசஅ-ஹ்-எருஉ-வகாயில்-பி-கள்.) எந்தச் சங்கதியாயினும் அந்தப்படி ஆக்ஷேபமில்லாமல் வாதத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டால் மறுதளித்து வாதிக்கப்பட்ட வசனத்தை எதிர்கக்ஷிக்காரன் ருசுப்படுத்துவானென்கிற நியமத்தின்பேரில் அது ஒப்புக்கொள்ளப்பட்டதாக யோசிப்பது மிகவும் யுக்தமாயிருக்கும். டெ-எ௫உ-பிரிவின் குறிப்பில் உதகரிக்கப்பட்ட கவுலிங் எதிரி காக்ஸ் வியாச்சியம்.

கருஎ. கிரமமான வாதங்களில் ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதிகளைக்குறித்து இங்க்லண்டுதேசத்தில் நடக்கும் வழக்கமானது கஅருக௫ அ-வது ஆக்டின்படி. இண்டியாதேசத்தில் வழங்கிவருகிற மிகவும் பேதமான ஏற்பாட்டின்படி எவ்வளவுவரையில் உபயோகமாகுமென்பது இன்னமும் நிர்ணயிக்கப்படவில்லை. ஆயினும் இண்டியாதேசத்தின் ஏற்பாடானது, பூர்த்தியாய் விளாபகமாகும்போது இங்க்லண்டுதேசத்தின் வழக்கத்தைக்குறித்த மேற்கண்ட சங்கதி கொஞ்சம் உபயோகமுள்ளதாகலாம்.

கருஅ. வாதங்களினால் வேறுவிதமாய் ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதிகள் சுருத சாக்ஷியத்தினால் ருசுப் படுத்தப்படலாம். இந்த விஷயம் சாமானியமான சுருத சாக்ஷியத்தைப்போன்றதல்ல. ஏனெனில், ஒரு சங்கதி யதார்த்

தமானதா யிருந்தாலொழிய ஒருவன் தன் சுயப்பிரயோ சனத்திற்கு விரோதமாய் அதைப் புத்திபூர்வகமாய் ஒப்புக் கொள்ள மாட்டானென்கிற அநுமேயம் தருமசாஸ்திரத் தில் சொல்லி இருக்கிற பிரமாணத்திற்கும் எதிர் சேழ்விக ளுக்கும் மிஞ்சின ஆதாரமாயிருக்கும்படி அவ்வளவு பலமா னதாக இருக்கின்றது. மேலும் ஒரு வியாச்சியத்தின் க க்ஷிக்காரன் சுயபிரயோஜனத்திற்கு விரோதமாய் ஒப்புக் கொள்ளுஞ் சங்கதிகளைப்பற்றிய சாக்ஷியத்தை சுருதசாக்ஷி யமென்று நினைக்கிறதைவிட மூலசாக்ஷியத்தின் தன்மை யுள்ளதாக எண்ணலாமென்று தோன்றுகின்றது.

கருக. வாய்மொழியான ஒப்புதல்களைக்குறித்த சா க்ஷியத்தின் வலுமையானது சாக்ஷி யதார்த்த வாதியென் பதைக்குறித்து உடைத்தாயிருக்கும யோக்கியதையையும் அவனுடைய ஞாபக சக்தியையும் விசேஷமாய் அனுசரி த்திருக்கும். அந்த ஒப்புதலினுடைய பூர்ணமான வலிமை யும் சரியான கருத்தையும தெரிந்துகொள்ளும்பொருட்டு எந்த வார்த்தைகளினால் ஒப்புக்கொள்ளப்பட்டதோ அந்த வார்த்தைகளையும் அந்த வார்த்தைகள் சொல்லப்பட்டவித த்தையும் அதுகளுடன் சேர்ந்த சங்கதிகளையும் கூடியம ட்டுஞ் சரியாய் மருபடியுஞ் சொல்லவேண்டியது அவசி யம். மதிராஸைச்சார்ந்த ஜில்லாக்களில் கடனுக்காக கொ ண்டுவரப்படும் வியாச்சியத்தை ஸ்தாபிப்பதற்கு பிரதிவா திகடனை வாய்மொழியாய் ஒபபுக்கொண்டதைக் குறித்த சாக்ஷியத்தை வெகுசாய் கொண்டுவருகிறார்கள். ஆனாலெ திர் கேழ்வி கேட்டபோது சாக்ஷிகள் சாதாரணமாய் தப் பிப்போகிறார்கள்.

கசுo. எந்தக்கக்ஷிக்காரனுக்கு விரோதமாய் ஒரு சங்க தியை ஒப்புக்கொண்டதாக சாக்ஷியத்தினால் தெரியவரு கிறதோ அந்தக் கக்ஷிக்காரன் தஸ்தாவேசு முழுமையுமாவ து அந்த விஷயத்துக்குச் சம்பந்தப்பட்டவரைக்குமாவது படிக்கவேண்டியதென்றும் அல்லது வாய்மொழியான ஒ

ப்புதல் விஷயமாயிருந்தால் அந்த விஷயத்தைக்குறித்து நடந்த சம்பாஷணையை முழுமையும் மருபடியும் சொல்ல ச்சொல்லியும் நிர்பந்தப்படுத்துவதற்கு அவனுக்குச் சுதந்தி ரமிருக்கிறது. ஸ்டா-௩௩௪-ப. பெ-௫௦௨-பி. நா-௨௦௩-பி.

௩௬௩. சாக்ஷியத்தைக்குறித்த இங்கிலீஷ் சாஸ்திரத்தி ன்படி ஒப்புக்கொள்ளப்படும் சங்கதிகளுக்கு எவ்வளவு விசேஷமான பலமுண்டாயிருக்கிறதெனில் கொண்டுவந்து காட்டக்கூடியதாயிருந்தும் அப்படிக்கு கொண்டுவந்து கா ண்பிக்கப்படாத ஒரு தஸ்தாவேஜில் இருக்கிற சங்கதிகளை ஒரு கக்ஷிக்காரன் ஒப்புக்கொண்டதைக்குறித்த சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. (௩௦௮-பி-பார்த்துக் கொ ள்க.) அப்படிப்பட்ட சாக்ஷியம் மேற்கண்ட விதியின்ப டி அங்கீகரிக்கத்தக்கதா யிருந்தபோதிலும் அது விசேஷ மாய் மதிக்கத்தக்கதாவெனபது பிரத்தியேகமா யோசி க்கப்படவேண்டிய அம்சமாயிருக்கின்றது. மேலும் நடந் த சம்பாஷணையின் விவரங்களைச்சொல்வதில் அநேகர்கள் பிசகிப்போவதையும் இந்தநேசத்தில் உண்மையினிடத்தில் விசேஷ லக்ஷியமில்லாததையும் ஆலோசிக்குமளவில் கொ ண்டுவந்து காண்பித்திருக்கக்கூடிய ஒரு தஸ்தாவேஜின் சங்கதிகளை வாய்மொழியாய் ஒப்புக்கொண்டதைக் குறி த்த சாக்ஷியம் அந்த தஸ்தாவேஜையே கொண்டுவந்து காண்பித்தால் எவ்வளவு திருப்தியானதா யிருக்குமோ அவ்வளவு திருப்தியுள்ளதாயிராது.

௩௬௨. "ஒரு பிரதிவாதி சொல்லப்பட்ட மறுமொழி "மற்றொரு பிரதிவாதிக்கு விரோதமான சாக்ஷியமாகமா "ட்டாது." (ஸ்டா-௩௩௩.) ௧௮௬௪ஆ ஏப்பிரல்மீ ௧௦௨ யில் சென்னப்பட்டணம சதரதாலத்துக் கோர்ட்டாரா ல் திர்மானிக்கப்பட்ட ௧௮௬௦ஆ த்திய ௫௫௦-வது நம் பர் விசேஷ அப்பீல் வியாச்சியமானது மாதவன்செட்டி என்பவர் ஐயப்பன் என்கிறவன் பேரிலும் மற்றொருவன் பேரிலும் சில நிலத்தை வரப்பெற்றுக்கொள்ள வேணுமெ

ன்று கொண்டுவரப்பட்டது. முதல் பிரதிவாதி தாவாவை ஒப்புக்கொண்டபோதிலும் அந்த சொத்து இரண்டாவது பிரதிவாதியான தன் சகோதரனும் தானும் முன்னுதாக வே பங்கிட்டுக்கொண்டு அதை அவன் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டிருந்தானென்று வாதித்தான். இதன் பேரில் சதர்கோர்ட்டார் சொன்னதாவது, "இந்த இரண் "டு பிரதிவாதிகளுக்கும் லாப நஷ்டங்களைக்குறித்து ஒரு "மை யில்லையென்றும் நிலத்தை யனுபவிக்கிறவன் இரண் "டாவது பிரதிவாதியென்றும் முதற்பிரதிவாதி சொல்லிய "வார்த்தைகளினுலேயே பரிஷ்கா்ரமாய்த் தெரியவருகிற "படியால் அந்த முதல் பிரதிவாதி ஒப்புக்கொண்ட சங்கதி "இரண்டாவது பிரதிவாதியின்பேரில் செல்லமாட்டாது."

கசுஙு. கூட்டு வியாபாரவிஷயத்தில் ஒரு பங்குக்கா ரன் அவன் சுயபிரயோசனத்துக்கு விரோதமாயாதொரு சங்கதியைப்பற்றி மறுமொழி சொன்னுலும் அதை ஒப்பு க்கொண்டாலும் அது எதிர்கக்ஷிக்காரனுடன் சேர்ந்து வஞ் சனைசெய்து ஒத்துக்கொண்டதாக செய்யப்பட்டாலொழி ய மற்றொரு பங்குக்காரன் விஷயத்தில் பிரதிகூலமான சா க்ஷியமாக கிரகிக்கப்படும். ஆனுல் ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதி அந்த கூட்டு வியாபாரத்தில் சம்பந்தப்பட்டதா இ ருந்தால்தான் அதற்கு மற்றொரு பாகஸ்தன் பாத்தியப்ப ட்டவனுவான். அந்தப்படியே ஒரு காரியஸ்தன் ஒப்புக் கொண்ட சங்கதிக்கு முதலாளி கட்டுப்படவேண்டியிருந் தால் அந்தச் சங்கதி அந்தக் காரியஸ்தனுடைய அதிகார த்துக்குள்பட்டதா யிருக்கவேண்டும். ஒரு பங்குக்கார னுவது காரியஸ்தனுவது ஒப்புக்கொள்ளுஞ் சங்கதியான து அவன் மற்றொருவனேடு கூட்டாய் சேர்ந்து வியாபா ரம் செய்கிறனென்றுவது அல்லது தான் மற்றொருவனு டைய காரியஸ்தனென்றுவது முதலில் ருசுச்செய்யப்பட் டாலொழிய சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளத் தக்கதாயிரா து. அப்படி ருசுச் செய்வதற்காக ஒப்புக்கொண்டவன்

தான் பாகஸ்தனென்ருவது காரியஸ்தனென்ருவது ஒப்புக்கொள்வது போதுமானதாயிராது. (ஸ்டா-சசக-ப. கா. ௩உக-உ௨-௪-உ௨௫-பி-கள்.) எழுத்துமூலமான ரசீதைப்பற்றி ரசீது கொடுத்தவனுக்கும் அதைப் பெற்றுக்கொண்டவனுக்கு முண்டாகும் பலனைக்குறித்து பின்பு யோசிக்கப்படும்.

இங்கிலீஷ் தரும சாஸ்திரப்படி ஒரு சம்ரக்ஷணைக் கர்த்தனானவன் ஒப்புக்கொள்ளுஞ் சங்கதி பிரமாண பூர்வகமாயொப்புக்கொள்ளப்பட்ட போதிலும் விசாரணை நிமித்தம் ஒப்புக்கொள்ளப்பட்டதாக விருந்தாலொழிய சம்ரக்ஷிக்கப்பட்டவனுக்கு பிரதி கூலமாய் சாக்ஷியத்தில் அங்கீகரிக்கப்படமாட்டாது. (ஸ்டா-சசஉ-ப. டெ-கஎ௬.) பெண்சாதியானவள் எந்த விஷயங்களில் ஒப்புக்கொள்ளும்படி தன் புருஷனிடத்தில் அதிகாரம் பெற்றிருப்பாளோ அவ்விஷயங்களில்மாத்திரம் அவள் செய்யும் ஒப்புதலையினுல் அவன் கட்டுப்படுவான். கா-௨௨கூ-பி.

கசுச. ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதியானது ஒப்புக்கொள்ளுகிறவனுடைய பிரயோஜனத்திற்கு விரோதமாயிருக்கவேண்டிய தென்பதற்குச் சந்தேகமில்லை. அப்படிக் கில்லாவிட்டால் அது சாக்ஷியமா யங்கீகரிக்கப்படத்தக்கதாயிராது. மேலும் நிற்பந்தப் படுத்துவதினுலாவது மோசஞ்செய்வதினுலாவது சங்கதிகளை மாறுபாடாகத் தெரிவிப்பதினுலாவது பிசகாய்த் தெரிந்துகொண்டதனுலாவது ஒப்புக்கொள்ளச் செய்த எந்த ஒப்புதலும் சாக்ஷியமா யெற்றுக்கொள்ளப்படத் தகாததாகவே யிருக்கும். இதைப்பற்றியே "ஒருவன் ஒரு கீழ்கோட்டில் தானுய் வந் "திருந்து நியாயாதிபதியினுல் அக்கிரமமாய் நிர்ப்பந்தம் "செய்யப்பட்டதின்மேல் அவன் செய்த ஒப்புதல் செல்லாதத்தென்று எண்ணப்பட்டது." மா - டை-அ-வி-சாக்ஷியம்-அ௫.

கரு. ஒப்புக்கொள்ளப்பட்ட சங்கதியை சாக்ஷியத்தில் ஏற்றுக்கொள்வதற்கு அது எவ்வளவேனும் அக்கிரமமான சாதகத்தினால் உண்டானதாக இருக்கக் கூடாதென்பது மிகவும் அவசியமாகையால் வியாச்சியம் நடப்பிக்கிறதைப்பார்க்கிலும் உள்ளுக்குள்ளே சமாதானஞ் செய்துகொள்ளலாமென்றாவது ஒருவன் ரகசியமாய்ப் பேசிக்கொண்டிருக்க ஒப்புக்கொண்ட சங்கதிகள் அந்தரங்க விவகாரங்களாக எண்ணப்பட்டிருக்கின்றன. ஆதலால் அவை சாக்ஷியத்தில் அங்கிகரிக்கப்படத் தக்கவையன்று. ஏனென்றால் கோர்ட்டில் ஒருவன் எந்தச்சங்கதிகளை மறுதளிப்பானோ அந்தச் சங்கதிகளை சமாதானம் செய்துகொள்ளும்பொருட்டு ஒப்புக்கொள்ளலாம். பெ-ருக௦ பி. நா-உகரு-பி.

அப்படிப்பட்ட விஷயங்களில் ஒருவன் தான் லிகிதமூலமாயொப்புக்கொண்ட சங்கதி தனக்குப் பிரதிகூலமாயுபயோகப்படாமலிருக்கும்படி விரும்பினால் அந்த லிகிதத்திலாரம்பத்தில் "அபிமான விஷயம்" என்கிற வார்த்தைகளை எழுதுவதனால் அவனுக்கந்தசுதந்திர முண்டாகும். அந்தவார்த்தைகளைத் தலைப்பிலேயுடைய காகிதத்தை எழுதினவனுக் கனுகூலமாயாவது பிரதி கூலமாயாவது உபயோகிக்கக் கூடாது. பெ-ருக௦-பி. நா-உகசு-பி.

## குற்ற ஒப்புதல்கள்.

கசுசு. கிரிமினல் சம்பந்தமான குற்றஞ் சுமத்தப்பட்டவர்கள் அக்குற்றத்தை யொப்புக்கொள்ளுதல் சிவில் வியாச்சியங்களில் கக்ஷிக்காரர்கள் சங்கதிகளை ஒப்புக்கொள்வதற்கு மிகவும் ஒப்பாயிருக்கின்றது. ஒரு மனிதன் சுயப் பிரயோஜனத்துக்கு விரோதமாய், பொய்யானவார்த்தைகளை மனப்பூர்த்தியாய்ச் சொல்லமாட்டானென்கிற காரணத்தைப்பற்றி மேற்கண்ட இரண்டு விஷயங்களிலும் சுருத சாக்ஷிய மங்கீகரிக்கப்படுகின்றது. குற்ற

த்தை ஒப்புக்கொண்டதைக்குறித்த கருத சாக்ஷியத்தை எந்த நிபந்தனைகளின்படி அங்கீகரிக்கலாமென்பதை முத லில் யோசித்து அப்படிப்பட்ட சாக்ஷியத்தில் சாதாரண மாய் எவ்வளவு மதிப்பு வைக்கலாமோ அந்த விஷயத்தை க்குறித்துப் பின்பு யோசிப்போம்.

கசுஎ. ஓர் குற்ற ஒப்புதலின் மதிப்பு அந்தக் குற்றம் மனதார சுவேச்சையாய் ஒப்புக்கொள்ளப்பட்டதை வெ குவாய் பற்றினதா யிருக்கும். ஆகையால் அதிகாரத்தி லிருக்கிற எந்த மனிதனுகிலும் செய்த யாதொரு வாக்கு தத்தத்திலுவாவது உறுத்திய பயத்திலுவாவது அப்படி யொப்புக்கொண்டதாகஎண்ணுவதற்குக் காரணமிருந்தால் அந்தக் குற்ற ஒப்புதலை சாக்ஷியமாய் ஏற்றுக்கொள்வ தற்கு முன் அந்தப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட தல்லவெ ன்று ருசுச்செய்யப்படவேண்டும். அப்படிப்பட்ட விஷய ங்களில் சர்க்காருத்தியோகஸ்தர்கள், ரணவைத்தியர்கள், சிறைச்சாலை யதிபதிகள், சேகவர்கள் மாத்திர மல்லாமல் யஜமான்களும் யஜமானிகளுங் கூட அதிகாரத்திலிருக்கிற மனிதர்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றார்கள். யஜமா னிவிஷயத்திலானால் அவள் கிரக்கிருத்தியங்களை நடப்பி க்கிறவளாக யிருக்கவேண்டும். எப்படியெனில் ஒரு யஜ மானி கொலைசெய்ததாகக் குற்றஞ் சுமத்தப்பட்ட தன்வே லைக்காரியுடன் "நீ குற்றஞ் செய்திருந்தால் அதை ஒப்புக் கொள்ளு அதனால் உன்பிராணனைக் காப்பாற்றிக் கொள்ள லாம்" என்றுசொன்னால் அதன்பேரில் குற்றம் ஒப்புக் கொள்ளும்படி செய்த ஒப்புதல் அங்கீகரிக்கப்படவில்லை. அப்சர்ச்சியின் வியாச்சியம். ராகூகூ.

கசுஅ. அந்தப்படியே போலீசு உத்தியோகஸ்தர் முத லானவர்கள் வாக்குத்தத்தத்திலுலாவது பயத்திலுலாவது வேறே விதமாயாவது குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்விக்கக் கூடாதென்று தடுக்கப்பட் டிருக்கிறுர்கள். ஆயினும் பிடித்துக்கொள்ளப்பட்டவன் தன் மனப்பூர்த்தி

யாய் ஏதாவது வெளிப்படுத்த இஷ்டங்கொண்டால் அதை வெளிப்படுத்த வொட்டாமல் அவன் அப்படிச் சொல்லாதி ருக்கும்படி எச்சரிக்கை செய்வதினாலாவது இதாவித மாயாவது அவனைத் தடுக்கக்கூடாது. மேலும் ஒரு போ லீசு உத்தியோகஸ்தனிடத்தில் ஒருவன் தன் குற்றத்தை யொப்புக்கொண்டால் அந்த ஒப்புதல் அவனுக்கு விரோத மாய் சாக்ஷியத்தி லேற்றுகொள்ளப் படத்தக்கதாயிராது. இதுவுமன்றியில் குற்றஞ் சுமத்தப்பட்டவன் போலீசாரு டைய காவலி லிருக்கும்போது குற்றத்தை ஒப்புக்கொண் டால் அது ஒரு மாஜிஸ்திரேட்டினுடைய சமக்ஷமத்தில் பிரத்தியக்ஷமாய்த் தெரிவித்ததாயிருந்தாலொழிய அதைச் சாக்ஷியமாயங்கீகரிக்கக்கூடாது. ௲அ௱௬௰௨ ௨௫-வது ஆக்ட் - ௧௪௯-௧௫௰ - ௧௫௪ - ௧௫௬ - பிரிவுகள்.

௧௬௯. காவலாளி அவன் குற்றத்தை ஒப்புக்கொண் டால் அவனுக்கு நன்மை யுண்டாகுமென்றாவது ஒப்புக் கொள்ளாவிட்டால் கெடுதி யுண்டாகுமென்றாவது அதிகா ரத்திலிருக்கும் ஒரு மனிதன் சொன்னதின்பேரில் அந்தக் காவலாளி தன்குற்றத்தை ஒப்புக்கொண்டால் அந்த ஒப்பு தல் அங்கீகரிக்கப் படத்தக்கதாயிராது. ஆனால் கடவுளால் மன்னிக்கப் படுவானென்று ஆசைக் காட்டுவதினாலாவது பரலோகத்தில் சன்மானிக்கப்படுவான் அல்லது சிக்ஷிக்கப் படுவானென்று பயமுறுத்துவதினாலாவது காவலாளி குற் றத்தை ஒப்புக்கொண்டால் அந்தக் காரணத்தைப்பற்றிஅவ் வொப்புதலுக்கு நிஷேதமில்லை. ரா-௩௮-௬௦.

௧௭௦. ஒரு காவலாளியானவன் பிடிக்கப்பட்டதின் பேரில் அவன் பலான குற்றத்திற்காகப் பிடிக்கப்பட்டா னென்றுஅவனுக்குத்தெரியப்படுத்தி அவனந்தக்குற்றத்தை யொப்புக்கொள்ளும்படி செய்வதற்காக அதிகாரத்திலிருக் கிற ஒருவனால் அக்கிரமமாய் வாக்குத்தத்தஞ்செய்யப்பட் டதின்பேரிலாவது பயமுறுத்தப்பட்டதின் பேரிலாவதுஅ வன் எந்தக் குற்றத்தைச்செய்ததாகச் சந்தேகிக்கப்படவில்

லேயோ அப்படிப்பட்ட மற்றொரு குற்றத்தை ஒப்புக்கொண்டால், அவன்மேல் சாட்டப்படாத அந்த இதர குற்றத்தையொப்புக்கொண்டதை அந்தக் குற்றத்திற்காக அவனை விசாரணைசெய்யும்போது சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்படத் தக்கதா யிருக்குமென்றுஇங்கிலண்டு தேசத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் அந்தக்காவலாளியின் பேரிலுள்ள குற்ற மினனதென்று அவனுக்குத் தெரிவிக்கப்படாவிட்டால் அந்த ஒப்புதல் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. வார்னர்-லக் ஹார்ஸ்ட் இவர்களின் வியாச்சியங்கள். ௩௱௭௨. ஆயினும்-௧௬௮-பிரிவைப் பார்த்துக்கொள்க.

௧௭௧. "அதிகாரமில்லாத ஒரு மனிதனுடைய ஏவுத "லின்பேரில் குற்ற மொப்புக்கொள்ளப் படும்போது அதி "காரமுடையவன் முகதாவிலிருந்து யாதொரு எச் "சரிக்கையும் செய்யாமலும் தனக்கது சம்மதமில்லையெ "ன்று சொல்லாமலு மிருந்தால் அந்த ஒப்புதல் சாக்ஷி "யத்தில் ஏற்றுக்கொள்ளப்படத் தகாது." ஆனால் மற்றெந்த விஷயத்திலும் பயமுறுத்தினவனாவது வாக்குத்தத்தம் செய்தவனாவது காவலாளியின்பேரில் அதிகாரம் அல்லது ஆக்கினையுமில்லாதவனாயும் பயமுறுத்தினபடி ..ப்பிக்கவாவது வாக்குத்தத்தப்படி நிறைவேற்றவாவது ச..தியற்றவனாயு மிருந்தால் அவன் சொல்வதினாலே குற்றத்தை ஒப்புக்கொண்டால் அந்தக் காரணங்களைப்பற்றி அவ்வொப்புதல் ஏற்றுக் கொள்ளப்படத் தகாததன்று. ௩௱ - ௨௫ - ௨௬ - ௨௭.

௧௭௨. வாக்குத்தத்தம் செய்யப்பட்ட பிறகாவது, பயமுறுத்தின பிறகாவது, காவலாளி ஒப்புக் கொள்வதற்கு முன்னதாக ஒரு மேஜிஸ்திரேட்டாவது, அதிகாரத்தி லிருக்கும் இதர மனிதனாவது, அவனை நோக்கி அவன் சொல்வதெல்லாம் அவனை விசாரணை செய்யுங்காலத்தில் அவனுக்குப் பிரதிகூலமா யுபயோகிக்கப்படலாமென்று எச்சரிக்கை செய்வதனால் குற்றம் ஒப்புக்கொள்ளப் பட்

டால் எப்படியோ அப்படியே சில விஷயங்களில் வாக்குத் தத்தத்தினாலாவது, பயமுறுத்துதலினாலாவதுஉண்டாகும் பலனாவது, குற்றத்தை ஒப்புக்கொள்வதற்கு முன்னதாகவே விட்டுப் போனதாக விதிக்கப்பட்டிருக்கின்ற தாதலால் அந்தக் காரணத்தைப்பற்றி அவ்வொப்புதல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அப்படியே ஒரு காவலாளியின் யஜமானியானவள் தான் போலீசு உத்தியோகஸ்தனை யழைக்கிறதில்லையென்று செய்த வாக்குத்தத்தத்தினால் காவலாளி குற்றத்தை யொப்புக்கொண்ட விஷயத்தில் அந்த ஏவுதல் போலீசு உத்தியோகஸ்தன்வந்து காவலாளியை பிட்டுக்கொண்டு போனபோதே நீங்கிப்போனதாக தீர்மானிக்கப்பட்டு அதன் பிறகு அந்த உத்தியோகஸ்தனிடத்தில் குற்றத்தை ஒப்புக்கொண்ட சங்கதி சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ரா-சஉ-சா௲.

௩௨௯. "வாக்குத்தத்தம் செய்யாமலும் பயமுறுத்தாமலும் தந்திரத்தினாலாவது வஞ்சனையினாலாவது, குற்றத்தை யொப்புக்கொள்ளும்படி செய்தால் அந்த ஒப்புதல் அங்கீகரிக்கத் தக்கதாயிருக்கும்."

அப்பிரகாரமே அடியிற்கண்ட ஒவ்வொரு விஷயத்திலும் குற்றவாளி குற்றத்தை யொப்புக்கொண்டது அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அவை எவையெனில் காவலாளிக்குச் சகாயமாயிருந்தவர்கள் முன்னமே சிறைச்சாலையில் வைக்கப்பட்டிருப்பதாகக் காவலாளி நம்பும்படி செய்த விஷயத்திலும் ஒரு போலீசு உத்தியோகஸ்தன் காவலாளி குற்றத்தைச் செய்தது தனக்குத் தெரிந்தது போல அவன் தன் சிறிய தகப்பனுக்கு விஷம் வைக்கும்படி யெப்படி நேரிட்டதென்று கேட்ட விஷயத்திலும், மேலும் சிறைச்சாலையிலிருக்கிற உத்தியோகஸ்தன் தபாலில் போடுகிறதாகச் சொல்லி மோசம்செய்து வாங்கிக்கொண்ட கடிதத்தில் கண்டிருந்த குற்ற ஒப்புதலை விஷயத்திலும் குற்றவாளி குற்றத்தை யொப்புக்கொண்

டது யேற்றுக்கொள்ளப் பட்டது. அந்தப்படியே காவலாளி குற்றத்தை யொப்புக்கொள்ளும்படிச் செய்யும்பொருட்டு அவன் குடிக்கும்படி செய்ததாய்ச் சொல்லப்பட்ட விஷயத்திலும் குற்ற ஒப்புதல் யேற்றுக்கொள்ளப்பட்டது. ஏனென்றால், அவன் குற்றத்தை ஒப்புக்கொண்டபோது குடித்த வெறியி லிருந்தானென்கிற சங்கதி அந்த ஒப்புதல் எவ்வளவு மதிக்கத்தக்கதாயிருக்கு மென்பதைக்குறித்த விஷயமா யிருந்தபோதிலும் மேற்சொல்லிய காரணத்தைப்பற்றி அங்கிகரிக்கத்தகாத தாகமாட்டாதென்று விதிக்கப்பட்டது. ௩ா - ௬௭.

௧௭௪. போலீசாருடைய பாராவிலிராத ஒரு காவலாளியைக் கேட்ட கேழ்விகளினால் அவன் குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்தால் அந்தக் கேழ்விகள் அதிகாரத்திலிருக்கின்றவனால் கேட்கப்பட்டிருந்தபோதிலும் பயமுறுத்தினதினாலாவது ஆசைக் காட்டினதினாலாவது அப்படிக்கு ஒப்புக்கொள்ளப்பட் டிருந்தாலொழிய அவ்வொப்புதல் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகவேயிருக்கும். (௩ா-௬௭.) ஒரு மேஜிஸ்திரேட்டு அதிகாரஸ்தரானவர் விசாரணை நடந்துக்கொண்டிருக்கும்போது எந்தக்காலத்திலாவது தனக்கு அகத்தியமென்று தோன்றின கேழ்விகளைக் குற்றஞ் சாட்டப்பட்டவனை கேழ்க்கலாம். ஆனால் அவன் தனக்கு இஷ்டமிருந்தால் உத்தரவுசொல்லலாம், இல்லாவிட்டால் சும்மாயிருக்கலாம். வாக்குத்தத்தத்தினாலாவது பயமுறுத்துவதினாலாவது இதர முகாந்தரத்தினாலாவது குற்றஞ் சாட்டப்பட்டவன் குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்யக்கூடாது. ஆனால் தன்பேரில் சுமத்தப்பட்ட குற்றத்தைத் தான் செய்ததாக அவன் சுதாவில் ஒப்புக்கொள்ளுகிறதாகச் சொன்னால் மேஜிஸ்திரேட்டானவர் அந்த சங்கதிகளின் விவரங்களைக்குறித்து அவனை விசாரணைச்செய்து ஒவ்வொரு கேழ்வியையும் உத்தரவையும் பூராவாயெழுதிவைக்கவேண்டும். குற்றஞ் சுமத்தப்பட்டவன்

தான் கொடுத்த உத்திரவுகளின் தாற்பரியத்தை விவரித்துச் சொல்லலாம், வேறே எந்த சங்கதியையாவது சேர்த்துஞ் சொல்லலாம். "அவன் உண்மையென்று என்ன "சொல்லுகிறானோ அதற்கு ஒத்ததாய் முழுமையும் செய் "யப்பட்டபின்பு அந்த விமர்சைக் கிரந்ததில் மேஜிஸ்திரேட்டார் தாம் விமரிசை செய்ததற் கடையாளமாகத் "தமது கையொப்பமிட்டு அது தம்முன்னிலேயில் தாம் "கேழ்க்கும்படியாய் வாங்கப்பட்டதென்றும் குற்றஞ் சுமத் "தப்பட்ட மனிதன் சொல்லிய சங்கதிகளெல்லாம் அதில் "சரியா யெழுதப்பட்டிருக்கிறதென்றும் அது நிஜந்தா "னென்றும் தமது கைப்பட எழுதவேண்டும்." ௧௮௬௧ ௵ ௨௫-வது ஆக்ட்-௨௦௨-௨௦௩-௨௦௫-௨௪௬ - பிரிவுகள

௧௭௫. குற்றஞ் சுமத்தப்பட்ட மனிதனை மேஜிஸ்திரேட்டின் எதிரில் விசாரணை நடக்குங்காலத்தில் வாங்கப்பட்ட வாக்குமூலத்தில் மேஜிஸ்திரேட்டு செய்திருக்கிற கையெழுத்து உண்மையானதல்லவென்று கோர்ட்டார் சந்தேகித்தாலொழிய அதில் அப்படி கையெழுத்துச்செய்யப் பட்டதென்பதற்கு ருசுவில்லாமலே அந்த வாக்குமூலம் செஷன்கோர்ட்டில் சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படவேண்டும். அந்த வாக்குமூலத்தில் மேஜிஸ்திரேட்டார் செய்கிற கையெழுத்தே போதுமான பிரத்தியக்ஷ ருசுவாயிருக்கும். (௧௮௬௧ ௵ ௨௫ - வது ஆக்ட் ௩௬௬ - வது பிரிவு) இந்த ஆக்ட் ஏற்படுவதற்கு முன்னும் சாதனமே விசாரணை நடந்ததென்பதற்கும் குற்றம் ஒப்புக்கொள்ளப் பட்டதென்பதற்கும் உத்தமமான சாக்ஷியமென்று எப்போதும் எண்ணப்பட்டிருந்தது.

௧௭௬. சபார்டிநேட்டு ஜட்ஜிகளிடத்திற்கும் பிரின்ஸிசதாமீன்களிடத்திற்கும் அனுப்பப்பட்ட வியாச்சியங்களை அவர்கள் விசாரணைசெய்வதில் ௧௮௬௧ ௵ ௨௫-வது ஆக்டில் மேஜிஸ்திரேட்டுகள் நடந்துகொள்வதற்காக ஏற்பட்டிருக்கிற நிபந்தனைகளின்படி நடந்துகொள்ள வே

ண்டும். ஷை ஆக்ட்டின் ௩௫௮-வது பிரிவைப் பார்த்துக்கொள்க.

௧௭௭. உபயவாதிகளில் எந்தப்பக்கத்திலாவது கொண்டுவரப்பட்ட சாக்ஷியத்தைச் செஷன்கோர்ட்டார் முதலில் விசாரித்தபின்பு குற்றம் சாட்டப்பட்டவனைக் கேழ்விகேழ்க்கலாம். ஆனால் அப்படிப்பட்ட கேழ்விகளுக்குக் குற்றம் சாட்டப்பட்டவன் உத்தரவு சொல்லவேண்டிய கடமையுள்ளவனன்று. ஷை ஆக்ட்டு-௩௭௩-பிரிவு.

௧௭௮. "வாக்குத்தத்தைப்பற்றியாவது பயமுறுத்தினதைப்பற்றியாவது குற்றம் ஒப்புக்கொள்ளப்பட்டால் "அவ்வொப்புதல் அங்கீகரிக்கத்தக்கதா யிராதபோதிலும் "அந்த ஒப்புதலினால் காவலாளியினுடைய குற்றத்தை ஸ் "தாபிக்கத்தக்க சில சங்கதிகள் வெளிப்படுமாயின் அந்தச் "சங்கதிகளைக்குறித்த சாக்ஷியம் அங்கீகரிக்கப்படலாம்.' ௭௱-௫௦.

எப்படியெனில், அதிகாரத்திலிருக்கிற ஒரு மனிதன் அக்கிரமமாய் வாக்குத்தத்தம் செய்ததினாலாவது பயமுறுத்தினதினாலாவது காவலாளி தன் குற்றத்தை ஒப்புக்கொண்டு திருட்டுச்சொத்தைத் தான் ஒளித்துவைத்திருந்த இடத்தைக் காண்பித்தால் அந்த ஒப்புதலில் சொத்து ஒளித்து வைக்கப்பட்ட இடம் காவலாளிக்குத் தெரிந்திருந்ததாகக் காட்டுகிற அட்சம்மாத்திரம் அவனுக்கு அந்தச்சங்கதி தெரியுமென்று ருசுப்படுத்துவதற்காக அங்கீகரிக்கத் தக்கதாயிருக்குமேயொழிய மற்றெந்தப்பாகம் அங்கீகரிக்கப்படமாட்டாது. (௭௱-௫௦.) வாக்குத்தத்தம் செய்ததினாலாவது பயமுறுத்தினதினாலாவது குற்ற மொப்புக்கொள்ளப்பட்டால் அவ்வொப்புதல் பொய்யாயிருக்கலாமென்கிற எண்ணத்தைப்பற்றி நீக்கப்படுகின்றது. ஆனால் அதில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற ஒரு சங்கதிக்கு அவ்வொப்புதலில் எவ்வளவுமட்டும் சம்பந்தப்பட்டிருக்கின்றதோ

அவ்வளவுமட்டும் ஸ்பஷ்டமாய் உண்மையான தாகையால் அது அங்கீகரிக்கப்படுகின்றது. அந்த ஏதுவைப்பற்றி யே, "ஏதாவதொரு குற்றத்தைச் செய்ததாக குற்றம் சும "த்தப்பட்டவனுல் தெரிவிக்கப்பட்ட சமாசாரத்தைக்கொ "ண்டு ஒரு போலீசு உத்தியோகஸ்தன் தானொரு சங்கதி "யைக் கண்டுபிடித்ததாக வாக்குமூலம் கொடுத்தால் அந் "தச் சமாசாரத்தினுல் குற்றம் ஒப்புக்கொள்ளப்படுகிறதா "யிருந்தாலும் இல்லாவிட்டாலும் அதனுல் கண்டுபிடிக்கப் "பட்ட சங்கதிக்காக அந்தச் சமாசாரத்தில் எவ்வளவுமட் "டும் பரிஷ்காரமாய் சம்பந்தப்பட்டதா யிருக்கின்றதோ "அவ்வளவுமட்டும் சாக்ஷியமா யேற்றுக்கொள்ளப் பட "லாம்." (கஅகசு௳ஸ்த்திய உரு-வது ஆக்ட்டு - கரு௦-வது பிரிவு.) ஆனுல் அப்படிப்பட்ட ஒப்புதலின் எந்தப்பா கமாவது அங்கீகரிக்கப்படத் தக்கதாயிருப்பதற்கு அதை உறுதிப்படுத்துஞ் சங்கதி ஏதாவது ஒன்றிருக்கவேண்டி யது மிகவும் ஆவசியம். எப்படியெனில், ஒரு காவலாளி யானவன் ஒரு வாக்குத்தத்தத்தின்பேரில் குற்றத்தை யொ ப்புக்கொண்டு பின்பு ஒரு மனிதனைச் சுட்டிக்காட்டி திரு ட்டுச்சொத்தை அவனிடத்தில் கொடுத்ததாகச் சொன்ன தின்பேரில் அந்த மனிதன் வாங்கவில்லையென்று மறுத் தால் அந்தக்குற்றவொப்புதலில் எந்தபாகமும் அங்கீகறிக் கப்படவில்லை. மேலும் காவலாளி உத்தியோகஸ்தனை அந்த மனிதனுடைய வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் அவனைக் காண்பித்த சங்கதியைக்குறித்த சாக்ஷியமும் அப்படியே ஏற்றுக்கொள்ளத் தகுந்த 'தல்லவென்று பின்பு தீர்மானிக்கப்பட்டது. (ஜென்கின்ஸ் என்கிறவனு டைய வியாச்சியம்.) ரா-ருக.

கஎக. அக்கிரமமான ஏவுதலின்பேரில் ஒருவன் குற் றத்தை ஒப்புக்கொள்ளு மிடத்தில் அதில் நிர்ணயிக் கப்பட்ட சங்கதியுடன் கண்டிதமாய் எவ்வளவு மட்டும் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அவ்வளவுமாத்திரம் அங்கீ

ரிக்கப்படத் தக்கதா யிருக்கும். ஆகையால் காவலாளி தான் கொடுத்துவிட்ட சொத்து திருடப்பட் டிருந்ததெ ன்று அக்கிரமமான ஏவுதலின்பேரில் சொல்லிய வார் த்தை ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது. "அப்படிப்பட்ட "வார்த்தைகளை ஏற்றுக்கொள்வதற்குக் காரணம் அவ்வார் "த்தைகள் காவலாளி சொத்தை ஒப்புவித்த விஷயத்தை "விவரிக்கத்தக்கவைா யிருக்கின்றன வென்பதேயொழிய "அவை நடந்த ஒரு காரியத்தின் வரலாராயிருக்கிறதென் பதல்லவென்று பிலிப்ஸ் என்பவர் சொல்லியிருக்கிறார். பி - சா - அ-பதி-௪௬௨-பி. ரா-௫௧.

௧௪௦. பலர்கூடி துராலோசனைசெய்யும் விஷயங்க ளில் தவிர மற்ற விஷயங்களில் ஒரு காவலாளியின் கு ற்ற ஒப்புதலையானது மற்றொரு காவலாளிக்கு விரோத மான சாக்ஷியமாகமாட்டாது. மேலும் முக்கியமான குற்றவாளியானவன் மேஜிஸ்திரேட்டின் முனபாக குற் றத்தை யொப்புக்கொண்டபோதிலும் அது அவனுடைய உடந்தைக்காரனுக்கு விரோதமான சாக்ஷியமாகமாட் டாது. இந்த விதி சரியானதல்லவென்று ஆக்ஷேபிக்கப் பட்டிருக்கின்றது. ஆயினும் அந்தக் குற்ற ஒப்புதலை எப் போதும் தர்மசாஸ்திரப்படிக்கி பிரமாணத்தின்பேரில் ஒப்புக்கொள்ளப்பட்டதா யிராதென்றும் மற்றொரு காவ லாளி எதிர்கேழ்வி கேட்டு அதின் உண்மையைப் பரிசோ திக்க இடமிராதென்றும் ஒருவன் குற்றத்தைச் செய்ததாக சுயப்பிரயோஜனத்துக்கு விரோதமாய் ஒரு பொய்யான ஒப்புதலைச் செய்யமாட்டானென்கிற காரணத்தைப்பற்றி மாத்திரம் அது சாக்ஷியமா யங்கீகரிக்கப்படுகிறதென் றும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். மற்றவர் கள்பேரில் குற்றஞ்சாட்டிச் சொல்வதில் மேல்சொன்ன படி யோசிக்கவேண்டியதில்லை யல்லவா. மேலும் அநேக விஷயங்களில் குற்றத்தை யொப்புக்கொள்ளுகிறவன் த னது குற்றத்தில் மற்றவர்கள் சம்பந்தப்பட்டிருக்கிறதா

யும் அவர்கள் தன்னைவிட அதிக குற்றவாளிகளென்று தோற்றும்படிசெய்ய ஒரு பலமான காரணத்தை யுடைய வனுயிருக்கிறன். ஆயினும் உடந்தைக்காரனைப் பிரத்தியேகமாய் விசாரணைசெய்யும்போது பிரதான குற்றத்தைச் செய்த முதலாளியானவன் சாக்ஷியாகவந்து உடந்தைக் காரனுக்கு விரோதமாய்ச் சாக்ஷிசொல்லலாம். பின்னும் உடந்தைக்காரன் எந்தக் காவலாளியுடன் சேர்ந்து குற்றஞ்செய்தானே அந்தக் காவலாளி விசாரணை செய்யப்படுங் காலத்திலேயே அவனும் விசாரணை செய்யப்படாவிட்டால் அந்தக் காவலாளிக்காக சாக்ஷி சொல்வதற்குத் தகுதி யுடையவனுவான். ௩௧-௭௭ - ௧௩௭.

௧௮௩. பலர்கூடி செய்யும் துராலோசனை விஷயங்களில் இதனடியி லெழுதப்பட்டபடி விதி ஏற்பட்டிருக்கின்றது. அனேகர் ஏதாவதொரு அன்னியாயமான காரியத்துக்காக ஒன்ருய்ச்சேர்ந்து யோசித்ததாக ருசுவானுல் முன்னமே அவர்களாலோசித்திருக்கிற ஏற்பாட்டின்படி அவர்கள் யாவருக்கு முண்டாயிருந்த சாமானியமான உத்தேசத்தை யனுசரித்து அவர்களி லொருவன் சொன்ன வார்த்தையாவது செய்த காரியமாவது அந்தக் கூட்டத்தில்சேர்ந்த யெல்லாருடைய வார்த்தையாயுங் காரியமாயுங் கொள்ளப்பட்டு அவர்கள் யாவருக்கும் விரோதமாய் சாக்ஷியத்தில் அங்கிகரிக்கத்தக்கதா யிருக்கும். ஆதலால் துராலோசனையிற்சேர்ந்த ஒருவனுல் சாமான்னிய வுத்தேசத்தை யனுசரித்து எழுதப்பட்ட ஒரு காகிதத்தை அவனுடன்கூட அந்தக் கூட்டத்திற் சேர்ந்திருந்த மற்றொருவன் அந்தக் கடிதத்தை பார்த்திராமற்போனுலும் அது அவனுக்கு விரோதமான சாக்ஷியமாகும். (பீ - ச - கு -பதி-அஅ-ப) ஆயினும் துராலோசனையிற் சேர்ந்த ஒருவன் நடந்தபோன ஒரு காரியத்தின் வரலாறை மாத்திரம் தெரியப்படுத்தினுல் அந்தச் சங்கதி சாமான்னியமான எண்ணத்துக்கு உபபலமா யிருக்கவேண்டுமென்று

உத்தேசிக்கப்பட்டதா யிராமற்போனால் அப்படிப்பட்டக் கேவல சரித்திரமானது அந்தக் கூட்டத்திற் சேர்ந்திருந்த மற்றொருவனுக்கு விரோதமாய் ஏற்றுக்கொள்ளப்படத் தகாது. பி-சா-கூ-பதி-அக-ப.

கஅஉ. ஒரு சிவில் விவகாரத்தில் செய்யப்படும் ஒப்புதல் விஷயத்தில் எப்படியோ அப்படியே குற்றஞ் சாட்டப்பட்டவன் குற்றத்தை யொப்புக்கொள்ளுகிற விஷயத்திலும் ஒப்புக்கொண்டவன் தான் சொன்னதையெல்லாம் கோர்ட்டார் மொத்தமாய் யோசிக்கும்பொருட்டு அவையெல்லாவற்றையும் படிக்கும்படியாயாவது மறுபடி சொல்லும்படியாயாவது கேட்ப்பதற்கு அவனுக்குச் சுதந்திரமுண்டு. ஆனால் அதிலிருக்கிற அம்சங்களையெல்லாம் சமானமாய் நம்பவேண்டியதென்கிற தாத்பரியமல்ல. குற்ற ஒப்புதலின் சில பாகத்தை நம்புவதற்கும் மற்றப் பாகத்தை நம்பாமற் போகிறதற்கும் நியாயமான ஏதுக்களுண்டா யிருக்குமாதலால் கோர்ட்டார் அந்தப்படி சில பாகத்தை நம்பி மற்றப் பாகத்தை நம்பாமல் போகலாம். ரா-ருச - ருரு.

கஅங. காவலாளிகளுடைய குற்ற ஒப்புதல்களை எவ்வளவுவரையில் மதிக்கலாமோ அந்தச் சங்கதியைக்குறித்து பெஸ்டு என்கிறவரால் ஏற்பாடாயிருக்கிற கிரமத்தை யனுசரித்து இனி யோசிக்கலாகும்.

கஅச. ஒருவன் தானாகவே குற்றத்தை யொப்புக்கொண்டால் அவ்வொப்புதல் மரண தண்டனைக்குரிய குற்றத்தைக் குறித்தாவது குற்றம் ஸ்தாபிப்பதற்கும் போதுமான ஆதாரமாயிருக்குமென்று இங்கிலண்டு தேசத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. (ரா - டக. பெ - கஉள.) மேலும் இப்போது செஷன்கோர்ட்டில் "குற்றஞ் சா "ட்டப்பட்டவன் தான் குற்றவாளியென்று ஒப்புக் "கொண்டால் அப்படி யவன் சொன்னதைப் புத்தகத்திற் "பதிந்துகொண்டு அதின்பின்பு குற்றஞ் சுமத்தப்பட்ட

"வன்பேரில் குற்றத்தை ஸ்தாபிக்கலாம்." ஹைகோர்ட் டைக் கடைப்பிடிக்கிற விவகார விஷயங்களுக்கும் மேற்படி நிபந்தனையே உபயோகப்படுகின்றது. ஆயினும் குற்ற ஒப்புதல்கள் எப்போதும் ஜாக்கிரதையுடன் அங்கீகரிப்பதும் குற்றச் சுவரூபத்தைக்குறித்து சாக்ஷியம் பெறுவதும் வழக்கமாயிருக்கின்றது. இந்த முன்ஜாக்கிரதை இங்கிலண்டுதேசத்தைவிட இத்தேசத்தில் மிகவும் அவசியமாயிருக்கின்றது. அந்தப்படியே குற்ற ஒப்புதலைப் பிரத்தியேகமான சாக்ஷியத்தினால் உறுதிப்படுத்தவேண்டுமென்று ஜில்லாக்களிலுள்ள கோர்ட்டார் விரும்புவது வழக்கமாயிருக்கின்றது. (ப-கோ-ச-உ- க௲௦௬ஆ மேயீ உ௰௯. க௲௬௩ஆ டிசம்பர்மீ உ௰௯. க௲௬௭ஆ ஜூன்மீ க௯. க௲௭௨ஆ ஏப்பிரல்மீ உ௯. க௲௮௭ஆ ஏப்பிரல்மீ உ௰௯. க௲௯௨ஆ ஜூன்மீ உ௯. க௲௯௯ஆ பிப்ரவரிமீ க௯.) முத்து, பெருமாள் என்கிற இவர்களுடைய வியாச்சியத்தில் மதராசு பவுசுதாரி அதாலத்துக் கோர்ட்டார் "காவலாளியின்பேரில் சுமத்தப்பட்ட "குற்றம் உண்மையாய்ச்செய்யப்பட்டதென்று ருசுப்படுத் "துவதற்குச் சாக்ஷியமிருந்தாலொழிய அந்தக் குற்றத்தை "த் தான் செய்ததுண்டென்கிற ஒப்புதலைக்கொண்டு அவ "ன்பேரில் குற்றத்தை ஸ்தாபிக்கக்கூடாது" என்று வெளிப்படையாய் விதித்திருக்கின்றார்கள். (முத்து, பெருமாள்) ஆ-இ௦ள-கே-௪௧-ப.

க௲௫. நடந்த சங்கதியைப் பிசகாய் கிரகிப்பதினால் ஒருவன் தான் குற்றத்தைச் செய்ததாக ஒப்புக்கொள்ளுகிறதுண்டு. எப்படியென்றால், ஒரு விஷயத்தில் தகப்பன் தன் குழந்தை விஷம் வாங்கிக்கொண்டிருந்து உண்மையாய் மக்கள்காரணத்தைப்பற்றி மரணமடைந்ததென்று தெரியாமல் தானதையடித்ததனால் அது இறந்துபோனதென்று நினைத்தான். அப்படிக்கில்லாமல் ஒரு மனிதனுக்குத் தரும சாஸ்திரத்தில் வழுவுதலுண்டாகலாம். எப்படியெனில்,

பீனல்கோட்டின் ௨௯௦-வது பிரிவின்படி கொலையில்லாத இற குற்றத்திற்கு பலாத்காரமும் பயமுறுத்தலும் அவசி யமான உபகரணங்களாயிருக்கின்றனவென்று அறியா மல் ஒருவன் உண்மையாய்த் திருட்டுயென்கிற குற்றத்தை ச் செய்திருக்கக் கொள்ளையென்கிற குற்றத்தைச் செய்த தாக ஒப்புக்கொள்ளுகிற விஷயம்.

௧௮௬. நிர்தோஷியான ஒருவன் குற்றம் செய்ததாக ஆசையினாலாவது பயத்தினாலாவது பொய்யாய் ஒப்புக் கொள்ளும்படி சாமானியமான விஷயங்களைக்குறித்துச் சொல்லாமல் அந்தப் பிரயோஜனத்தையே உண்டாக்கத்தக் கவையும் அவ்வளவு தெளிவானதாக யிராதவையுமாகிய சில காரணங்களைக்குறித்து நாம் யோசிப்போம். சிலர் தா ம் உண்மையாய்ச் செய்த ஒரு பெரிய குற்றத்தைக்குறித்து விசாரணை நடவாமல் தடுக்கலாமென்கிற யெண்ணத்துடன் அல்பமான குற்றத்தைச் செய்ததாக பொய்யா யொப்புக் கொண்டிருக்கிறார்கள். மற்றும் சிலர் பிராணவிடத்தில்வெ றுப்புண்டாகி மரணதண்டனைக்குரிய குற்றங்களைச் செய்த தாக ஒப்புக்கொண்டிருக்கிறார்களென்று சொல்லப்பட்டி ருக்கின்றது. ஸ்திரிகள் தங்கள் புருஷர்கள் தங்களை விட்டு விடுவார்களென்றோ அவர்களா லுண்டாகு முபத்திரவத் தை நீக்கிக்கொள்ளலாமென்றோ இவை முதலிய சுயப் பிரயோசனத்தை நோக்கி தாம் வியபிசாரம் செய்ததாகப் பொய்யாய் ஒப்புக்கொண்டார்களென்று சொல்லப்பட் டிருக்கின்றது. சிலர் தங்களைக்குறித்து பிறரால் பேசிக் கொள்ளவேண்டுமென்கிற விருப்பத்துடன் குற்றத்தை யொப்புக்கொண்டிருக்கிறார்கள். மேலும் அன்னிய தே சங்களில் சேவித்துக்கொண்டிருக்கிற இங்கிலீஷ் சைனிக ர்கள் விசாரணையின்பொருட்டு தாம் சுவதேசத்திற்கனு ப்பப்படுவார்களென்கிற எண்ணத்தோடு இங்கிலண்டு தேசத்தில் நடந்திருந்த குற்றங்களைத் தாங்கள் செய்ததா கப் பொய்யாய் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

௧௮௭. சிலர் தங்களுக்குப் பிரியமா யிருக்கிறவர்களின் பேரில் சந்தேகம்-வாராமல் நீக்கும்பொருட்டு பொய்யாய்க் குற்றத்தை யொப்புக்கொண்டதுமல்லாமல் அதற்காக பிராணனையும் விட்டிருக்கிறார்கள். பெஸ்டு என்பவர் உதகரித்திருக்கிற மெரயா ஷோனிங், அன்னு ஹார்லின் என்பவர்களுடைய விஷயத்தில் அவ்விருவரும் தங்கள் குழந்தைகளுக்கு ஜீவனமுண்டாக்க வேறே முகாந்திர மில்லாதனால் தாய் தந்தைகளில்லாத குழந்தைகளுக்கு சர்க்காரிலிருந்து கிடைக்கத்தக்க ஜீவனத்தைத் தங்கள் குழந்தைகளுக்கு உண்டாக்கும்பொருட்டு பொய்யாய்க் குற்றத்தை ஒப்புக்கொண்டு அவர்களிஞ்பேரில் குற்றம் ஸ்தாபிக்கப்பட்டு அவர்களிலொருத்தி தூக்கிற் போடப்பட்டாள். அதைப்பார்த்து மற்றொருத்தியும் மன வெழுச்சியினாலேயும் துக்கத்தினாலேயும் மரணமடைந்தாள். பெ - ௫௫௧ - பி (௦) குறிப்பு.

௧௮௮. சிலர் தங்கள் சத்துருக்களை குற்றத்தில் உடந்தைப் படுத்துவதற்காக தாம் குற்றத்தைச் செய்ததுபோல ஒப்புக்கொண்டிருக்கிறார்களென்று சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும் இத்தேசத்தில் தனவான்களாகிய காவலாளிகள் அவர்களைச் சிறைச்சாலையில் வைக்கும்படி விதிக்கப்பட்ட சிக்ஷையை அவர்களுக்குப் பதிலா யனுபவிப்பதற்காக வேறே மனிதர்களைச் சம்பாதித்திருக்கிறார்கள். ஆகையால் ஒரு செல்வாக்குள்ள மனிதன் ஒரு குற்றஞ்செய்துவிட்டு அந்தக் குற்றத்தைப் பொய்யா யொப்புக்கொள்வதற்காக ஏதாவது பிரதி பலனைக்கொடுத்து தௌர்பாக்கியனெவனையாவது சம்பாதிப்பது கூடுமான காரியந்தான்!

௧௮௯. குற்றஞ்செய்யாத ஒருவன் குற்றஞ்செய்ததாக ஒப்புக்கொள்ளும்படி செய்யத்தக்க காரணங்களனேகமிருக்கின்றனவென்று தெரியப்படுத்துவதற்கு மேல் சொல்லப்பட்ட விஷயங்கள் போதுமானவையா யிருக்குமல்லவா. மேலும் இண்டியாவிலுள்ள ஜனங்களின் மனோ

வியாபாரங்கள் நமக்குச் செம்மையாய்த் தெரியுமளவிற்கு
இறநில்லை யென்பதையும் குற்றஞ் சுமத்தப்பட்டவர்கள்
குற்றங்களை ஒப்புக்கொள்வதற்கு அநேக அக்கிரமமான
மூகாந்திரங்கள் உண்டா இருப்பதையும் நாம் யோசித்துப்
பார்க்குமிடத்தில், இத்தேசத்தில் குற்ற ஒப்புதல்களை நாம்
மிகவுஞ் சாக்கிறதையாய் சோதிக்கவேண்டியதென்று தீர்
மானிக்கவேண்டும். "சபார்டிகேட்டு கிரிமினல் ஜட்ஜிகள்
"விசாரணையிலிருக்கிற காவலாளிகள் தங்கள் முன்பாக
"யென்னென்ன சொல்லுகிறார்களோ அவையெல்லாம் அ
"வர்களுக்கு விரோதமான சாக்ஷியமா யுபயோகிக்கப்படு
"மென்று அவர்களுக்குத் தப்பாமல் தெரிவிக்கவேண்டும்"
என்று மெஸ்தர் மோர் ஹெட் என்பவர் அபிப்பிராயப்பட்
டதாக மேஸ்தர் மெயின் கிரிமினல் தரும சாஸ்திரத்தைக்
குறித்து தான் எழுதியிருக்கிறதாகிய மிகவும் உபயோகமு
ள்ள கிரந்தத்தின் உ0௪-வது பக்கத்தில் கண்டிருக்கிறார்.
மேல் சொன்ன வழக்கம் சாதாரணமாய் அவசியமில்லாம
லிருந்தபோதிலும் மிகவும் மூடர்களான காவலாளிகளின்
விஷயத்தில் பிரயோஜனமுள்ளதா யிருக்கலாம்.

௧௧0. கோர்ட்டுக்கு வெளியில் வாய்மொழியாய்த்
தெரியப்படுத்தப்பட்ட குற்ற ஒப்புதல்களைக்குறித்த சுருத
சாக்ஷியத்தை ஏற்றுக்கொள்வதில் அவ்வொப்புதல்களைக்
குறித்துப் பேசுகிற சாக்ஷிகள் பிசகாய்த் தெரிவிக்காம லி
ருக்கும்படி சாக்கிரதையாய் யிருக்கவேண்டும். அப்படிப்
பிசகாய்த் தெரிவிப்பதாவது வேண்டுமென்று எண்ணிச் செ
ய்ததாயிருந்தாலும் இருக்கலாம், அப்படிக்கல்லாததாயிரு
கதாறு மிருக்கலாம். சாக்ஷிகள் சத்தியவர்த்தர்களாயிருக்
கவேண்டியதுமாத்திரமேயல்லாமல், தெளிவுள்ளவர்களா
யும் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேழ்ப்பதிலும் மறு
படியும் சொல்வதிலும் ஜாக்கிரதையுடையவர்களாயுமிருக்
கவேண்டும். மேலும் இந்தியாதேசத்தில் வாய்மொழி
யாய்க் குற்றத்தை ஒப்புக்கொண்டதைக்குறித்து சாக்ஷி

யபரான சாக்ஷிகள் சொல்லும் சாக்ஷியம் சாதாரணமாய் மிகவும் மதிக்கத்தக்கதாயிராது. எதினாலெனில், காவலாளிசொன்ன மொழிகளையே சாக்ஷிகள் ஒரேவிதமாகச் சரியாய் சொன்னபக்ஷத்தில், அவர்களந்தப்படி சொல்லும்படி முன்னமே கற்பிக்கப்பட்டிருக்கிறார்களென்பதற்கு எவ்வளவுஞ் சந்தேகமிராது. மேலும், அவர்கள் சொல்லுவது முக்கியமான அம்சங்களில் பேதப்பட்டிருந்தால் அந்தக் குற்றஒப்புதல் ருசுவாகிறதில்லை. ஒரு சிவில் வியாச்சியத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டதாக தெரிவிக்கப்படுஞ் சங்கதிகளுக்கும் மேற்சொல்லப்பட்டதே உபயோகமாகும்.

கககக. காவலாளியின்பேரில் குற்றஞ் சுமத்தப்பட்டபோது அவன் மவுனமாயிருந்தானென்றாவது தப்பித்துக் கொள்ளக்கூடிய மறுமொழி கொடுத்தானென்றாவது ருசுச் செய்வதற்கு சாக்ஷியஞ் சில சமயங்களில் கொண்டுவரப்படுகின்றது. அப்படிப்பட்ட சங்கதியை எவ்வளவுமட்டும் நம்பலாமோ அந்த விஷயம் குற்றஞ் சாட்டப்படுகிறவிதத்தைப் பெரும்பாலும் அனுசரித்ததாயிருக்கின்றது. எப்படியெனில், பரியாசமாய்க் குற்றஞ் சாட்டப்பட்டதாக கிரகிக்கப்பட்டதா, அல்லது நிச்சயமாய்ச் சாட்டப்பட்டதாக கிரகிக்கப்பட்டதா, குற்றஞ் செய்யப்பட்டதென்று தெரிந்தவுடனே அதிகாரமுடையவனால் அப்படிக் குற்றஞ் சாட்டப்பட்டதா, முடிவாய், குற்றஞ் சுமத்தப்பட்டவன் அவ்விஷயத்தின் சங்கதிகள் யாவையும்பற்றித் தன்பேரில் சுமத்தப்பட்ட குற்றத்தைப் பரிகரித்துகொள்வது அவசியமென்றெண்ணுவது சகஜமாவென்பதுகள்தான். அதிகாரத்திலிருக்கிறவனால் கிரமமாய் குற்றஞ் சாட்டப்பட்டிருந்தபோதிலும் சாக்கிரதையோடு நடக்கிறவன் நிரபராதியாயிருந்தபோதிலும், அவசரப்பட்டுமுன்னுதாக எதுவுஞ் சொல்லுகிறதைவிட தன் வாதத்தை நிறுத்தி விசாரணைக்காலத்தில் சொல்வது மிகவும் உத்தமமென்று நினைக்கலாம். மேலும் எந்தெந்த காரணங்களினால் மனிதர்கள்

குற்றங்களைச் செய்ததாக பொய்யாய் ஒப்புக்கொண்டிருக்கிறார்களோ அந்தக் காரணங்களினாலேயே அவர்கள் குற்றஞ் சுமத்தப்பட்டபோது மவுனமாயிருந்து குற்றஞ் செய்தவர்களைப்போலவே காணப்படுவோர்களாகையால், அப்படிப்பட்ட சாக்ஷியம் அதிக நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருக்கிறதரிது.

## ௩. பொதுப் பிரயோசனகாமான விஷயங்களின் கருத்து சாக்ஷியம்.

௧௬௨. உலக பிரயோசனகரமான விஷயங்கள் பிரதி மனிதனுக்கும் சம்பந்தப்பட்டவையாம். பொதுப் பிரயோசனகரமான விஷயங்கள் பிரதி மனிதனுக்கும் சம்பந்தப்படாமலே, லோக ஜனங்களுக்குச் சம்பந்தமுள்ள விஷயங்களாம். "இரண்டு கிராமங்களுக்கு மத்தி "யிலிருக்கிற எல்லை; ஒரு கிராமம் அல்லது பட்டணத்தி "னெல்லைகள்; சுங்கம் வசூல்செய்யும் சுதந்திரம்; மற் "றெவரும் செய்யக்கூடாமல் தான்மாத்திரம் வியாபாரஞ் "செய்யும்படியான தனிச்சுதந்திரம்; தரிசு நிலங்களில் 'பசுக்களை மேய்க்கும் சுதந்திரம்; பாட்டைகளைப் பழுது "பார்க்கிற அல்லது செடிகள் நடுகிற பாத்தியதை; ஜல "தாரைகள், ஏரிகள், துணிதப்புகிற துறைகள், இவைக "ளின் பாத்தியதை; கிராம சமுதாயமான பாத்தியதை; "முதலியவை" வெளிஜில்லாக்களில் சாதாரணமாயுண்டாகிற விஷயங்களென்று மேஸ்டர் நார்டன் என்பவர் ஜனப்பிரயோசனகரமான விஷயங்களுக்கும் பொதுப் பிரயோசனகரமான விஷயங்களுக்கும் திருஷ்டாந்தமாயுதகரித்திருக்கிறார். "இவ்விடத்தில் "பிரயோசனம்" என் "கிற வார்த்தைக்கு நூதனபொருள் கிடைப்பதினாலுண்டா "கும் பிரயோசனமென்றாவது, கியானத்தினாலாவது வி "னோதத்தினாலாவது யிருக்கு மிச்சையைத்திருப்திப்படுத் "துவதினாலுண்டாகும் பிரயோசனமென்றாவது அர்த்தம் "செய்யக்கூடாது; ஆனால், பிரஜைகளில் ஒரு கூட்டத்தார்

"னதினால் திரவியரூபமான பிரயோசனத்தை அடைகிறார்
"களோ அப்படிப்பட்டதென்றாவது, எதினால் அவர்களு
"டைய சட்டப்பிரகாரமான சுதந்திரம் அல்லது அவர்
"கள் பாத்தியதைகளுக்குப் பாதகமுண்டாகின்றதோ அப்
"படிப்பட்ட பிரயோசனமென்றாவது அர்த்தஞ் செய்ய
"வேண்டியதாகும்." (ஙா - கஙச - வது பிரிவில் உத
கரிக்கப்பட்டிருக்கிற லார்டு காம்பெல் அவர்களின் அபிப்
பிராயம்.) அப்படிப்பட்ட விஷயங்கள், அவற்றைக்குறி
த்து மரணமடைந்தவர்கள் சொல்லியிருக்கிற சங்கதிக
ளைப்பற்றிய சுருத சாக்ஷியத்தினாலாவது மற்றொருவித
சுருத சாக்ஷியமாகிய உலகத்தார் சாதாரணமாய் பேசிக்
கொள்ளுவதைக்குறித்த சாக்ஷியத்தினாலாவது ருசுச் செ
ய்யப்படலாம். ஸ்டா-சகு-கஉ. டெ-ருசச-பீ

ககஙு. உலகத்தார் சாதாரணமாய் பேசிக்கொள்ளுவ
தென்பது ஏதாவதொரு பகிரங்கமான காரியத்தைக்குறி
த்து உலகத்திலிருக்கிற ஜனங்களியாவருக்கு முண்டாயி
ருக்கிற அபிப்பிராயமென்றாவது நம்பிக்கை என்றாவது
அர்த்தமாம். இந்தச் சாதாரணமான நம்பிக்கை அந்தப்
படி நம்பியிருக்கிற ஜன சமூகத்தில் சேர்ந்திருக்கிறவர்க
ளுடைய சாக்ஷியத்தினால் ருசுவாகும். (ஸ்டா-சங.) தனி
த்த விஷயங்களைக்குறித்து உலகத்தார் வெகுசாய் தப்ப
பிப்பிராயம் கொள்ளுகிறதாயிருந்தாலும், பகிரங்கமான
காரியங்களைக்குறித்துச் சாதாரணமாய் உலகத்தார்கள்
மிகவும் தாராளமாகப் பேசிக்கொள்வார்களாகையால்,
அவை யாருக்குப் பிரயோசனகரமா யிருக்குமோ அப்
படிப்பட்ட ஜனங்கள் மேற்சொல்லிய காரணத்தைப்
பற்றி சரியான அபிப்பிராயங் கொண்டிருப்பார்களென்று
ஊகிக்கக் காரணமுண்டாயிருக்கின்றது.

ககச. சாதாரணமான யோக்கியதையைக்குறித்த சா
ட்சியவிஷயத்தில் எப்படியோ அப்படியே பொதுவான
கீர்த்தியைக்குறித்த பிரதிவிசாரணையிலும் அந்த விசாரணை

யின் தன்மையைப்பற்றியே முக்கியமான சங்கதிகளைக் குறித்த சாக்ஷியம் விலக்கப்பட்டிருக்கின்றது. அந்தக் கேழ்வியானது உலகத்தார் என்ன அபிப்பிராயங் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பற்றியதேயொழிய, அவர்களெந்தச் சங்கதிகளைப்பற்றி அந்த அபிப்பிராயங் கொண்டார்களென்பதைப் பற்றியதன்று. ஆகையால் அப்படிப்பட்ட சாக்ஷியம் ஜனங்களினுடைய சாதாரணமான நம்பிக்கை அல்லது *அபிப்பிராயத்தைமாத்திரம் பற்றியதா யிருக்க வேண்டும்.

கக௫. பொதுப் பிரயோசனகரமான விஷயங்களை ருசுப்படுத்தும் மற்றொரு விதமாவது இறந்துபோனவர்கள் சொல்லிய வார்த்தைகளைப்பற்றிய சுருத சாக்ஷியத்தைக் கொண்டு ருசுப்படுத்துவதாம். இந்தவிஷயத்திலேயும் சொல்லப்பட்ட மொழிகள் சாமானிய குணமுள்ளதா யிருக்க வேண்டுமேயொழிய, முக்கியமான சங்கதிகளைக் குறித்ததாயாவது, சுதந்தரத்தைச் செலுத்துகிற திருஷ்டாந்தங்களைக் குறித்ததாயாவது இருக்கக்கூடாது. பொதுப்பிரயோசனகரமான விஷயங்களில் கொண்டுவரப்பட்ட சாக்ஷியத்தின் உண்மையைத்தெரிந்துகொள்ளும் வகை எவனுக்குண்டாயிருந்ததோ அவன் சொன்னதாக ருசுப்படுத்தவேண்டிய தவசியமென்று பூர்வம் எண்ணப்பட்டிருந்தது; ஆனால் இப்போது இந்த சங்கதியானது சாக்ஷியத்திலுண்டாகிய நம்பிக்கையைப் பாதகப்படுத்துமேயல்லது, அதை அங்கீகரிப்பதற்குப் பாதகமொன்று முண்டாகமாட்டாதென்று தோற்றுகின்றது. ஆயினும் விவாத சுதந்தரம் வாஸ்தவமா யனுபவத்திலிருந்ததென்கிற ருசுவினால் அப்படிப்பட்ட சாக்ஷியம் ஸ்தாபிக்கப்பட்டாலொழிய அதை மதிக்கக்கூடாது. இது கீர்த்தியைக்குறித்த சாக்ஷியத்திற்கும் உபயோகமாயிருக்கும். முடிவில் இறந்துபோனவன் சொன்ன மொழி அந்த விஷயத்தைக்குறித்து விவாதமுண்டாவதற்கு முன்னமே சொன்னதா யிருக்கவேண்

டும்; அப்படிக்கல்லாதபக்ஷத்தில் அது அங்கீகரிக்கத்தக்கதாகாது. ஸ்டா-௪௧-டு௦-௬௨-௬௯. நா-௧௯௬-௧௪௦-௧௪௮-பி-கள்.

௪. வம்சாவளி

௧௧௬. சந்ததி, பந்துத்துவம், விவாகசம்பந்தம், இவற்றைக்குறித்த சங்கதிகள் வம்சாவளிக்குரிய விஷயங்களிற் சேர்ந்திருக்கின்றன. அப்படிப்பட்ட சங்கதிகளைச் சுதாவாயறிந்திருப்பவர்களுடைய பிரத்தியக்ஷ சாக்ஷியத்தினால் ருசுப்படுத்துவது கஷ்டமாகையால் சுருத சாக்ஷியத்தை அங்கீகரிக்கவேண்டியிருக்கின்றது. மேலும் அந்தச் சங்கதிகள் சாதாரணமாய்ப் [illegible]மானமட்டில் பிரசித்தமாயிருப்பதினால் அவற்றை அப்படி ஸ்தாபிப்பதில் அபாயமில்லை.

௧௧௭. அப்படிப்பட்ட விசாரணைகளில் ஒருவனுடைய தாய்தந்தைகள் புருஷனும் பெண்சாதியுமாகச் சேர்ந்து வாழ்ந்திருந்ததாகவும், இவன் நமது புருஷனென்றும் இவள் நமது பெண்சாதியென்றும் அவர்களொருவர்க்கொருவர் தெரிந்துகொண்டு அவர்கள் குழந்தைகளை ஔரசபுத்திரர்களாக எண்ணி யிருந்தார்களென்றும் ருசுச் செய்வதற்காக இறந்துபோனவர்கள் சொன்ன மொழிகளைக்குறித்த சுருத சாக்ஷியத்தை அங்கீகரிக்கலாம். மேலும் வாய்மொழியான அப்படிப்பட்ட சுருத சாக்ஷியமாத்திரமேயல்லாமல், சுருத சாக்ஷியமென்கிற ஏதுவைப்பற்றி இதர விஷயங்களில் எது தள்ளிவிடப்படுமோ அப்படிப்பட்ட லிகித மூலமான சாக்ஷியமும் வம்சாவளிக்குரிய விஷயங்களில் அங்கீகரிக்கப்படலாம். எப்படியெனில், "மரணமடைந்த "வம்சஸ்தர்கள் புஸ்தகங்களில் எழுதிவைத்த பதிவுகள், ப"ந்துக்களுள் ஒருவருக்கொருவர் எழுதிக்கொண்ட காகித"ங்கள், தஸ்தாவேஜுகளிற் கண்ட சங்கதிகள், மரண சாச"னங்களிற் காணப்பட்ட விவரங்கள், சமாதி சிலைகளின் "பேரிலாவது மோதிரங்களின் பேரிலாவது கோரிகளின்

"பேரிலாவது, பிணங்களையும் பெட்டிகளினுடைய "மேல்மூடிகளின்பேரிலாவது எழுதியிருப்பவைகள், இரந் "துபோன குடும்பஸ்தர்கள் எழுதின அல்லது வழங்கின "ம்சாவளி படங்கள், முதலானவை யாவும் வெவ்வேருக "மேற்சொல்லிய விஷயத்துக்காக சாக்ஷியமா யேற்றுக் "கொள்ளத் தக்கனவென்று விதிக்கப்பட்டிருக்கின்றது." பெ-சஅக-பி.

கக௲. * வம்சாவளிக்குரிய விஷயங்களில் சுருதசாக்ஷியம் அங்கீகரிக்கப்படவேண்டுமானல், விவாதத்திலிருக்கும் அம்சத்தைக்குறித்து விவாதமுண்டாவதற்கு முன்னமே அந்த மொழி சொல்லப்பட்டிருக்கவேண்டியது மிகவும் அவசியமாயிருக்கின்றது. மேலும், அந்தச் சங்கதியைச் சொன்னவன இறந்துபோயிருக்கவேண்டும்; அவனந்தக் குடும்பஸ்தர்களி லொருவனு யிருக்கவேண்டியதவசியமென்று பூர்வம் எண்ணப்பட்டிருந்தது, ஆனல் கஅ௫௫ரு௰ உ-வது-ஆக்ட்டு-சள-வது-பிரிவின்படி "அந்தக் குடும்பத் "தைச்சேர்ந்த வைப்பாட்டி சம்பந்தமானவர்களும், இரத் "தகலப்பினுலாவது விவாகசம்பந்தத்தினுலாவது குடும்ப "த்தைச் சேராதவர்களாயிராமற் போனபோதிலும் அந்தக் "குடும்பத்திலுள்ளவர்களையும் அதின் ஸ்திதியையும் வழக் "கத்தினுல் அறிந்திருக்கிறவர்களும் சொன்னதை அவர்கள் "இறந்துபோனபிறகு அந்தக் குடும்பத்தில் இறந்துபோன "வர்கள் சொன்னதை சாக்ஷியமாக ஏற்றுக்கொள்வது "போலவே, ஏற்றுக்கொள்ளலாம்." நா-கரு௭-கக-க-கக௲-பி-கள்.

கககக. வம்சாவளிக்குரிய விஷயங்களில் இன்னமும் ஜீவித்திருக்கிற சாக்ஷிகளின் முன்னிலையில் நடந்த சங்கதிகளைக்குறித்தாயினும் இறந்துபோனவர்கள் சொல்லக் கேட்ட மொழிகள் அங்கீகரிக்கப்படலாம். நா-கசக-பிரிவில் உதகரிக்கப்பட்டிருக்கிற பிலிப்ஸ் அவர்களின் அபிப்பிராயம்.

உ00. சுருத சாக்ஷியமானது வம்ச பாரம்பரை, பந்துத்வம், விவாக சம்பந்தம், இவைகளில் எதிலாவது அடங்கியதாய்மாத்திரம் இருக்கவேண்டும். பிறந்த இடம முதலிய சார்பான விஷயங்களை ருசுச்செய்வதற்கு அது அங்கீகரிக்கப்படமாட்டாது. ஆயினும் அப்படிப்பட்ட அம்சம் ஒருவனுக்கு அவனிருக்குமிடத்தை யனுசரித்துப் பேரிடப்பட்டால் எப்படியோ அப்படியே பந்துக்களிவர்களென்று ருபிக்கத்தக்கதா யிருந்தால் கண்டிதமாய்வம்சாவளிக்குரிய விஷயங்களி லெப்படியோ அப்படியே அந்தச் சங்கதியை ருசுச்செய்யவேண்டியது நியாயமென் றெண்ணப்பட்டிருக்கின்றது. கூ- க ருரு-க ருசு-பி-கள்.

உ0க. முடிவில் சுருத சாக்ஷியம் வம்சாவளிக்குரிய விஷயங்களில் மேற்சொல்லிய நிர்பந்தங்களுக் குட்பட்டு அங்கீகரிக்கப்பட்டபோதிலும், அப்படிப்பட்ட விஷயங்களிலும் அது கொஞ்சமாயினும் நம்பத்தக்கதா யிராதென்று சொல்லவேண்டி யிருக்கின்றது. அது மற்ற விஷயங்களில் சுருத சாக்ஷியம் எப்படிப்பட்ட ஆக்ஷேபனைக்குள்ளானதா யிருக்கின்றதோ கொஞ்சம் ஏறக்குறைய அப்படிப்பட்ட ஆக்ஷேபனைகளுக்குச் சாதாரணமா யுட்பட்டதா யிருக்கின்றது. மேலும் வம்சாவளிக்குரிய விஷயங்களை வேறே எந்த விதமாயாவது ருசுச்செய்வது கஷ்டமாகையால், முக்கியமாய் அதைப்பற்றியே அது அங்கீகரிக்கப் படுகின்றது.

## ரு. பூர்வீக சுவாதீனம்.

உ0உ. முப்பது வருஷத்திய தஸ்தாவேசு எந்தக்காரியத்தைக் குறித்ததா யிருக்கின்றதோ அந்தக் காரியம் நடந்தகாலத்திலேயே எழுதிக் கொடுக்கப்பட்டதாக எண்ணப்படத்தக்கதா யிருந்தால், பூர்வீக சுவாதீனத்தை ருசுச் செய்வதற்காக அதில் சாட்சி கையொப்பஞ் செய்தவர்களை சாக்ஷியாக வரவழைக்காமலே அது அங்கீகரிக்கப்படும். ஆனால் அந்தத் தஸ்தாவேசு கிரமமான விடத்தி

விருந்து கொண்டுவரப்படவேண்டியது. மேலும் பூர்வீக சுவாதீனத்தை ருசுச் செய்யும்பொருட்டு அப்படிப்பட்ட தஸ்தாவேஜினுடைய ஆதாரத்தைக்கொண்டு வீட்டைப் பழுதுபார்த்தல் குடிக்கூலி வாங்குதல் முதலாகிய சுதந்திரத்தைத் தெரிவிக்கத்தக்க யாதொரு காரியம் நடப்பிக்கப்பட்டதென்கிற ருசுவினால் அந்தத் தஸ்தாவேசு ஸ்தாபிக்கப்படவேண்டும். முப்பது வருஷங் கடந்தபிறகு சாக்ஷி கையொப்பஞ் செய்தவர்களெல்லாரும் இறந்து போனதாக தரும சாஸ்திரப்படி அநுமேயமுண்டாகின்றது. இந்த அநுமேயம் எதிர்கக்ஷிக்காரனால் எதிர்க்கத்தக்கதல்ல. ஆயினும் அந்தத் தஸ்தாவேஜில் ஏதாவது கிருக்கிருந்தாலும், வரி பிளந்தெழுதப்பட்டிருந்தாலும், அந்தத் தஸ்தாவேஜைக்குறித்து சந்தேகிப்பதற்கு வேறே ஏதாவது ஆஸ்பதமிருந்தாலும், அதில் சாக்ஷி கையொப்பஞ்செய்து அப்போது ஜீவந்தர்களாயிருப்பவர்களில் யாரைக்கொண்டாவது கையெழுத்தைக்குறித்த சாக்ஷியத்தைக்கொண்டாவது அதை ருசுப்படுத்துவது யுக்தமாயிருக்கும். தஸ்தாவேசு எவ்விடத்தி லிருக்கத்தக்கதோ அவ்விடத்திலிருந்து அது கொண்டுவரப்பட்டால் போதுமானதாயிருக்குமேயல்லது, அதைப்பார்க்கிலும் உசிதமான விடத்திலிருந்து அது வரவேண்டுமென்பது ஆக்ஷேபனை ஆகமாட்டாது. முடிவில், தஸ்தாவேசானது நடந்த காரியத்தில் ஒரு பாகமாயிருக்கவேண்டுமேயொழிய, நடந்த சங்கதிகளைக்குறித்த கேவல விருத்தாந்தமாயிருக்கக்கூடாது. ஸ்டா-ஜி-உ-க. பெ-சஅஉ-பி. கா - கசச-முதல் கசஅ-வரை-பி-கள். பிங்-ரிபூ-கே-க-பு-உ00-பக்கத்தில் கண்ட பிஷப்-ஆப்-மீத்,எதிரி-மார்க் வில்-ஆப்-விஞ்செஸ்டர் வியாச்சியம். லா-ஜ-மே-வ-உக-பு-க0க-பக்கத்தில்கண்ட மிட்டன்-எதிரி - தாரன் பெரிபட்டணத்துக் கோவில் விசாரணைக்கர்த்தர்கள் வியாச்சியம்.

உ0க. யதார்த்தத்தை ரூபிப்பதற்காக ஏற்பட்டிருக்கும் வழக்கமான ஆதாரங்களில்லாமலே அப்படிப்பட்ட த

ஸ்தாவேசுகளை அங்கீகரிப்பது சுருத சாக்ஷியத்தை விலக்குகிற விதிக்கு ஒரு விலக்காயிருக்கிறதென்றும், கேவலம் அவசியமென்கிற ஏதுவைப்பற்றிமாத்திரம் அவற்றை அங்கீகரிக்கலாகின்றதென்றும் (இன்னாலே) வாசிக்கிறவர்களுக்குத் தெரிந்திருக்கவேண்டும்.

## கூ. பிரயோஜன விரோதமான மொழிகளைக்குறித்த சுருத சாக்ஷியம்.

உ0ச. ஒப்புதல்கள், குற்றமொப்புதல்கள் என்கிற இவ்விரண்டு தலைப்புகளின்கீழ் விவகாரத்தில் சம்பந்தப்பட்ட கக்ஷிக்காரர்கள் தங்கள் சொந்த பிரயோசனத்துக்கு விரோதமாய்ச் சொன்ன மொழிகளைக்குறித்து யோசித்தோம். இனி அந்நியர் தங்கள் சொந்தப் பிரயோசனத்திற்கு விரோதமாய்ச் சொன்ன வார்த்தைகளையும் எழுதியிருக்கிற பதிவுகளையும் குறித்து யோசிப்போம்.

உ0ரு. மனிதர்கள் திரவியத்தையாவது பூஸ்திதியையாவது பற்றிய தங்கள் சொந்தப் பிரயோசனத்துக்கு விரோதமாய்ச் சொன்ன மொழிகளாகிலும் பதிவுகளாகிலும் சில விஷயங்களிற்றவிர சாதாரணமாய்ப் பொய்யாயிராதென்று யாவருக்குந் தெரிந்திருக்கிற விஷயமேயல்லவா. அப்படியே பிரயோசனத்துக்கு விரோதமான மொழிகளையும் பதிவுகளையுங்குறித்து ஸ்டாாக்கி என்பவர் இதனடியிற்கண்ட விதியை ஏற்படுத்தியிருக்கிறார். அஃதாவது "நடந்த சங்கதி இன்னதென்று விசேஷமாய்த்தெரிந்திரு "க்கிற ஒருவன் அதைக்குறித்து எழுதியிருக்கிற பதிவினாலா "வது, சொல்லியிருக்கிற மொழியினாலாவது எவன்மீதில் "தாவா உண்டாயிருக்குமோ அப்படிப்பட்டவனை விடுதலை "செய்தாலும் அவன் தன்மீது சுமத்திக்கொண்டாலும் அப் "படிப்பட்ட பதிவு அந்த மனிதன் மரணமடைந்தபின்பு அந் "தச் சங்கதிக்குச் சாக்ஷியமா யங்கீகரிக்கத்தக்கதென்று "சாக்ஷிய விதிகளின் நிர்ணயமா யேற்பட்டிருக்கின்றது." ஸ்டா - சஅச.

உ0சு. எப்படியெனில் (ஸ்டுவர்டு) குடும்பகாரிய நிர்வாககர்கள், (ரஸீவர்கள்)சொத்துக்களை நியாயஸ்தலத்தாருடைய உத்தரவின்படி சுவாதீனப்படுத்திக்கொண்டு அதைச்சார்ந்த திரவியத்தை அறவிடுகிறவர்கள், முதலான காரியஸ்தர்கள் தாங்கள் பணம் வாங்கிக்கொண்டதாக எழுதிவைத்த பதிவுகள் அவர்களிறந்துபோனபின்பு அப்படி எழுதப்பட்ட சங்கதிகளை ருசுப்படுத்த நல்ல சாக்ஷியமாயங்கிகரிக்கப்பட்டது. ஸ்டா-௬ளக.

உ0எ. கஅருரு வரு உ-வது ஆக்ட்டு ௩கூ-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கிற தென்னவெனில்; ஒருவன் தன் பிரயோசனத்துக்கு விரோதமாய் என்ன பதிவுகளை எழுதிவைத்தாலும் என்னசங்கதிகளைச் சொன்னாலும் அதுகள் 'அவன் சாகாம லிருந்தபோதிலும், எழுதிவைத்தபிறகு "அவனுக்குப் புத்தி மாராட்டமாய்ப் போனதினாலே "சாக்ஷிசொல்லச் சக்கியமில்லாதவனா யிருந்தாலும், வி "சாரணைகாலத்தில் கோர்ட்டாருடைய கட்டளையைச் சே "ர்ப்பிக்கக்கூடாத இடத்தில் நிச்சயமாய் நிலையான குடி "யாயிருந்தாலும், சாக்கிரதையாய்த் தேடிப்பார்த்தும் அகப்படாமற்போனாலும்" ஏற்றுக்கொள்ளப்படலாம்.

உ0அ. பிரயோசனமென்பது திரவிய சம்பந்தமான தாயாவது உரிமைச்சம்பந்தமானதாயாவது இருக்கவேண்டியதேயொழிய, கேவலம் சினேகிதத்தைப்பற்றியாவது விரோதத்தைப்பற்றியாவது தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற விருப்பத்தைப்பற்றியாவது உண்டானதா யிருக்கக்கூடாது. மேலும் அப்பதிவை எழுதினவனாவது சங்கதியைச் சொன்னவனாவது அப்படிப்பட்ட பதிவு அல்லது சங்கதி எதைக்குறித்ததா யிருக்கின்றதோ அந்தச் சங்கதியினுடைய நிஜத்தைத் தெரிந்துகொள்வதற்கு முகாந்திரமுடையவனா யிருக்கவேண்டும். கா-௬ளரு-௬ளகூ-பி-கள், ஸ்டா-௬௭. டெ-௪அ௩-பி.

உ0க. பிரயோசனத்துக்கு விரோதமான பதிவுகள் எந்தச் சங்கதியைக் குறித்தனவோ அந்தச் சங்கதி நடந்தகாலத்திலேயே எழுதப்பட்டிருக்கவேண்டிய தகத்திய மல்ல; ஒருவனுடைய சொந்த புஸ்தகத்தில் எழுதப்பட்டிருந்தாலும் அவற்றைச் சாக்ஷியமா யங்கீகரிக்கத்தகும். மேலும் அந்தப்பதிவுகள் பணத்தைப் பெற்றுக்கொண்ட அல்லது செலுத்திய சங்கதியை ருசுச்செய்வதுமல்லாமல் பணத்தைப் பெற்றுக்கொண்ட அல்லது செலுத்தினகாலம் இடம் விதம் முதலான சங்கதிகளையும், ருசுச்செய்வதற்காக அவற்றை யங்கீகரிக்கலாம். நா-களஅ-கஅஉ-கஅங்கஅச-பி-கள். ஸ்டா-கரு- (r) குறிப்பும்-ஈஎரு-ம்.

உக0. கணக்கில் எந்தப்பக்கத்தில் பிரயோசனத்துக்கு விரோதமான பதிவு எழுதப்பட்டிருக்கின்றதோ அந்தப் பக்கம்மட்டும் அங்கீகரிக்கத்தக்கதா யிருக்குமேயொழிய, அதற் கெதிர்பக்கம் அங்கீகரிக்கப்படமாட்டாது. ஆயினும், பாக்கி மொத்தம் அந்தப்பதிவை எழுதினவனுக்கு அநுகுணமாயிருந்ததாக முடிவில் ருசுச் செய்யப்பட்டதென்கிற கேவல சங்கதியைப்பற்றி பிரயோசன விரோதமான ஒரு பதிவு அங்கீகரிக்கப்படத்தக்கதாகமாட்டாது. நா-கஅக-பி. ஸ்டா-சஎக (f) குறிப்பு.

உகக. லிகிதமூலமான பதிவுகளைப்போலவே பிரயோசனத்துக்கு விரோதமாய்ச் சொல்லப்பட்ட மொழிகளையும் சாக்ஷியமா யங்கீகரிக்கத்தகும். ஆனால் லிகிதமூலமான பதிவுகளைக் குறித்தோவென்றால், அந்தப் பதிவுகளை எவனெழுதினதாகச் சொல்லப்படுகின்றதோ அவனெழுதினனென்றுவது அதில் கையொப்பஞ் செய்தானென்றுவது ருசுச் செய்யப்படவேண்டும். இந்த ருசுவானது கையெழுத்தை ருசுப்படுத்துவதினாலே சித்திக்கலாம். பெ-சஅருபி. நா-கஅஎ-பி. ஸ்டா-சஅஉ (n) குறிப்பு.

உகஉ. சில விஷயங்களில் ஒரு பதிவு பார்வைக்கு சுயப்பிரயோசன விரோதமானதாயிருந்தபோதிலும் உண்மை

யாய் அப்படி யிராமற்போகிறதுண்டு. எப்படியெனில், ஒரு மனிதன் ஒரு பழயபத்திரத்தை வைத்துக்கொண்டிருந்து அதைக்குறித்து வழக்குக் கொண்டுவர நிர்ணயிக்கப்பட்டிருக்கிற காலங் கடந்தபிறகு அந்தப்பத்திரத்தின் பேரில் சில தொகை செல்லுவைத்ததாக எழுதிப் பொய்யாய்த் தன்பேரில் தானே செல்லெழுதிவைத்து, தன் வியாச்சியத்துக்கு உயிருண்டாக்கவேணுமென்று உத்தேசிக்கலாம். அப்படிப்பட்ட செல்லு அந்தச் சந்தர்ப்பங்களைப்பற்றி பார்வைக்குமாத்திரம் பிரயோசன விரோதமானதா யிருக்குமேயொழிய, உண்மையாய் அநுகூலமானதாகவே யிருக்கும். ஆகையால் இப்படிப்பட்ட விஷயங்களில் வழக்காடுவதற்காக நிர்ணயிக்கப்பட்டிருக்குங் காலங் கடப்பதற்கு முன்னதாகவே அந்தச் செல்லு எழுதப்பட்டதாக முதலில் தானே சாக்ஷியங் கொணடுவர வேண்டியது அவசியமென்று நினைக்கப்பட்டிருக்கின்றது. ஸ்டா-௯௨௮. ரா-௧௮௬ பி. பெ-௯௮௬-பி.

எ. வியாபாரத்தின் சகஜமான கிரமத்தை அனுசரித்து எழுதப்பட்ட பதிவுகள்.

௨௧௩. சங்கதிகளை அறிந்த மனிதர்களால் வியாபாரத்தின் அல்லது உத்தியோகத்தின் சகஜமான கிரமத்தை அனுசரித்துச் சொல்லப்பட்ட மொழிகளாவது எழுதப்பட்ட பதிவுகளாவது எந்தச் சங்கதிகளைக்குறித்தவையாயிருக்குமோ அந்தச் சங்கதிகள் நடந்த காலத்தில் சொல்லப்பட்டாவது எழுதப்பட்டாவது இருந்தால், அம்மனிதர்கள் இறந்துபோனபின்பு அவை சாக்ஷியமா யங்கீகரிக்கப்படத்தகும். பெ-௯௮௯-பி. ஸ்டா-௯௧௨.

௨௧௪. அப்படிப்பட்ட பதிவுகள் சாதாரணமாய் சுருத சாக்ஷியத் தன்மையுடையதா யிருக்குமென்று தெளிவாயிருக்கிறது. பின்னும் அவை முக்கியமாய் இதற்குப் பின்வரும் காரணங்களைப்பற்றி சாக்ஷியமா யங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன, அந்தக் காரணங்களாவன:—“கற்பனை செய்

"வது கஷ்டமாயிருப்பதைப்பற்றி பொய்ச்சொல்வதைவிட
"நிஜஞ்சொல்வது சுலபமாகையால் கள்ளக் கருத்துடனுக்கி
"றதாக சந்தேகிப்பதற் காஸ்பதமில்லாமற்போனால் வி
"யாபாரத்தின் சகஜமான கிரமத்தைப்பற்றி எழுதபபட்ட
"பதிவுகள் சரியானவையா யிருக்குமென்று ஒரு நியாய
"மான அநுமேய முண்டாகின்றதென்பது; அப்படிப்பட்ட
"பதிவுகள்பரஸ்பரம் ஒன்றை மற்றொன்று உறுதிப்படுத்தத்
"தக்க அநேக விஷயங்கள் வரிசையாய் ஏற்படுகின்றனவெ
"ன்பது; பொய்யான பதிவுகளை எழுதுனால் அதை எழுதி
"னவர்களுக்கு எஜமானர்களிடத்தில் அவமானமுண்டாகு
"மென்பது; வியாபாரக்கிரமத்தை அநுசரித்து எழுதப்ப
"ட்ட பதிவுகள் வெகு ஜனங்கள் பார்வையிடும்படி நேரிடு
"கிறபடியால் பிசகிருந்தால் சீக்கிரமாய்க் கண்டுபிடிக்கும்
"படி நேரிடுமென்பது; மேலும் அவை சம்பந்தப்பட்ட ச
"ங்கதிகள் சாதாரணமாய் சில மனிதர்களுக்குமாத்திரமே
"தெரிந்திருப்பதினால் அப்படிப்பட்ட பதிவுகளின் விஷய
"ங்களில் சாக்ஷிய நிபந்தனைகளின்படி கண்டிப்பாய் நடப்
"பிக்காமலிருப்பது அகத்தியமல்லாமற் போனபோதிலும்
"உண்மையைக் கிரமமாய் பரிசீலனம் செய்வதற்கு வெகு
"அநுகூலமா யிருக்குமென்பது." டெ-கூ௯௦-பி.

உக௫. வியாபாரத்தில் சகஜமா யெழுதப்பட்ட பதி வுகள் எழுதினவனிறந்தபிறகுதான் பூர்வம சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்பட்டுவந்தது; ஆனால் இபபோது உ0எ-வது பிரிவில் கண்டபடி அவனுககு சித்தப்பிரமை உண்டாயிரு ந்தாலும், அவன் அதிக தூரத்திலிருந்தாலும், அகப்படாம ற்போனாலும், கஅ௫௫௫ உ-வது ஆக்ட்டு கூக-வது பிரி வின்படி அந்தப்பதிவுகள் அங்கீகரிக்கத்தக்கவையா யிருக் கின்றன. (உ0எ-வது பிரிவைப் பார்த்துக்கொள்க.) மே லும் அந்த ஆக்ட்டின் ச0-வது பிரிவில் விதிககப்பட்டிரு க்கிறதென்னவெனில், அப்படிப்பட்ட பதிவு எந்தச் சங்க தியைக்குறித்ததோ அந்தச் சங்கதி நடந்தகாலத்திலாவது

அந்தக் காலத்திற்குக் கொஞ்சம் முன்பின்னாவது எழுதப்ப ட்டதாயிருந்தால் அதை எழுதினவனாகிலும் எவன்சொன் னதின்பேரில் எழுதப்பட்டதோ அவனாகிலும் ஜீவித்திருந் து அவனைச் சாக்ஷியாகக் கொண்டுவரக் கூடுமானதாயிரு ந்தாலும் பாங்கிநோட்டுகளையாவது பணஞ் செலுத்துவத ற்கான இசாரா ஆதாரவுகளையாவது இதரசொத்தையாவது இ ல்லவையென்றும் அவற்றைச் செலுத்தினவனாவது வாங்கி க்கொண்டவனாவது இன்னானென்றும் பெயர் விவரம் எண் முதலானவற்றினால் நிச்சயிப்பதற்குமாத்திரமே அப்படிப் பட்ட பதிவைச் சாக்ஷியத்தில் அங்கீகரிக்கப்படும்.

உ௧௬. வியாபாரத்தில் சகஜமாயெழுதியிருக்கும் ஒரு பதிவை எழுதினவனாவது அதற்குக் கையொப்பஞ் செய்த வனாவது அது எந்தச் சங்கதியைக் குறித்ததோ அந்தச் ச ங்கதியைச் சுதாவாய் அறிந்தவனா யிருந்தால்மாத்திரம் அ தை அங்கீகரிக்கத்தகும. அவன் மற்றொருவன் சொல்லக் கேழ்விப்பட்டதாயிருந்தால் அது போதுமானதாயிராது. (நா-௧௫-பி. ஸ்டா-சாக்ஷு.) ஆயினும் ௧அ௫௫ஹு உ-வது. ஆகட்டு ௪௦-வது பிரிவில "அது சொல்லி எழுதிவைத் தவனாவது" என்கிற மொழிகளிருக்கின்றனவாகையால் (உ௧௫-வது பிரிவில்) இதற்கு முன் உதகரிக்கப்பட்ட விஷ யங்களில் மேல்விதிப்படி கண்டிப்பாய் நடப்பிக்கப்பட மாட்டாதென்று தோற்றுகின்றது.

உ௧எ. மேலும் அந்தப் பதிவு வியாபாரத்திலாவது உத் தியோக விஷயத்திலாவது சகஜமா யெழுதப்பட்டதென் று ருசுப்படுத்துவதற் கேதாவது சில சாக்ஷியங் கொண்டு வரவேண்டியிருக்குமென்று தோன்றுகின்றது; என்னத்து க்கெனில், அந்தப் பதிவு அங்கீகரிக்கத் தக்கதாவென்கிற ச ங்கதி எவன் தன் உத்தியோகத்தைப்பற்றியாவது கிரமமா ன வழக்கத்தைப்பற்றியாவது எழுதவேண்டுமோ அவன் வியாபாரத்தில் சகஜமா யெழுதியிருந்தானென்கிற விஷய த்தை முக்கியமாய் அநுசரித்திருக்கின்றது. ஸ்டா-சாக்ஷு.

"கும்." சில சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அக்கம்பக்க த்திலிருக்கிறவர்களுக்குக் கடிதங்களை ஒப்பிப்பதில் அப் படிப்பட்ட புஸ்தகத்தைக் கூட அனுப்பி அக்கடிதங்களைப் பெற்றுக்கொள்பவர்களை அவற்றைப் பற்றிக்கொண்டதா யதில் எழுதச்சொல்லுகிறார்கள். கஅருகளுய அ-வது ஆக்ட்டின் கூகூ-வது பிரிவையும் பார்த்துக்கொள்க.

உஉஉ. வியாபாரத்தின் சகஜமான கிரமத்தை யநு சரித்து எழுதப்பட்ட பதிவுகள் இப்போது யோசிக்கப் பட்ட நிபந்தனைகளின்படி இருக்கிற பட்சத்தில் அவை எந்தச் சங்கதிகளைக் குறித்தவையா யிருக்கின்றனவோ அ ந்தச் சங்கதிகளின் விஷயத்தில் தனித்த ருசுவாகும். ஆ யினும் கஅருருளுய உ-வது ஆக்ட்டு சஙூ-வது பிரிவின்படி "வி[illegible]ரம் நடக்கையிலாவது, யாதொரு சர்க்கார் கச் "சேரியிலாவது, கிரமமாய் எழுதி வைக்கப்பட்டதுகளாக ருசுச் செய்யப்பட்ட புஸ்தகங்களை அவைகளில் கண்டி ருக்கிற சங்கதிகளுக்கு உபபல சாக்ஷியமாக ஏற்றுக் "கொள்ளலாம்; ஆனால், வேறே சாக்ஷியம் வேண்டாமல் "அதுவே போதுமென்று நினைக்க[illegible]டாது." அதற்கு அந்தப் பதிவை எழுதினவன் இறந்துபோயிருக்கவேண்டு மென்பதும் அது எந்தச் சங்கதியைக்குறித்ததோ அந்தச் சங்கதியை அவன் சுதாவாய் அறிந்திருக்கவேண்டுமென் பதும் அவன் உண்மையாய் அந்த விவகாரத்தில் சேர்ந் தவனு யிருக்கக்கூடாதென்பதும் எவ்வளவும் அவசிய மென்று காணப்படவில்லை. சஅ-வது பிரிவில் இன்னும் விதிக்கப்பட்டிருக்கிற தெனனவெனில்:— "பங்கு சர்ட்டி "பைக்கேட்டு, பங்குகளை ரிஜிஸ்தர் செய்திருக்கிற சர்ட் "டிபைக்கேட்டு, வார்ஈாமா, சரக்குசாபிதா, விக்கிரயக "ணக்கு, இவைகளும்; பணஞ் சேர்ந்ததற்காவது பணஞ் "சரக்கு தஸ்தாவேஜுகள் முதலானவை கட்டி யிருக்கிற "தற்காவது வழக்கமாய் கொடுக்கப்பட்ட ரசீதுகள், விவ "காரம் நடந்துகொண்டிருக்கையில் கொடுக்கப்பட்டவை

"களென்று ருசுவானால் அவைகளும் உபபல சாக்ஷியமாக
"ஏற்றுக்கொள்ளப்படும்."

உ௨௩. இங்கிலீஷ் காமன்லா என்கிற சாஸ்திரப்படி ஒருவனை தன் சொந்த புஸ்தகங்களைக்கொண்டு ஒரு கடனை ருசுச்செய்ய இடமில்லை. ஏனெனில், அவன் அந்த வியாச்சியத்திற்காகவே சாக்ஷியத்தை கற்பித்திருக்கலாம். (பி-சா-"வர்த்தகர்கள் எழுதிவைக்கும்பதிவு" என்கிற விஷயம். பெ-௮அசு-பி. நா-௨00-பி.) அப்படிப்பட்ட பதிவுகளை எழுதினவன்பேரிலுண்டாயிருக்கிற நம்பிக்கையையும் அது எழுதப்பட்டபோது வியாபாரத்தின் வழக்கத்தை அனுசரித்து எப்படிப்பட்ட கிரமத்தோடு எழுதப்பட்டதோ அதையும் நானாவிதமான இதர சங்கதிகளையும் அனுசரித்து அதிகமாகவாவது கொஞ்சமாகவாவது ஆக்ஷேபனைகள் உண்டாகலாமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் அப்படிப்பட்ட பதிவுகள் ரோமகதேசத்தின சிவில் தருமசாஸ்திரப்படிக்கும் பிரான்சு ஸ்காட்லண்டு தேசங்களின் தருமசாஸ்திரப்படிக்கும் சாக்ஷியத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறதாய் காணப்படுகிறது. மேலும் ஜில்லாக்களிலுள்ள கோர்ட்டுகளிலேயும் அந்தப் பதிவுகள் எவன் புஸ்தகங்களிலெழுதப்பட்டிருக்கின்றனவோ அவன வியாச்சியத்தை ருசுச்செய்வதாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. எப்படியெனில், க௮௫௧௫ நவம்பர்மீ ௩௨-ல் தீர்க்கப்பட்ட க௮௫௧௫ கக-வது லக்கமுள்ள விசேஷ அப்பீல் வியாச்சியத்தில் பிரதிவாதிகளுக்கு வாதி வித்த கொஞ்சம் சரிகையின் விலை இவ்வளவென்று ருசுப்படுத்துவதற்காக வாதியின் கணக்குகளை சிவில் ஜட்ஜி பரிசோதிக்காமல் விட்டுவிட்டாரென்கிற ஏதுவைப்பற்றி வியாச்சியத்தை மறுவிசாரணைக் கனுப்பினதல்லாமல், அப்படிப்பட்ட விஷயங்களில் "ஒரு வர்த்தகனுடைய கணக்குகள் கிரமமாய்
"ருசுச்செய்யப்பட்டால் அவை ஒப்புவிக்கப்பட்ட சரக்குக
"ளின் விலையைச் செலுத்தவேண்டுமென்கிற சுதந்தரத்தை
"ஸ்தாபிப்பதற்குப் போதுமான லிகிதமூல சாக்ஷியமாயிரு

"க்கும்" என்று விதித்திருக்கிறார்கள். பிர்ஜிமோஹன் சவுதிரி என்பவர் சந்தர்சமீஷா என்பவர்பேரில் கொணடுவந்த வியாச்சியத்தில் கலகத்தா சதர்திவானி அதாலத்துக் கோர்ட்டார் வாதியின் கணக்குகளையும் அவனபக்ஷத்தில் சாக்ஷியமாக அங்கீகரிததார்கள். கஅசஅ-ம் வருஷத்திய தீர்ப்புபுத்தகத்தின் சஉக-பக்கம்.

உஉச. ஒரு வியாச்சியத்தின் கக்ஷிக்காரர்களுடைய கணக்குகள் உஉஉ-வது பிரிவில் உதகரிக்கப்பட்ட சக-சச-வது பிரிவுகளின நிபர்தனைகளினபடி அவர்கள்பக்ஷத்தில் உபபல சாக்ஷியமாகமாத்திரம அங்கீகரிக்கத்தகுமென்று தோற்றலாம். ஆனால் கஅ௱௫௫-ஆறு உ-வது ஆக்டை ஏற்படுத்துவதற்கு முன்னமே (பூர்வம் நடாததாகக் காணவந்தபடி) தனித்த சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படத்தக்கதாயிருந்தால் அதை அங்கீகரிக்கலாமாவெனகிற சங்கதிக்கு அந்தப் பிரிவுகளினால் பாதகமுண்டாகமாட்டாதென்று தோற்றுகின்றது. ஏனெனில், "இதுவரையில யாதொருகோர்ட்டில் ஏற்றுக்கொண்டு வரபபட்ட யாதொரு சாக்ஷியத்தை இந்த ஆக்டினால் ஏற்றுக்கொள்ளக்கூடாதென்று "அர்த்தமாகிறதாக எண்ணக்கூடாது" என்று கடைசிபிரிவில் விதிக்கப் பட்டிருக்கிறது.

## அ. மரணதேசையிற் சொல்லிய வார்த்தைகளைக்குறித்த கருத சாக்ஷியம்.

உஉ௫. கொலைசெய்ததாகவாவது அனியாயமாய் மரணமுண்டுபண்ணினதாகவாவது குற்றஞ் சாட்டப்பட்ட விஷயத்தில இறந்துபோனவன் சட்டப்படி சத்தியஞ்செய்யாமல் மரணம் நேரிடப்போகிறதென்கிற பயமுண்டாயிருக்கும்போது அந்த மரணத்தின் காரணத்தைக்குறித்துச் சொல்லிய வார்த்தைகள் குற்றஞ் சுமத்தப்பட்டவன் எதிரிவில்லாதகாலத்தில் சொல்லப்பட்டபோதிலும், சாக்ஷியத்தில் அங்கீகரிக்கப்படலாம். ஸ்டா-கஉ-கஅ. கஅகக ௵ உ௫-வது ஆ-கஎக-பி.

உஉ௬. கொலையாவது அநியாயமான கொலையாவது சாதாரணமாய் ரகசியமாய்ச் செய்யப்படுகின்றன. ஆகையால் அதைச் செய்ததைக்குறித்து நல்ல சாக்ஷியத்தைச் சம்பாதிப்பது சாதாரணமாய் கஷ்டமென்பதைப்பற்றி மேற்சொல்லிய சுருதவசனங்கள் முக்கியமாய்ச் சாக்ஷியத்தில் அங்கீகரிக்கப்படுகின்றன. மேலும் ஒரு மனிதன் மரணம் நேரிடப்போகின்றதென்றும் சீக்கிரத்தில் தான் பகவானுடைய சன்னிதானத்தில் உத்தரவு சொல்லவேண்டியிருக்கின்றதென்றும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கையில் பிரமாணத்தினால் கட்டுப்பட்டவனாயிருந்தால் உண்மையைப் பேசுவதற்கும் பொய்சொல்லாம லிருப்பதற்கும் எவ்வளவு பலமான காரணம் இருக்குமோ அவ்வளவு காரணம் இருக்குமென்கிற ஆலோசனையின்பேரில் அப்படிப்பட்ட சாக்ஷியத்தை அங்கீகரிப்பது நியாயமாகவே யிருக்கின்றது பெ-சஎ௱எ-பி. ஸ்டா-௩உ.

உஉஎ. மரணதெசையில் சங்கதிகளைத் தெரிவிக்கிறவன் மரணமடையாதிருந்தால் சட்டப்படி பிரமாண பூர்வகமாய் விசாரிக்கபபடுவதற்காக எவ்வளவு பரிபக்குவமும் திடமும் உள்ள கியானவந்தனா யிருக்கவேண்டுமோ அவ்வளவு பரிபக்குவமும் திடமுமுள்ள கியானவாநதனா யிருக்கவேண்டியது அவசியமே. அநதப்படியே மிகவும் சொற்ப வயதுடைய குழந்தைகளின் மொழிகளையும் பின்னால் இப்படி நடக்குமென்று தெரிந்துக்கொள்வதற்காவது பிரமாண மிப்படிப்பட்டதென்று பாவிப்பதற்காவது தகுந்த திடமான கியானமில்லாத இதராளுடைய வசனங்களையும் ஏற்றுக்கொள்ளத்தக்கவையல்ல. ரா - உஅ. பெ-சஅஎ-பி.

உஉஅ. மரணதெசையில் சங்கதிகளைத் தெரிவித்தவன் அப்படித் தெரிவிக்குங்காலத்தில் நெருங்கின மரணாபாயத்தில் தானிருந்ததாக நினைத்திருக்கவேண்டியது மிகவும் அவசியம். அவன் மறுபடியும் தான் பிழைக்கலாமென்

திற ஆசை எவ்வளவுமுள்ளவனு யிருக்கக்கூடுமென்று இங்கிலண்டுதேசத்திய சாமானிய தர்மசாஸ்திரத்தில் விதி ஏற்பட்டிருப்பதாகக் காணப்படுகின்றது; ஆனுல், "ஒரு "வன் இறந்துபோகிறகாலத்தில் சொல்லிப்போன சங்கதி "களை அப்படிச்சொன்னகாலத்தில் தனக்கு சொஸ்தமாகு "மென்று எண்ணங்கொண்டிருந்தபோதிலும் சாவு சமீபி "த்திருந்ததாக அவன் நினைத்தானென்றும் அப்படியே சமீ "பித்திருந்ததென்றும் ருசுவானுல் சாக்ஷியமாக ஏற்றுக் "கொள்ளலாம்" என்று கஅ௫௩-௫) உ-வது ஆக்ட்டு உக-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கின்றது. கஅகூக-௫)உ௫-வது ஆக்ட்டு ௬எக-வது பிரிவையும் பார்த்துக்கொள்க.

உஉக. ஆனுல் அப்படிக்குச் சொன்னவன் தனக்கு மரணம் சமீபித்திருக்குமென்று தான் அறிந்ததாக அவன வாயினுல் விளக்கப்படவேண்டிய அகத்தியமல்ல. அவன் அப்படிப்பட்ட ஆபத்திலிருந்ததாக அவனுக்குத் தெரிவித்திருந்த சங்கதியை அவனுடைய நடத்தையைக் கொண்டும் அந்த விஷயத்தின் எல்லாச் சங்கதிகளைக்கொண்டும் ஊகித்தறியலாம். ரா-உக-௬0.

உ௬0. அப்படிக்கிச் சொன்னவன் அந்த மொழிகளைச் சொல்லுகிறகாலத்தில் தனக்கு உடனே பிராணுபாயம் உண்டாகுமென்று நினைத்திருந்தால் அப்படி அவன் அந்த வார்த்தைகளைச் சொன்னபிறகு எவ்வளவு காலஞ்சென்று அவன் உண்மையாய் மரணமடைந்தாலும் நிமித்தமில்லை. ஆயினும் அவன் சீக்கிரமாய் இறந்துபோகிறதாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கவேண்டிய அகத்தியம். எதினுலெனில், அவன் சிலகாலம் பிழைத்திருப்போமென்று நினைத்திருந்தால் அவனுடைய சித்தஸ்திதி வேறு விதமாயிருக்கலாம்.

உ௬க. மரணதெசையில் தெரிவிக்கப்படும் வார்த்தைகள் கிரிமினல் வழக்குகளில்மாத்திரம் அங்கீகரிக்கப்படும். சாட்டப்படுங் குற்றம் கொலையைக்குறித்ததாயா

வது காரப்பண்ணியதுடன் செய்யப்பட்ட கொலையக்கு நிதத காயாவது இருக்கவேண்டும். மேலும் அவ்வசனங்களின் கருத்து மரணம், மரணமுண்டாக்கததக்க காயங்கள், இவ்விரண்டிலதையாகிலும் குறித்த சங்கதிகளாயாவது காரணமாயாவதிருக்கவேண்டும். இதுவுமல்லாமல் மரணத்தைக்குறித்த சங்கதிகள் அல்லது காரணங்களைவிட மற்றெதையும் ருசுச்செய்வதற்காக அந்த வார்த்தைகள் ஏற்றுக்கொள்ளப்படககூடாது. அந்தப்படியே தப்புசாக்ஷி சொல்லுதல், கருப்பத்தைப் பின்னப்படுத்துதல், பறிதல், இப்படிப்பட்ட குற்றங்கள் மரணத்தோடு சம்பந்தப்பட்டிருந்தபோதிலும அவைகளைக்குறித்து காவலாளி குற்றவாளியென்று ருசுச்செய்வதற்காக மரணதசையிற சொல்லிய வார்த்தைகள் ஏற்றுக்கொள்ளப் படாமற்போயிற்று. (ரா உஅ) இந்த வரையறைகள் கஅகக (ஆறு) உடு-வது ஆக்ட்டின் கஎக-வது பிரிவில் கண்டிராதது உண்மையே. ஆனால அந்த வித்யை-கஅரு ந (ஆறு) உ-வது-ஆக்ட்டு உகூ-வது பிரிவுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இப்போதிருக்கிற நிபந்தனைகளின காரியத்தை இன்னும் பின் போமென்கிற விருப்பமுடையவன் விஷயத்திலும் வியாபிக்கச் செய்யவேணடுமென்று மாத்திரம சட்ட விதாயகசபையார எணணங்கொண்டிருந்ததாகக் காணப்படுகின்றது.

உகூஉ. இதுமாத்திரமல்ல 'இறந்துபோனவன் சொன்"ன வார்த்தையானது எப்படிப்பட்டதா யிருந்தால் அவன் 'பிழைத்திருந்து சாக்ஷியாய் விசாரிக்கப்படும பட்சத்தில் 'ஏற்றுக்கொள்ளப்படுமோ அப்படிப்பட்டதா யிருக்கவே"ண்டும்; ஆகையால் நடந்த சங்கதிகளல்லாமல் அபிப்பி"ராய விஷயங்களைக்குறித்த வசனம் ஏற்றுக்கொள்ளப்ப"டமாட்டாது." ரா-உஅ.

உகூகூ. மரணதசையில சொல்லப்படும் வார்த்தைகள் ஒரு மேஜிஸ்திரேட்டினால் குற்றஞ் சாட்டப்பட்டவன் முன்பாக பிரமாணத்தன்பேரில் எழுதி வாங்கப்படவேண்டும். குற்றஞ் சாட்டப்பட்டவன் அந்த மொழிகளைச் சொன்ன

வனை எதிர்க்கேள்வி கேட்கும்படி இடங்கொடுக்கவேண்டும். இந்தப்படி நடத்துவது (கஅகக௫-உ௫-வது ஆக்ட்டு ௩௭க-வது-பிரிவின்படி) மிகவும் அவசியமாயிராமற் போனபோதிலும் கூடுமானபோது அப்படி நடப்பிப்பது உத்தமமாயிருக்கும். "இறந்துபோனவனைக் கேள்க்கப்ப "ட்ட கேள்விகளினால் அப்படிப்பட்ட வார்த்தைகள் வெளி "யாக்கப்பட்டனவென்பது எவ்வளவும் ஆக்ஷேபணை ஆக "வேமாட்டாது." ரா-உ௮.

உ௩௪. மரணதெசையில் சொல்லப்படும் வார்த்தைகள் குற்றஞ் சுமத்தப்பட்டவனுக்கு விரோதமாய் ஏற்றுக் கொள்ளப்படுவதுபோலவே அவனுக்கு அனுகூலமாயும் ஏற்றுக்கொள்ளப்படலாம். ந-க௬௯-பி.

உ௩௫. மரணதெசையிற் சொல்லப்படும் வார்த்தையிலுண்டாயிருக்கிற நம்பிக்கையைக்குறித்து ஆலோசிப்பதில் இதன்பின் வரப்பட்ட அம்சங்களை யோசிப்பது யுக்த்தமாயிருக்கும். அந்த அம்சங்களாவன:—க, அம்மொழிகள் [illegible]களால் சரியாய்த் தெரியப்படுத்தப் பட்டனவாகக் காணப்படுகின்றதா? உ, நடந்த விஷயத்தைக்குறித்து இறந்துபோனவன் ஸ்பஷ்டமான அபிப்பிராயங் கொண்டவனுய்க் காணப்பட்டானு, அல்லது அந்தக் கலகத்திலுண்டான கலவரத்திலும் தொந்தரையிலும் அவன் பிசகாய் கிரகித்திருக்கலாமா? ௩, அவன் குற்றஞ் சாட்டப்பட்டவன்பேரில் ஏதாவது பகையாகிலும் பொருமையாகிலும் வைத்திருந்தானு? ௪, அந்த வார்த்தைகளைச் சொன்னவனை எதிர்கேள்வி கேட்பதற்குக் குற்றஞ் சாட்டப்பட்டவனுக்கு ஏதாவது சமய முண்டாயிருந்ததா? என்பவையே. ஏா-௩௪.

## ௬. சில விஷயங்களில் வைத்தியர்களுடைய கருத்து சாக்ஷியம்.

உ௩௬. குற்றவிசாரணைச் சட்டமாகிய புது ஆக்ட்டில் அடியிற் கண்டவிதமாய் விதிக்கப்பட்டிருக்கின்றது. அந்த

ஆக்ட்டின் - ௩௬௮-வது பிரிவு. "ஸிவில் சர்ஜியன் என்னும் "டாக்டரையாவது வேறே யாதொரு வைத்தியரையாவது 'மெஜிஸ்திரேட்டானவர் சாக்ஷியாக பரிசோதனைசெய்து அந்தப் பரிசோதனையை எழுதி அதில் அவர் கிரமமாய்க் 'கையெழுத்துப் போட்டிருக்கிற வாக்குமூலத்தைக் கோர்ட்டார் பிரத்தியக்ஷமான சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ள வேண்டியது. ஆனால், சாக்ஷியாகிய அந்த சர்ஜனையாவது வைத்தியரையாவது வரவழைக்க வேணுமென்பதற்குத் தகுந்த முகாந்திரமிருந்தால் அவரைச் சமமன் அனுப்பி வரவழைக்கக் கோர்ட்டாருக்கு அதிகாரமுண்டு."

உ௩௭. ௩௭0-பிரிவு.—"வதத்துப் பரிசோதனைசெய்து ரிபோர்ட்டு பண்ணும்படி யாதாமொரு கிரிமினல் பரிசீலனை ... டந்துகொண்டிருக்கையிலாவது அதைப்பற்றி பிர "சமவிசாரணை நடக்கையிலாவது கிரமமாய் தன்னிடத்துக்கு அனுப்பப்பட்ட யாதொரு வஸ்து அல்லது பொருளைக் குறித்து கவர்ன்மெண்டாருடைய ரசாயன பரிசோதனைக்காரர் எழுதுகிற ரிபோர்ட்டாகிய யாதொரு தஸ்தாவேஜை அதில் அந்தப் பரிசோதனைக் காரருடைய 'கையெழுத்திருந்தால் செஷன்கோர்ட்டு பரிசீலனையில் சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளவேண்டியது. அந்த தஸ்தாவேஜு எதார்த்தமானதல்லவென்று சந்தேகிக்கக் கோர்ட்டாருக்குத் தகுந்த முகாந்திர மிருந்தாலொழிய மேற்படி கையெழுத்து அவரதுதானென்றும், அதில் கையெழுத்து செய்தவர் அந்தத் தொழிலுடையவர்தானென்றும ருசுப்படுத்திக் கொள்ளவேண்டியதில்லை."

உ௩௮. இப்படிப்பட்ட விஷயங்களில் சுருதசாக்ஷியத்தை ஏற்றுக்கொள்வது உலகத்தாருடைய அனுகூலத்தை யோசித்தே செய்யப் படுகின்றனவென்று சொல்லலாம். அப்படிச்செய்வது இண்டியாதேசத்தின் பிரஜைகளினுடைய தற்கால விசேஷமான ஸ்திதியுடன் ஒப்பியிருக்கலாம். ஆனால் அந்தப் பிரஜைகள் நாகரீகத்தில் அபிவிர்த்தியடைந்து வைத்தியர்கள் அதிகமாகிறபடியால், சட்டம் மாற்றுப்

படுமென்று தோற்றுகின்றது. இண்டியாதேசத்தில் ரசாயன பரிம்சாதனைக்காரர் எப்போதும் சாஸ்திரத்தைப் பயிற்சி செய்த வைத்தியர்கள் வெகுசாய் எப்போதைக்கும் துரைத்தனத்தாருடைய சேவகத்தில் இருக்கிறார்கள். அவர்களுக்கு வேலை அதிகமாயிருக்கிறபடியால், அவர்களை அடிக்கடி வரும்படி செய்வதினால் ஜனங்களுக்கு சங்கடத்துக்கிடமுண்டாகும். இதுவுமல்லாமல் துரைத்தனத்தாருடைய சேவகத்தில் இருக்கிற வைத்தியர்களுக் குண்டாகிய பொறுப்பானது சத்தியத்தினால் ஏற்படுகிற உறுதிப்பாட்டைவிட இகழ்வானதா யிருந்தபோதிலும், அதைப்பற்றி அவர்கள் தக்க ஒளதிரிலிருக்கப்பட்ட சங்கதியைச் சாதாரணமாயும் சாக்கிரதையாயும பரீக்ஷித்து, உண்மையான சங்கதியைச் சொல்லுவார்களென்று எண்ணபபடவேண்டும். மேலும், மேஜிஸ்திரேட்டுக்கெதிரில் வைத்தியனைச் சாக்ஷியாய் விசாரிக்கும் விஷயத்தில் சத்தியததன்பேரிலாவது பிரமாண வாசகத்தின்பேரிலாவது அவனை விசாரித்ததாகவும் எதிர்கேழ்வி கேட்கக் குற்றஞ் சுமததப்பட்டவனுக்கு சமயமுண்டா யிருந்ததாகவும ஊகிக்கலாம்.

## சாக்ஷிகளைச் சம்மன்செய்து வரவழைத்தல்.

உ௬௬. கக்ஷிக்காரரையும் சாக்ஷிகளையும் வரவழைக்கும் விதத்தைக்குறித்து அதிகமாய் விவரித்துச் சொல்லவேண்டுமென்பது இச் சிறுநூலின் கருத்தில் சேர்ந்த விஷயமல்ல. கிரிமினல் விஷயங்களில் சாக்ஷிகளை வரவழைப்பதைக்குறித்த நிபந்தனைகள் சற்றேறக்குறைய சிவில் விஷயங்களி லிருப்பதுபோலவே இருக்கின்றன. அந்த நிபந்தனைகள சிவில் கிரிமினல் புரொசிடியூர் ஆக்ட்டுகளில் காணப்படும். சம்மனில் சாக்ஷிக்காரன் வரவேண்டிய காலமும் இடமும், அவன் தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காண்பிக்கவேண்டியதோ அல்லது சாக்ஷி சொல்லவேண்டியதோ அதையும் கண்டெழுதவேண்டும். தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காண்பிக்கவேண்டியதாயிருந்தால் அந்தத்

தஸ்தாவேஜின் விவரத்தையும் சம்மனில் கண்டெழுதவே ண்டும். அவ்வழக்கின் கக்ஷிக்காரர்களுடைய பெயர்களை யும் காணவேண்டும். கஅருகூ - ௵ அ - ஆ - கருஉ-பி. கஅசுக ௵ உரு-ஆ-கஅஎ-பி.

அகத்தியமில்லாதபோது மேன்மையுள்ளவர்களை வரவ ழைக்கக்கூடாது. (ரு-பி-நவம்பர்-கஅசுக ௵ சக ப.) அவ ர்கள் அகத்தியமாய் வரவேண்டியிருக்கும்போது கஅருகூ ௵ அ - வது ஆக்ட் கூசு - கூரு-பிரிவுகளின்படி கோர் ட்டார் அவர்களுக்குச் சம்மன் அனுப்புவதற்குப் பதிலா கக் கடிதமெழுதலாம். அக்கடிதத்தில் நியாயாதிபதியினு டைய உத்தியோக முத்திரையும் கையெழுத்தும் போடப் பட்டு, சம்மனில் எழுதப்படவேண்டிய எல்லா விவரங்க ளும் எழுதப்பட்டிருக்கவேண்டும். மேலும் அது எல்லா விதங்களிலும் சம்மனைப்போலவே எண்ணப்படவேண் டும்.

சர்க்கார் உத்தியோகஸ்தன் கோர்ட்டுக்கு வரவேண் டிய தேதியை நிச்சயிப்பதில் அந்த உத்தியோகஸ்தன் எந் ததேதியில், அப்படிக் கோர்ட்டுக்கு வரும்படி உத்தரவு கொடுக்கக்கூடுமோ அந்தத்தேதியை அவருடைய உத்தி யோகத் தலைவர் மூலமாய் தெரிந்துகொள்ளப் படவேண் டும். ரு-பி-நவம்பர்-கஅசுக ௵ சக-ப.

சர்க்கார் கச்சேரிகளிலிருக்கும் தாழ்ந்த உத்தியோகஸ்த ர்கள் ராஜகாரிய சம்பந்தமான தஸ்தாவேசுகளைக் கொண் டுவந்து காட்டும்படி அவர்களை வரவழைக்கக்கூடாது. அ ப்படிப்பட்ட தஸ்தாவேசுகள் சாக்ஷியத்திற்காக வேண்டி யிருக்குமாயின் அவைகளை அனுப்பும்படி கோர்ட்டார் க லெக்ட்டரையாவது அந்த டிபார்ட்டுமெண்டுக்குத் தலைவ ராயிருக்கிற மற்றொருவரையாவது கேட்கவேண்டும். கஅருகூ ௵ அ-ஆ-கஊஅ - பி. ரு-பி-நவம்பர் கஅசுக ௵ சக-ப.

கூடுமானால் சம்மன் சாக்ஷிக்காரன் கையிலேயே கொ டுக்கப்படவேண்டும். அவன் அகப்படாமற்போனால் அவ

ஞேடுகூடக் குடியிருக்கிற அவனுடைய குடும்பத்திலுள்ள வயசுவந்த யாதொரு ஆண்பிள்ளையினிடத்தில் கொடுத்து அவனிடத்தில் சேர்ப்பிக்கச்சொல்லலாம். ௯-புரோ-ஆ கருரு-பி. ௯ - புரோ-ஆ-க௯௭-பி.

௨௪௦. இரமப்பிரகாரம் சம்மன் செய்யப்பட்ட சாக்ஷி நியாயமான காரணத்தைத் தெரிவிக்காமலே அந்தச் சம் மனிற் கண்டபடி நடந்துகொள்ளாமற்போனுல் அவனை வாரண்டுமூலமாய்ப் பிடித்துக், கோர்ட்டுமுன்பாகக் கொண்டுவரலாம். மேலும், "சாக்ஷியைச் சாக்ஷியம் சொல் "லவரும்படி நிற்பந்தப்படுத்தினுலொழிய அவன் வரமா "ட்டானென்று" மேஜிஸ்திரேட்டானவர் நம்புவதற்கு நி யாயமிருந்தால், அவர் சம்மன் பிறப்பிப்பதற்குப் பதிலாக முதலிலேயே வாரண்டு பிறப்பிக்கலாம். ௯ - புரோ-ஆ-க௯௮-பி. ௯-புரோ-ஆ-ககக-௪௮௮-பி-கள்.

௨௪௧. சாக்ஷிசொல்லவாவது தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டவாவது நியாயஸ்தலத்துக்கு வரவேண்டியிருக்கிற ஒரு சாக்ஷிக்காரன் தனக்குச் சம்மனுவது வாரண்டாவது சேராமலிருக்கும்படி ஓடிப்போனுலும், ஒளித்துக்கொண்டாலும், (சிவில் விவகாரமாயிருந்து அந்தச் சாக்ஷிக்காரனுடைய சாக்ஷியமாவது தஸ்தாவேசாவது முக்கியமாயிருக்கிறதாகத் தெரிவிக்கப்பட்டால்) ஒரு விளம்பரப் பத்திரிகையை எழுதி அதில்கண்ட விடத்துக்கு குறித்தகாலத்தில் வந்து சாக்ஷியம் சொல்லும்படி ஏற்பாடுசெய்து அதை அவன் வீட்டினிடத்தில் ஒட்டலாம். மேலும் அந்த விடத்திற்குக் குறித்தகாலத்தில் அவன் வராமற்போனுல் எவ்வளவு அசையுள்ள சொத்தைத் தடைசெய்தால் அப்படித் தடைசெய்யும் செலவுகளுக்கும் வராததற்காக விதிக்கப்படும் அபராதத்திற்கும் அதிகப்படாதென்று கோர்ட்டாருக்கு நியாயமாய்த் தோற்றப்படுமோ, அவ்வளவு அசையுள்ள அவனுடைய அசையும்பொருளையாவது அசையாப்பொருளையாவது தடைசெய்யலாம். க௮நிக(ரு)

அ-ஆ-கருகூ-கக௦-கசுஅ-பி-கள். வி-புரோ-ஆ-கஅகூ-பி.
இர்நூல்-உசஎ-பி.

உசஉ. "சாக்ஷிக்காரன் கோர்ட்டுக்குவந்து தனக்குச்
"சம்மன் சேராமலிருக்கும்பொருட்டுத் தான் ஒளித்துக்
"கொண் டிருந்ததில்லையென்றும் ஓடிப்போனதில்லையெ
"ன்றும் விளம்பரப் பத்திரிகையில் கண்டகாலத்தில் குறித்
"த இடத்துக்குத் தான்வர அந்த விளம்பரச் சங்கதி தருந்
"தகாலத்தில் தனக்குத் தெரியாமற் போச்சுதென்றும்
"கோர்ட்டாருக்குத் திருப்தியாகும்படியாய்த் தெரிவித்
"துக்கொண்டால்" அவனுடைய சொத்துக்களைத் தடையி
லிருந்து விடுவிக்கலாம். மேலும், அப்படி விடுவிக்கும் வி
ஷயத்தில் "தடைசெய்ததற்குள்ள செலவுகளைக்குறித்
"துக் கோர்ட்டாருக்கு யுக்தமாகத் தோற்றுகிறபடி உத்த
"ரவு செய்யலாம்." சாக்ஷிக்காரன் கோர்ட்டுக்கு வாராம
லிருந்தாலும் விவரங்களைத் தெரியப்படுத்திக் கோர்ட்டா
ரைத் திருப்திசெய்யாமற் போனாலும் தடைசெய்ததற்கு
ரிய செலவுகளையும் அவன் வராததற்காக பீனல்கோட்
டின்-கஎஉ-வது பிரிவுபடி அவனுக்கு எவ்வளவு அபராதம்
விதிக்கலாமோ அவ்வளவு மொத்தத்தையும் அவன் செலு
த்தாமற்போனால் அந்தச் செலவுகளுக்கும் அபராத மொ
த்தத்திற்கும் ஈடாகும்படி அவனுடைய சொத்துக்களை வி
ற்றுப்போடலாம். அந்தச் செலவுகளையும் அபராதத்
தொகையையும் அவன் செலுத்துவானாயின், அவனுடைய
சொத்துக்களைத் தடையிலிருந்து விடுதலை செய்யவேண்டு
ம். (கஅருகூ௵) அ-ஆ-ககூ௦-பி. வி-புரோ-ஆ-ககூ௦-பி.)
"தஸ்தாவேசைக் கொண்டுவந்து காட்டும்படிக்குமாத்தி
"ரம் சம்மன் கொடுக்கப்பட்டவன் அதற்காக நேரில் ஆஜ
"ராகாமல் ஒருவனைக்கொண்டு அந்தத் தஸ்தாவேசைக்
"காண்பித்தால் அவன் சம்மனில் கட்டளையிட்டபடி நட
"ந்துகொண்டவனாக எண்ணப்படுவான்." கஅருகூ௵
அ-ஆ-கருகூ-பி.

உசக. இதுவிஷயத்தில் பீனல்கோட்டின் க0-வது அத்தியாயத்தில் இதனடியிற்கண்ட விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

"சட்டப்படி தகுந்தவனுயிருக்கிற யாதொரு சர்க்கார் "உத்தியோகஸ்தனிடத்திலிருந்து வருகிற சம்மனாவது நோ "டீசாவது கட்டளையாவது தனக்குச் சேராமல் தப்பித்துக் "கொள்ளும்பொருட்டு எவனாவது மறைந்தால், அப்படிப் "பட்டவன் ஒரு மாசத்திற்கு அதிகப்படாமல் எவ்வளவு கா "லத்திற்காவது வெறுங்காவலில் வைக்கப்படுவான்; அல் "லது ஐந்நூறுரூபாய்வரையில் அபராதத்திற்குள்ளாவான்; "அல்லது இரண்டுதெண்டனைக்கும் உட்படுவான். யா "தொரு கோர்ட்டில் நேராய் அவனாவது அவனுக்காக அ "வனுடைய ஏஜெண்டாவது ஆஜராகும்படிக்காகிலும் யா "தொரு தஸ்தாவேஜைக்கொண்டுவந்து காட்டும்படிக்காகி "லும் அந்தச் சம்மன் முதலானவை பிறப்பிக்கப்பட்டிருந் "தால், அதற்கு மறைந்தால், அவன் ஆறுமாசத்துக்கு அதிக "ப்படாமல் எவ்வளவு காலத்திற்காவது வெறுங்காவலில் "வைக்கப்படுவான்; அல்லது ஆயிரம் ரூபாய் வரையில் அ "பராதத்திற் குள்ளாவான்; அல்லது இரண்டு தெண்டனை "க்கும் உட்படுவான்." பீ-கோ-கஎஉ-பி.

"சட்டப்படிக்குத் தகுந்தவனுயிருக்கிற யாதொரு சர் "க்கார் உத்தியோகஸ்தனிடத்திலிருந்து வருகிற சம்மனா "வது நோடீசாவது கட்டளையாவது தனக்காகிலும் வே "றொருவனுக்காகிலும் சேரவொட்டாமல் எவனாவது வே "ணுமென்று எவ்விதமாய்த் தடுத்தாலும், அந்தச் சம்மன் "முதலானதுகளை எவ்விடத்திலாவது சட்டப்படி ஒட்டு "வதை வேணுமென்று தடுத்தாலும் ஒட்டியிருப்பதை எடு "த்துப்போட்டாலும், சட்டப்படி தகுந்தவனுயிருக்கிற "யாதொரு சர்க்கார் உத்தியோகஸ்தனுடைய உத்தரவின் "படி சட்டப்பிரகாரம் விளம்பரஞ் செய்வதை வேணுமெ "ன்று தடுத்தாலும், அப்படிப்பட்டவன் ஒரு மாசத்திற்கு

"அதிகப்படாமல் எவ்வளவு காலத்திற்காவது வெறுங்காவ
"லில் வைக்கப்படுவான்; அல்லது ஐந்நூறு ரூபாய்வரை
"யில் அபராதத்திற்குள்ளாவான்; அல்லது இரண்டுதெண்
"டனைக்கும் உட்படுவான்; யாதொரு கோர்ட்டில் நேரா
"ய் அவனாவது அவனுக்காக அவனுடைய ஏஜெண்டாவது ஆ
"ஜராகும்படிக்காகிலும்; யாதொரு தஸ்தாவேஜைக் கொ
"ண்டுவந்து காட்டும்படிக்காகிலும், அந்தச் சம்மன் முத
"லானதுகளாவது விளம்பரமாவது பிறப்பிக்கப்பட்டிரு
"ந்து அதைத் தடுத்தால் அவன் ஆறுமாசத்திற்கு அதிகப்ப
"டாமல் எவ்வளவு காலத்திற்காவது வெறுங்காவலில் வை
"க்கப்படுவான்; அல்லது ஆயிரம் ரூபாய் வரையில் அபரா
"தத்திற்குள்ளாவான்; அல்லது இரண்டுதெண்டனைக்கும்
"உட்படுவான்." பி-கோ-கஎரு-பி.

"சட்டப்படி தகுந்தவனாயிருக்கிற யாதொரு சர்க்கார்
"உத்தியோகஸ்தரிடத்திலிருந்து வருகிற சம்மன் நோட்டீ
"சுட்டளை அல்லது விளம்பரத்தின்படிக்கு ஒரு காலத்தி
'லிடத்திலே எவன் சட்டப்பிரகாரம் நேராய் ஆஜராகவே
"ண்டியவனாகவாவது தனக்காக ஏஜெண்டை ஆஜர்படுத்த
"வேண்டியவனாகவாவதிருக்கிறானோ, அவன் அந்தக் கால
"த்தில் அவ்விடத்திலே வேணுமென்று ஆஜராகாவிட்டா
"லும் ஆஜராகவேண்டிய இடத்திலிருந்து நியாயமாய்
"போகவேண்டிய காலத்திற்கு முன்னமே போய்விட்டா
"லும் அவன் ஒரு மாசத்திற்கு அதிகப்படாமல் எவ்வளவு
"காலத்திற்காவது வெறுங்காவலில் வைக்கப்படுவான்;
"அல்லது ஐந்நூறு ரூபாய்வரையில் அபராதத்திற் குள்ளா
"வான்; அல்லது இரண்டு தெண்டனைக்கும் உட்படுவான்.
"யாதொரு கோர்ட்டில் நேரா யவனாவது அவனுக்காக
"ஏஜெண்டாவது ஆஜராகும்படி அந்தச் சம்மன் முதலான
"வை பிறப்பிக்கப்பட்டிருந்து அந்தப்படி ஆஜராகாவிட்டா
"ல் அவன் ஆறுமாசத்திற் கதிகப்படாமல் எவ்வளவு கால
"த்திற்காவது வெறுங்காவலில் வைக்கப்படுவான்; அல்

“லது ஆயிரம் ரூபாய்வரையில் அபராதத்திற் குள்ளாவான்;
“அல்லது இரண்டு தெண்டனைக்கும் உட்படுவான்.”

திருஷ்டாந்தம்.

“(a) சென்னப்பட்டணம் சுப்ரீம் கோர்ட்டில் பிறப்பி
“க்கப்பட்ட கட்டளையின்படி சட்டப்பிரகாரம் அந்த கோ
“ர்ட்டுக்கு முன்பாக ஆஜராகவேண்டியவன் அந்தப்படி
“வேணுமென்று சட்டப்பிரகாரம் ஆஜராகாவிட்டால் அ
“வன் இந்த பிரிவில் சொல்லியிருக்கிற குற்றத்தைச் செய்
“தவனாகின்றான்.”

“(b) யாதொரு ஜில்லா ஜட்ஜியினாலே பிறப்பிக்கப்ப
“ட்ட சம்மன்படிக்குச் சட்டப்பிரகாரம் அந்த ஜட்ஜிக்கு
“முன் சாக்ஷியாக ஆஜராகவேண்டியவன் அந்தப்படி வே
“ணுமென்று ஆஜராகாவிட்டால் அவன் இந்தப் பிரிவில்
“சொல்லியிருக்கிற குற்றத்தைச் செய்தவனாகிறான்.” பி-கோ-௧௭௪-பி.

௨௪௪. ஒரு வியாச்சியத்தில் ஒரு கக்ஷிக்காரன் சிவில் கோர்ட்டாருக்கு திருப்தியாகும்படியான நியாயங்களைக் காண்பித்து கேட்டுக்கொண்டதின்பேரில் மற்றொரு கக்ஷிக்காரனை சாக்ஷிசொல்லும்படி வரவழைக்க ௧௮௫௯-ளு ௮-வது ஆக்ட்டு ௧௬௧-முதல் ௧௬௫-வரையிலுள்ள பிரிவுகளின்படி சிவில் கோர்ட்டாருக்கு அதிகாரமுண்டு. கக்ஷிக்காரர்கள் வந்து சாக்ஷிசொல்லும்படி அவர்களுக்குக் கோர்ட்டார் ஒரேதடவையாய்ச் சம்மன் பிறப்பித்தாலும் பிறப்பிக்கலாம். அல்லது அவர்கள் வந்து ஏன் சாக்ஷிசொல்லக்கூடாதோ அதற்குக் காரணத்தைத் தெரிவிக்கும்படியாய் முதலில் அறிக்கை அனுப்பினாலும் அனுப்பலாம். வியாச்சியம் நடந்துகொண்டிருக்கையில் எப்போதாவது கோர்ட்டார் தங்களிஷ்டப்படி ஒரு கக்ஷிக்காரனைச் சாக்ஷியாய் வரவழைத்து விசாரிப்பதற்காயினும் அந்தக் கக்ஷிக்காரன் வசத்திலாகிலும் அதிகாரத்திலாகிலும்

இருக்கிற எந்த தஸ்தாவேஜையாவது கொண்டுவந்து காட்டும்படி செய்யவாயினும்-கசுசுஎ-வது பிரிவின்படி கோர்ட்டாருக்கு அதிகாரமுண்டு. மேலும் எவனாவது ஒரு வழக்கில் சாக்ஷிக்காரனாயிராமற்போனாலும் அவனை கஅசுக-ஞ் உகூ-வது ஆக்ட்டின்படி கோர்ட்டார் வரவழைக்கலாம். கிரிமினல் புரோசிடியூர் கோட்டின் உசுகூ-உ0க-கூசுஎ-வது பிரிவுகளின்படி சாக்ஷிகளை வரவழைக்க கிரிமினல் கோர்ட்டாருக்குச் சாதாரணமான அதிகாரங்களுண்டு.

உசரு. உண்மையாய்க் கோர்ட்டுக்கு வந்திருக்கிற எவனாவது சாக்ஷிக்காரனாயிருந்தாலும் இராமற்போனாலும் அவனுக்குச் சம்மன் பிறப்பிக்காமலே சாக்ஷி சொல்லவேண்டுமென்றாவது அவன் வசத்திலாகிலும் அதிகாரத்திலாகிலு மிருக்கும் எந்தத் தஸ்தாவேஜையாவது உடனே கொண்டுவந்து காட்டவேணுமென்றாவது உத்தரவுசெய்ய கஅருக-ஞ் அ-வது-ஆக்ட்டு கஎக-வது பிரிவின்படி கோர்ட்டாருக்கு அதிகாரமுண்டு. ஆனால் அந்த ஆக்ட்டின்படி சாக்ஷிக்காரனுக்கு அப்படிப்பட்ட அதிகாரமில்லையென்று தோற்றுகின்றது. (க-வி-அ-கோ-ருடைய கஅருசு-வருஷத்திய திர்ப்புப் புத்தகத்தின் உகூ-வது பக்கத்தில்கண்ட சந்தர் சிகார் சர்க்கார் என்கிறவருடைய விசாச்சியம்.) கோர்ட்டுக்கு வந்திருக்கு மெவனாவது வரவழைக்கப்படாதவனாயிருந்தபோதிலும் அவனைச் செஷன்கோர்ட்டார் விசாரிக்கலாம். (கி-புரோ-ஆ-கூசுஎ-பி.) மேலும் குற்றஞ் சாட்டப்பட்டவனும் கூஎரு-வது பிரிவின்படி அப்படிப்பட்டவனை விசாரிக்கலாம்.

உசசு. "பிரமாணஞ் செய்விக்க சட்டப்படி அதிகாரமுடைய யாதொரு சர்க்கார் உத்தியோகஸ்தனானவன் "அனையாவது உண்மையைச் சொல்லுவதாக பிரமாணஞ் "செய்யச்சொல்லுகையில், அவன் அப்படி பிரமாணஞ்செ "ய்யமாட்டேனென்றால் அவன் ஆறுமாசத்திற்கு அதிகப்

"படாமல் எவ்வளவு காலத்திற்காயினும் வெறுங்காவலில் "வைக்கப்படுவான். அல்லது ஆயிரம் ரூபாய்வரையில் "அபராதத்திற் குள்ளாவான்; அல்லது இரண்டு தெண்டனை "க்கும் உட்படுவான்." பி-கோ-௧௭௬-பி.

"யாதொரு சங்கதியைக்குறித்து சர்க்கார் உத்தியோக "ஸ்தனிடத்தில் உண்மையைச் சொல்லுகிறதாக சட்டப் "படி உடன்பட்டிருக்கிறவனெவனாவது அந்தச் சர்க்கார் "உத்தியோகஸ்தன் சட்டப்படி தனக்குள்ள அதிகாரத் "தைச் செலுத்திக்கொண்டிருக்கையில் அந்த உத்தியோ "கஸ்தனால் அந்தச் சங்கதியைக்குறித்துக் கேட்கப்பட்ட "யாதொரு கேள்விக்கு உத்தரவு சொல்லமாட்டேனென் "றால், அவன் ஆறுமாசத்திற்கு அதிகப்படாமல் எவ்வளவு "காலத்திற்காவது வெறுங்காவலில் வைக்கப்படுவான்; "அல்லது ஆயிரம் ரூபாய் வரையில் அபராதத்திற்குள்ளா "வான்; அல்லது இரண்டு தெண்டனைக்கும் உட்படுவான்." பி-கோ-௧௭௯-பி.

"எவனாவது எழுதுவித்த வாக்குமூலத்திலே அவனைக் "கையெழுத்துப்போடச்சொல்லி சட்டப்பிரகாரம் அதி "காரமுடைய யாதொரு சர்க்கார் உத்தியோகஸ்தன் கே "ட்கையில் அவன் அந்தப்படி கையெழுத்துப் போடமாட் "டேனென்றால் அவன் மூன்றுமாசத்திற்கு அதிகப்படா "மல் எவ்வளவு காலத்திற்காவது வெறுங்காவலில் வைக்க "ப்படுவான்; அல்லது ஐந்நூறு ரூபாய் வரையில் அபராத "த்திற்குள்ளாவான்; அல்லது இரண்டு தெண்டனைக்கும் "உட்படுவான்." பி-கோ-௧௮௦-பி.

௬௭. ஒரு சாக்ஷிக்காரன் நியாயஸ்தலத்துக்கு வந்த போதாவது அவ்விடத்தி லிருக்கும்போதாவது நியாய திபதி முகாந்திர மில்லாமலே சாக்ஷி சொல்லமாட்டே னென்றாலும், அவன் வசத்திலிருக்கிற தஸ்தாவேஜைக் காண்பிக்கமாட்டேனென்றாலும், அப்படிப்பட்டவனை மே ஜிஸ்திரேட்டு உத்தரவுசெய்தால், ஏழுநாளைக்கு அதிகப்

படாமல் நியாயமான எவ்வளவு காலம் வரையிலாவது கடினமான காவலில் வைக்கலாம். அப்படிக் காவலின் வைத்தபின்பும் அவன் சாக்ஷி சொல்லமாட்டேனென்று வது தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டமாட்டேனெ ன்றாவது ஒரே பிடியாய் மறுத்தால், அவனைக்குறித்து ஸி-புரோ-ஆக்ட்டின் ௧௬௩-வது பிரிவின்படி நடப்பிக்க லாம். ௧௮௫௯ஆ ௮-ஆ - ௧௬௧ - பி. ஸி - புரோ - ஆ- ௧௧௨-௩௫-௧௬௩-பி-கள்.

௨௪௮. ௧௮௭௨ஆ ௧-வது ஆக்ட்டு ௧௭௦-வது பிரி வில் விதிக்கப்பட்டிருக்கிற தென்னவெனில்:—"ஆஜராகி "சாக்ஷி சொல்லும்படிக்காவது தஸ்தாவேஜைக் கொண்டு "வந்து காட்டும்படிக்காவது, வியாச்சியத்தில் கக்ஷிக் "காரனாயிருப்பவனுக்கு உத்தரவு செய்யப்பட்டால் அ "வன் தகுந்த காரணமில்லாமல் அந்த உத்தரவின்படி "நடந்துகொள்ளாவிட்டாலும், உத்தரவின்படி ஆஜராகி "யாவது தன்னிஷ்டமாய் கோர்ட்டில் வந்தாவதிருந்தும் "கோர்ட்டார் கேட்கும்போது தகுந்த காரணமில்லாமல் "சாக்ஷி சொல்லமாட்டேனென்றாலும், மேற்படி சம்ம "னில் கண்டிருப்பதாகிய அவன் வசத்திலாவது அதிகா "ரத்திலாவதிருக்கிற யாதொரு தஸ்தாவேஜைக் காட்ட "மாட்டேனென்றாலும், கோர்ட்டார் அவனுக்கு விரோத "மாய் தீர்ப்புசெய்தாலும் செய்யலாம்; அல்லது வியாச் "சியத்தின் சங்கதிக்குத் தக்கபடி தங்களுக்கு யுக்தமாகத் "தோற்றுகிற பிரகாரம் வேறே உத்தரவு செய்தாலுஞ் செ "ய்யலாம்."

௧௮௭௭ஆ ௨-வது ஆக்ட்டு ௨௨-வது பிரிவின்படி ஒரு வியாச்சியத்தில் ஒரு கக்ஷிக்காரனாயிருக்கும் ஒரு சாக்ஷியானவன் தன் வசத்திலாவது அதிகாரத்திலாவ திருக்கும் எந்தத் தஸ்தாவேஜையாவது கொண்டுவந்து காண்பிக்கும்படி மற்றொரு கக்ஷிக்காரன் கோரினால், அ

ந்த தஸ்தாவேசு அவன் வழக்குக்குச் சம்பந்தப்படாததா யாவது அதற்கு முக்கியமல்லாததாயாவ திருக்குமாயின், அந்தச் சாக்ஷிக்காரன் அந்தத் தஸ்தாவேஜைக் கொண்டு வந்து காட்டக் கட்டுப்பட்டவனல்லன். ௩௦௩-பி-பார்த்துக்கொள்க.

## சாக்ஷிகளுடைய தகுதி.

உ௪௯. சாக்ஷிகளுடைய தகுதியைக் குறித்தோவென்றால்; "இதனடியிற் கண்டிருப்பவர்கள்மாத்திரம் சாக்ஷி "சொல்லத் தகுதியுடையவர்களல்லர்" என்று க௮௫௫ஆ உ-வது ஆக்ட்டு க௪-வது பிரிவில் விவரிக்கப்பட்டிருக்கின்றது.

"முதலாவது.—எந்தச் சங்கதிகளைக்குறித்து விசாரணை "செய்யப்படுகிறார்களோ அந்தச் சங்கதிகளை நன்றாய்த் "தெரிந்துகொள்ள மாட்டாதவர்களாயாவது அவைகளைச் "சரியாய்ச் சொல்லமாட்டாதவர்களாயாவது இருக்கிற "இளவயதுக் குட்பட்ட சிறுபிள்ளைகள்."

"இரண்டாவது.—எந்தச் சங்கதிகளைக்குறித்து விசார "ணை செய்யப்படுகிறார்களோ அந்தச் சங்கதிகளை நன்றா "ய்த் தெரிந்துகொள்ளமாட்டாதவர்களாயாவது அவை "களைச் சரியாய்ச் சொல்லமாட்டாதவர்களாயாவது இரு "க்கிற பைத்தியம் பிடித்தவர்கள்; மேலும் பைத்தியம் "பிடித்தவர்களென்று தெரிந்திருக்கிறவர்களை யாருக்கு "முன்பாக அப்படிப்பட்டவர்கள் ஆஜராகவேண்டுமோ, "அந்தக் கோர்ட்டாருடைய அல்லது அதிகாரியினுடைய "சம்மதத்தை முன்னதாய்ப் பெத்துக்கொள்ளாமல் சா "க்ஷியாக வரவழைக்கக்கூடாது."

உ௫௦. தகுந்த வயதில்லாமையைப் பற்றியாவது மத சம்பந்தமான நம்பிக்கைக் குறைவைப்பற்றியாவது எவர்களைப் பிரமாணத்திற்காவது உறுதி மொழிக்காவது உட்படுத்தக் கூடாதென்று கோர்ட்டாருக்குத் தோற்றுமின்

றதோ அவர்கள் நாங்கள் உண்மையைச்சொல்லுவோம்; சகலமும் உண்மை, உண்மையல்லது *வேறொன்றுமில்லை, என்று கேவல பிரமாண வசனங்களைச் சொன்னதின்பேரில் விசாரிப்பதைக்குறித்தும்; அபிடெவிட் என்கிற எழுத்துமூலமான பிரமாண பத்திரிகையைப் பெறுவதைக்குறித்தும் மேற்படி ஆக்ட்டு கரு-கசு-கஎ-வது பிரிவுகளில் விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆயினும் அப்படிப்பட்ட எந்த சாக்ஷிக்காரனாவது அந்த பிரமாண வசனத்தைச் சொன்னபின்பு மனப்பூர்வமாய் *பொய்ச்சாக்ஷி சொன்னால் அவன் பொய்ச்சத்தியஞ் செய்தால் எப்படியோ அப்படியே தண்டிக்கப்படுவான்; ஆனால் இந்த விஷயத்துக்குத் தக்கபடி (இண்டைட் மெண்ட்) குற்ற ஏற்பாடு பத்திரிகைமாத்திரம் மாற்றப்படவேண்டியது.

உருக. மேற்படி ஆக்ட்டு கஅ-வது பிரிவின்படி எவனாவது "ஒரு வியாச்சியத்தில் பற்றுள்ளவனாயிருக்கிற கா "ரணத்தைப்பற்றியாவது" கக்ஷிக்காரரில் யாருக்காவது பந்துவாயிருக்கிற காரணத்தைப்பற்றியாவது, சாக்ஷி சொல்லத் தகாதவனாகமாட்டான். மேலும், ஒரு சிவில் வியாச்சியத்திலாவது விவகாரத்திலாவது கக்ஷிக்காரனாயிருக்கிறவனெவனாவது "கக்ஷிக்காரனாயிராவிட்டாலெப் "படியோ அப்படியே தனக்காகவாவது அந்த வியாச்சிய "த்திலாகிலும் விவகாரத்திலாகிலும் கக்ஷிக்காரனாயிருக் "கிற மற்றொருவனுக்காகவாவது சாக்ஷி சொல்வதற்கும் "தன் வசத்திலாயினும் அதிகாரத்திலாயினும் இருக்கிற "தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காண்பிக்கிறதற்கும்" தகுதியுள்ளவனென்றும் அப்படி சாக்ஷி சொல்லும்படிக்காவது தஸ்தாவேசைக் காட்டும்படிக்காவது அவனைப் பலவந்தப் படுத்தலாமென்றும் ககூ-வது பிரிவில் கண்டிருக்கின்றது. குற்ற விசாரணைக் காலத்தில் பிராதுக்காரன் சாக்ஷியாக விசாரிக்கப்படவேண்டியதென்று கஅசுக௵ உரு-வது ஆக்ட்டு ககங-ககச-உரு0-ஙகூ0-வது பிரிவு

களில் தெளிவாய் விதிக்கப்பட்டிருக்கின்றது. மேலும், கிரிமினல் வியாச்சியத்தில் பிராதுக்காரனானவன் வெகுமதி பெறுவதற்குச் சுதந்திர முள்ளவனு யிருந்தபோதிலும் சாக்ஷியாயிருக்கத் தகுதியுடையவனென்று பௌசுதாரி அதாலத்துக்கோர்ட்டார் கஅ௨௪ஞ பிப்ரவரி மீ உ௫உ கஅ௯௨ஞ ஜூலை மீ உ௭உ உள்ள சர்க்கியூலர் உத்தரவுகளில் தெரிவித்திருக்கிறார்கள். ௩ா - வெ - புரோ ரா-கி-அ - கோ - ச - உ-அஅ - ப-பார்த்துக்கொள்க.

உ௫உ. சிவில் விவகாரங்களில் புருஷனாவது பெண்சாதியாவது அவர்களுக்குரிய அந்தரங்க விவகார விஷயங்கள் தவிர மற்ற விஷயங்களில் ஒருவர்க்கொருவர் அனுகூலமாயாவது பிரதி கூலமாயாவது சாக்ஷிசொல்லத் தகுந்தவர்களென்று மேற்படி ஆக்ட்டின் ௨௦ - வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கின்றது. அந்தரங்க விஷயங்களைக்குறித்து இனிச் சொல்லப்படும். கிரிமினல் வியாச்சியங்களில் புருஷன் பெண்சாதி இருவரில் யார்பேரிலாவது மற்றொருவர் பிரியாது செய்தபட்சத்தில், அவர்களிருவர்களில் ஒருவர் மற்றொருவருக்கு விரோதமாய்ச் சாக்ஷிசொல்லத் தகுதியுடையவராவார்களாவென்கிற சங்கதியைக்குறித்து "அவ் "விருவரில் ஒருவர் மற்றொருவருக்கு அனுகூலமாயாவது "பிரதிகூலமாயாவது சொல்லுகிற சாக்ஷியத்தை முழுதி "லும் நீக்கிவிடாமல் அதின் தகுதியைக்குறித்து ஆக்ஷேபி "ப்பதைப்பார்க்கிலும், அதை நம்புவதைக்குறித்து ஆக்ஷே "பிப்பது இண்டியா தேசத்தின் ஜனங்களுடைய இப்போ "தைய ஸ்திதியில் மிகுந்த க்ஷேமகரமான பொது விதியா "யிருக்குமென்று பௌசுதாரி அதாலத்துக்கோர்ட்டார் அ "பிப்பிராயப்பட்டார்கள். போதுமான இதர சாக்ஷியமி "ருக்கிறபட்சத்தில் மேற்கண்டபடி சம்பந்தப்பட்டிருப்ப "வர்களுடைய சாக்ஷியத்தை உபயோகிப்பது மிகவும் ஆ "க்ஷேபனைக் கிடமாயிருக்கும்." (கஅ௩௦ஞ-மார்ச்சு மீ ௬உ ச-உ.) அதுபோலவே கலகத்தா நிஜாமத் அதாலத்

துக் கோர்ட்டாருடைய கஅசஈ- வருஷத்திய தீர்ப்பு புத்தகத்தின் உள-வது பக்கத்தில் கண்டிருக்கிற கோடை மல்லஞ்சி என்கிறவருடைய வியாச்சியத்தில் மனைவியின் சாக்ஷியமில்லாமலே குற்றத்தை ஸ்தாபிப்பதற்கு வேறே போதுமான சாக்ஷியமுண்டா யிருந்ததினாலே அவளுடைய சாக்ஷியத்தைப் பெற்றுக்கொண்டது சரியல்லவென்று தீர்ப்புச் செய்யப்பட்டது. க-வி-அ-கோ-ருடைய கஅருரு-வருஷத்திய தீர்ப்புபுஸ்தகத்தின் உஙஙு-வது பக்கத்திற்கண்ட-படாவியா-ரோவணி-பஹாரணி என்கிறவனுடைய வியாச்சியத்தில் ஒருவன் தன்மனைவியைக் கெடுத்துப்போட்டதாக மற்றொருவன்பேரில் செய்த பிராதில் மனைவி தன் புருஷனுக்காக சாக்ஷிசொல்லத் தகுதியுடையவளென்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் அந்த விஷயத்தில் குற்றமும் நேராய் மனைவியின்பேரில் சாட்டப்படவில்லை. பின்பு அவளுடைய சாக்ஷியம் பொய்யானதென்று ருசுவாய் அவள் பொய்ச் சத்தியஞ் செய்ததாக அவள்பேரில் குற்றம் ஸ்தாபிக்கப்பட்டது. ஆகையால் சாதாரணமாய் அப்படிப்பட்ட சாக்ஷியத்தை விசேஷமாய் நம்பக்கூடாதென்று தெரிந்து கொள்ளவேண்டும். மஹம்மதிய தருமசாஸ்திரப்படி கிஸ்ஸாஸ் என்றால் பிரதீகாரஞ் செய்யுஞ் சுதந்திரத்தை ஸ்தாபிப்பதற்கு மனைவியின் சாக்ஷியம் போதுமானதா யிருக்கவில்லை. ஆனால் உபபல சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படத் தக்கதாயும் "அநுமேயத்தின்பேரில் குற்றத்தை ஸ்தாபித்ததையும் "எவ்வளவு வரைக்காயினும் தோன்றியபடி சிக்ஷை விதிக்கிற தீர்ப்பையும் ஸ்திரப்படுத்தப் போதுமானதாயும்" இருந்தது. க-வி-அ-கோ - தீர்ப்பு-க-பு எ-பக்கத்திற்கண்ட ஹரீரா என்கிறவனுடைய வியாச்சிய விஷயத்துக்குச் சேர்த்திருக்கப்பட்ட மக் நாடன் என்பவருடைய குறிப்பு.

உருங. கஅசுo-ம் வருஷத்தில் ஒருவன் கொலைசெய்ததாய் கொண்டுவரப்பட்ட பிராதின்பேரில் தலைச்சேரியில் விசாரிக்கப்பட்டு அவனுடைய மனைவியின் சாக்ஷியம் சங்க

திகளைக்குறித்த சாக்ஷியத்திஞல் உறுதிப்படுத்தப்பட்டதின் பேரில், அவன் குற்றவாளியாக்கி தூக்கிவிடப்பட்டான். ௧௮௫௨ஞு௵ ௧௫-வது ஆக்ட்டு ௩-வது-பிரிவின்படி மனைவி தன் புருஷனுக்கு விரோதமாய்ச் சாக்ஷிசொல்லத் தகுதியுடையவளல்லவென்கிற காரணத்தைப்பற்றி குற்றத்தை ஸ்தாபிப்பதில் ஒத்துக்கொண்ட கற்றறிந்த நியாயாதிபதிகள் மிகுந்த அபவாதத்திற்கு ஆளாஞர்கள். இந்த அம்சத்தைக்குறித்து மேற்படி ஆக்ட்டு மஹாராணியவர்களுடைய நியாயஸ்தலங்களில் வழங்குகிற சாக்ஷிய நிபந்தனைகளை அனுசரித்திருக்கின்றதென்றும், அந்த ஆக்ட்டை ஏற்படுத்தினபோது "மஹாராணி யவர்களுடைய நியாயஸ்தலங்கள்" என்பதில் பௌசுதாரி அதாலத்துக் கோர்ட்டாவது ஜில்லாச்சேரி கோர்ட்டாவது சேர்ந்திருக்கவில்லையென்றும், மேலும் கிரிமினல் விவகாரங்களில் மனைவி தன் புருஷனுக்கு விரோதமாய்ச் சாக்ஷிசொல்லத் தகுமென்றெண்பிக்க இந்த ஆக்ட்டில் ஒன்றுமில்லையென்று விதிக்கிற மேற்கண்ட பிரிவில் அவள் சாக்ஷிசொல்லத் தகுதியுடையவளல்லவென்று விதித்திராமற் போனபோதிலும் அந்த ஆக்ட்டு ஏற்படுத்தப் படாமலிருந்தால் அவள் எந்த ஸ்திதியிலிருப்பாளோ அந்த ஸ்திதியிலேயே அவள் வைக்கப்பட்டிருப்பதாகச் சொல்வது போதுமானதா யிருக்குமென்று தோற்றுகின்றது. அந்த ஸ்திதியானது மஹாராணி யவர்களுடைய கோர்ட்டுகளில் மனைவி சாக்ஷியா யிருக்கத்தகாதவளென்றும், கனம்பொருந்திய கம்பெனியாருடைய கோர்ட்டுகளில் சாக்ஷியா யிருக்கத் தகுந்தவளென்றும் அர்த்தமாகிறதாய்க் காட்டுகின்றது.

ஒரு புருஷன் தன்மனைவிக்கு விஷமிட்டு அவளைக் கொல்ல எத்தனஞ்செய்ய அது சித்தியாமற் போனதாகவாவது; அவன் அவளை சிரமப்படுத்தினதாகவாவது, அவனுக்கு அவளைப் பலாத்காரமாய்க் கலியாணம் செய்து கொடுத்ததாகவாவது நடத்தப்படும் கிரிமினல் விவகாரங்களில்

மனைவி தன் புருஷனுக்கு விரோதமாய்ச் சாக்ஷிசொல்லத் தகுதியுடையவளா யிருக்கிறள். ரா-௧௪௫.

௨௫௪. சாட்சிக்காரன் குழந்தையாயாவது இடசித்தமில்லாதவனாயாவதிருந்தால் நியாயாதிபதியானவர் அவனிடத்தில் பிரமாண வசனஞ் சொல்லுவிப்பதற்கு முன்பாவது, பிரமாணஞ் செய்விப்பதற்கு முன்பாவது அவனை விசாரித்து அவன் சாக்ஷி சொல்வதற்குத் தகுதியுடையவனு அல்லவாவென்பதை நிச்சயிக்கவேண்டும். ஆனால் அந்தச் சாக்ஷிக்காரனிடத்தில் பிரமாண வசனம் சொல்லுவித்து விசாரணை நடத்தப்படும்போதாவது எதிர்க்கேழ்வி கேழ்க்கப்படும்போதாவது அவன் சாக்ஷிசொல்லத் தகுதியுடையவனல்லனென்று தெரியவந்தால், அப்போது அவனுடைய சாக்ஷியத்தை ரிகார்ட்டிலிருந்து எடுத்து விடவேண்டும். பி-சா-௯-பதி-௧௫௩-ப.

௨௫௫. யாதொரு குற்றஞ் செய்ததாகக் குற்றம் ஸ்தாபிக்கப்பட்ட காரணத்தைப்பற்றி எவனும் சாக்ஷியாயிருக்கத் தகாதவனாகமாட்டானென்று ௧௮௩௭௵ ௧௯-வது ஆக்ட்டில் விசேஷமாய் விதிக்கப்பட்டிருக்கின்றது.

௨௫௬. ஒரு காவலாளியின் குற்ற ஒப்புதலானது மற்றொரு காவலாளிக்கு அநுகூலமான அல்லது பிரதிகூலமான சாக்ஷியமாகாமற் போனபோதிலும், கிரிமினல் புரோசிடியூர் கோட் என்கிற குற்ற விசாரணைச்சட்டத்தின் ௨௦௯-வது பிரிவின்படி ஈடொட்டான மன்னிப்பை ஏற்றுக்கொண்டிருக்கிற ஒரு உடந்தைக்காரனுடைய சாக்ஷியம் மிகவும் நம்பத்தகுந்ததாகாமற்போனாலும், அவன் சாக்ஷியாயிருக்கத் தகுதியுடையவனா யிருக்கிறன். மேலும், தான் குற்றவாளிதானென்று ஒப்புக்கொண்ட ஒரு பிரதிவாதியின் சாக்ஷியத்தைத் தன்னுடன்கூட யிருக்கிற மற்றொரு பிரதிவாதிக்கு விரோதமாய் ஏற்றுக்கொள்வதில் இண்டியாவிலுள்ள கோர்ட்டார் இங்கிலீஷ் கோர்ட்டாருடைய வழக்கத்தை அநுசரிக்க இஷ்டமுடையவர்களா யிருந்த

லாம். பெர்ரி-பால்மர் என்பவர்கள் தப்பு தஸ்தாவேஜை உண்டுபண்ணினதாக கஅசுஉ௵ ஜனவரிமீ௴ சுஉ-யில் லண்டன் பட்டணத்தில் செண்ட்ரல் கிரிமினல் கோர்ட்டில் ஒரே காலத்தில் அவர்க ளிருவர்பேரிலும் பிராது செய்யப் பட்டது. பெர்ரி என்கிறவள் குற்றத்தை ஒப்புக்கொண் டாள். அதின்பேரில் நடத்தப்பட்ட விசாரணையில் அவள் பால்மருக்கு விரோதமாய்ச் சாக்ஷிசொல்லும்படி ஒப்புக் கொள்ளப்பட்டாள். இவைப்போன்ற விஷயங்கள் ஆர் ச்சி போல்டு கிரந்தத்தின் உ௱௫-வது பக்கத்தில் எழுதப் பட்டிருக்கின்றன.

## சாக்ஷிகளின் விசாரணை.

உ௫ள- சாக்ஷிகளின் விசாரணையைக்குறித்து சிவில் புரோசிடியூர் ஆக்ட்டில் ஏற்பட்டிருக்கிற நிபந்தனைகள் கிரிமினல் புரோசிடியூர் ஆக்ட்டில் ஏற்பட்டிருக்கிற நிபந்தனைகளைப் போன்றவையாகவே யிருக்கின்றன. அவ்விரண்டு விஷயங்களில் எந்த விஷயத்திலாகிலும் கக்ஷிக்காரர்களின் முன்பாகவாவது, அவர்களின் [illegible]ார் வந்திருக்கிறார்களோ அவர்களின் முன்பாகவாவது கோர்ட்டில் பகிரங்கமாய் சாக்ஷியத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும். மேலும், கிரிமினல் விஷயங்களில் குற்றஞ் சாட்டப்பட்டவனாவது அவனுடைய காரியஸ்தனாவது பிராதுக்காரனையும் அவன் சாக்ஷிகளையும் எதிர்க்கேள்வி கேழ்க்கலாம். வாக்குமூலங்கள் நியாயாதிபதியின் எதிரில் அவர் சுதாவாய்க் கொடுக்கும் உத்தரவின்படிக்கு எழுதி வாங்கப்படவேண்டும். அவை சரித்திரரூபமா யிருக்கவேண்டும். ஆனால் விசேஷ காரணங்களைப்பற்றியாயினும், ஒரு கக்ஷிக்காரனாவது அவன் வக்கீலாவது கேட்டுக்கொண்டதின் பேரிலாயினும், யாதொரு முக்கியமான கேழ்வியையாவது உத்தரவையாவது கோர்ட்டார் எழுதிக்கொள்ளலாம். சாக்ஷியைக் கேட்கும் யாதொரு கேழ்வியைக்குறித்து உபயவாதிகளில் ஒருவனாவது அவன் வக்கீலாவது ஆக்ஷேபித்து அ

ந்தக் கேழ்வி கேழ்க்கும்படி கோர்ட்டார் உத்தரவுசெய்தா ல் அப்படிப்பட்ட கேழ்வியையும் அதற்குக் கொடுத்த ப தில் உத்தரவையும் எழுதி வைப்பதுமல்லாமல், அதைக்குறி த்துச் செய்யப்பட்ட ஆக்ஷேபனையையும், அந்த ஆக்ஷேப னைசெய்தவன் பெயரையும், அதைக்குறித்துக் கோர்ட்டார் செய்த தீர்ப்பையும், அந்த வாக்குமூலம் வாங்கும்போது அதில் எழுதிவைக்கவேண்டும். சாக்ஷி விசாரணை செய்யுங் காலத்தில் சாக்ஷிக்காரனுடைய முகக்குறி முதலிய நடத் தைகளைக்குறித்து முக்கியமாய்த் தோற்றுகிற அபிப்பிராய த்தைக் கோர்ட்டார் அல்லது மேஜிஸ்திரேட்டார் எழுதி வைக்கலாம். ஜட்ஜியாவது மேஜிஸ்திரேட்டாவது சுதா வாய் வாக்குமூல மெழுதிவாங்காத விஷயங்களில் ஒவ் வொரு சாக்ஷி விசாரணை நடக்கையில் அந்தந்தச் சாக்ஷிசொ ல்லுகிற சங்கதிகளின் முக்கிய கருத்தை ஞாபகத்திற்கா கக் குறிப்பா யெழுதி கையெழுத்துப்போட்டு வைக்கவே ண்டும். அப்பீலுக் கிடமில்லாத சிவில்விவகாரங்களில் சா க்ஷி வாக்குமூலங்களை விவரமாயெழுதி வாங்கவேண்டிய நிமித்தமில்லை. நியாயாதிபதி ஞாபகத்திற்காக எழுதி வைத்திருக்கிற குறிப்பே போதுமானதாயிருக்கும். மே லும், ஆறுமாசத்திற் கதிகப்படாமல் காவலில் வைக்கும்ப டியாய் மேஜிஸ்திரேட்டார்சிக்ஷை விதிக்கிற விஷயங்களில் அவர் அந்த சாக்ஷிசொல்லுகிற சங்கதிகளின் சாராம்சத்து க்கு மேற்கண்ட விதமாய் ஞாபகக் குறிப்பெழுதி வைத் தால் போதுமானதாயிருக்கும். அதிக விவரமாஎழுதிவை க்கவேண்டியது அவசியமென்று அவருக்குத் தோற்றினால் அப்படியே செய்யலாம். (௧அசுக ஹ உடு௨ ஆ-௨கூஎ- ௨சுஅ-பி. கள்.) "மேற் சொல்லியபடி ஞாபகக் குறிப்பெ "ழுத ஜட்ஜிக்குக் கூடாமையானால், அதற்குக் காரணத் "தை அவர் எழுதவேண்டியது. அப்பீல் செய்யக்கூடாத "வியாச்சியங்களில் அந்தக் ஞாபகக்குறிப்பு கோர்ட்டில் "பயிரங்கமாய் தான் சொல்லி எழுதுவித்து, அதில் தன் "கையெழுத்துப்போட்டு, அந்தக்கட்டில் வைத்துவைக்க

"வேண்டியது." (கஅருகஞூ அ-ஆ- கஎஉ பி) கிரிமினல் விஷயங்களில் "வாக்குமூலமானது சாக்ஷிக்குத் தெரிந்தி "ருக்கிற இன்ன பாஷையிலே அவனுக்கு வாசித்துக்காட் "டப்பட்டதென்றும், அவன் அதைச் சரியென்று ஒப்புக் "கொண்டால் அவன் அப்படி ஒப்புக்கொண்டானென்றும் "ஙியாபகக்குறிப்பு எழுதி, அதில் மேஜிஸ்திரேட்டாவது ஐ "ட்ஜியாவது கையெழுத்து பண்ணி, அந்த சாக்ஷியினுடைய "வாக்குமூலத்தோடு சேர்க்கவேண்டியது. சாக்ஷியத்தை "மேஜிஸ்திரேட்டானவர் தன் கையினு லெழுதாவிட்டால் "மேஜிஸ்திரேட்டு முன்பாகஅவருக்குக் கேட்கும்படிஅவரு "டைய உத்தரவு பிரகாரம் அவர் சொன்னவிதமாக அது "எழுதவிக்கப்பட்டதென்றும், அந்த ஙியாபகக்குறிப்பில்க "ண்டெழுதவேண்டியது." கி-புரோ-ஆ-க௬௫-ஷ்ஃ - க௬௯ வரை பிரிவுகளும் ௩௬௪-பி-ம.

உருஅ. அந்தந்த ஜில்லாவில் சாதாரணமாய் வழங்கி வருகிற பாஷையில் சாக்ஷியினுடைய வாக்குமூலம எழு திவைக்கவேண்டுமென்பது ஒரு சாதாரணமான விதியா யிருக்கின்றது. அப்படிப்பட்ட பாஷை எதுவோவென்று சந்தேகமுண்டாகிற விஷயத்தில் அது இன்ன பாஷை யென்று அவ்விடத்து கவரன்மெண்டாரால நிச்சயிக் கப்படவேண்டும். ஆனால் இங்கிலீஷ் பாஷையில் கொடு க்கப்படும் சாக்ஷியம் (சிவில் விவகாரத்தில் எல்லாக் கக்ஷி க்காரருடைய சம்மதியின்பேரில்) இங்கிலீஷிலேயே எழு தி வைக்கப்படலாம். மேலும், கிரிமினல் விஷயங்களில ஜட்ஜியாவது மேஜிஸ்திரேட்டாவது தன் கைபபட தன சொந்த பாஷையிலாகிலும் இங்கிலீஷ் பாஷையிலாகிலு ம் அந்த ஜில்லாவின் பாஷையிலாகிலும் வாக்குமூலங்க ளை எழுதிவைக்கும்படி அவ்விடத்துக் கவரன்மெண்டா உத்தரவு செய்யலாம். அகத்தியமானுல் அநத வாக்குமூ லத்தைச் சாக்ஷிக்குத் தெரிந்தபாஷையில் மொழிபெயாத துச் சொல்லவேண்டும், கிரிமினல் விஷயங்களில் குற்ற

றஞ் சாட்டப்பட்டவனுக்குத் தெரிந்த பாஷையில் மொழி பெயர்த்துச் சொல்லவேண்டும். ஆனால் அந்தக் குற்றவாளியானவன் காரியஸ்தனை நியமித்திருந்தால் அந்த வாக்குமூலம் அந்த ஜில்லாவில் சாதாரணமாய் வழங்குகிற பாஷையில் சொன்னால் போதும். ௧௮௫௯ ௵ ௮-ஆ-௧௭௨-பி. ௧௮௬௧ ௵ ௨௫-ஆ-௧௧௫-ஹூ-௧௧௮ வரையிலுள்ள பி-களும். ௨௪௧-௨௬௮-௩௬௪-பி-களும்.

௨௫௧. குற்றஞ் சாட்டப்பட்டவனிடத்தில் பிரமாணஞ் செய்விக்கவும், அல்லது உறுதிவசனம் சொல்லுவிக்கவுங் கூடாது. ஆனால் கக்ஷிக்காரர்களிடத்திலும் சாக்ஷிகளிடத்திலும் பிரமாணம் செய்வித்தாகிலும் உறுதி வசனத்தைச் சொல்லுவித்தாகிலும் அவர்களை விசாரிக்கவேண்டுமென்பது சாதாரணமான விதியாயிருக்கின்றது. கிறிஸ்துமதஸ்தராகிய சாக்ஷிகளினால் ௧௮௪௦-௵-௫-வது-ஆக்ட்டிற்கண்ட பிரமாணவாசகத்தைச் சொல்லுவிக்கிற தப்பான வழக்கம் சிலகோர்ட்டுகளில் உண்டாயிருக்கின்றது. அந்த ஆக்ட்டு இந்து அல்லது மகம்மதிய மதஸ்தர்களுக்காகவே ஏற்படுத்தப்பட்டது. மற்றெந்த மதஸ்தராயினும் எவ்விதமாய்ப் பிரமாணஞ் செய்தால் அதற்குக் கட்டுப்பட்டவர்களாக எண்ணிக்கொள்வார்களோ, அவ்விதமான பிரமாணம் அவர்களிடத்தில் செய்விக்கப்படவேண்டுமென்று தோற்றுகின்றது. ௧௮௫௯௵-௮-ஆ-௧௭௪-பி. ௧௮௬௧ ௵ ௨௫-வது-ஆக்ட்டு-௪௩-௨௦௪-௨௫௧-பி-கள்.

௨௬௦. விசாரணை யாரம்பத்தில் அந்த விவகாரத்தில் சம்பந்தப்பட்ட கக்ஷிக்காரர்கள் யாவரும் வந்திருக்கிறார்களாவென்று ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டும். கக்ஷிக்காரராயிராத சாக்ஷிகளைக் கோர்ட்டுக்கு வெளியில் போகச்சொல்லி விசாரணையின்பொருட்டு ஒவ்வொருவரை உள்ளே அழைப்பித்து, விசாரிக்கப்பட்டவர்களை வேறாகவும் விசாரிக்கப்படாதவர்களை வேறாகவும் வைப்பது யுக்தமாயிருக்கும். சாக்ஷிகளை அப்புறம் போகச்சொன்னபிறகு அவ

ர்களி வெளுவது கோர்ட்டிலேயேயிருந்தால் அதைப்பற்றி அவனை விசாரிக்கிறதில்லையென்று நியாயாதிபதியானவர் சொல்லக்கூடாது. அந்தச் சாக்ஷிக்காரன் அப்புறம் போகாமல் அப்படி நின்றிருப்பதினாலே அவன்பேரில நம்பிக்கைக்குக் குறைவு உண்டாகலாம். மேலும் அவன் அப்படி கீழ்ப்படியாமலிருந்ததற்காக அவன் கோர்ட்டாரை அவமரியதை செய்தவனாகத் தண்டிக்கப்படலாம். பெ-கூ ௦ எ-பி. பி-சா-க-பதி-கூகடு-ப.

உகக. ஒவ்வொரு சாக்ஷிக்காரனும் எந்தக் கக்ஷிக்காரன் தன்னை வரவழைத்தானோ அவனால் முதலில் விசாரிக்கப்படவேண்டும். அந்த விசாரணைக்கு (எக்ஜாமினேஷன் இஞ்சீப்) முக்கிய• சங்கதிகளைக்குறித்த விசாரணையென்று பெயர். பிறகு அந்தச் சாக்ஷிக்காரன் எதிர்கக்ஷிக்காரனால் எதிர்கேள்வி கேட்கப்படுகின்றான். கடைசியில் அந்தச் சாக்ஷிக்காரனை முதலில் அழைத்த கக்ஷிக்காரன் மறுபடியும் விசாரணைசெய்யலாம். "வியாச்சியத்துக்குச் சம்பந "தப்பட்டு அதற்கு முக்கியமாயிருக்கிறதென்று சாக்ஷிசொ "ல்லும் சங்கதிகளை எல்லாம் கோர்ட்டுக்கும் ஜூரிகளுக்கும் "விவரமாய்த் தெரியப்படுத்தவதே முக்கிய சங்கதிகளைக் "குறித்த விசாரணையின் காரியமா யிருக்கின்றது. எதிர்கே "ள்வி கேட்கும் காரியமானது, சாக்ஷிகளைப் பேதித்து ஆ "ராய்ந்து கண்டுபிடித்து திருத்திச் சரிப்படுத்தவதுதான் "மறுவிசாரணைச் செய்வதென்பது விவரித்துச்சொல்லுத "லும் சரிப்படுத்ததலும் கெடுதியில்லையென் றெண்பித்த "லும் கிரமப்படுத்துதலுமாம்." பி - சா - க - பதி - உ - பு-கூகடு-ப.

உகஉ. ஒரு கக்ஷிக்காரன் தன்சொந்தசாக்ஷியை பிரத்தியுத்தரபாலபோதக பிரசினைகளை கேட்கக் கூடாதென்பது சாதாரணமான விதியாயிருக்கின்றது. ஆனால் எதிர் கக்ஷிக்காரனுடைய சாக்ஷியை எதிர்கேள்வி கேட்கும்போது அப்படிப்பட்ட கேள்வியைக் கேட்கலாம். ஆயினும் இ

ந்த விதிக்குச் சில விலக்குகளுண்டு, அவை உடனே தெரிவி க்கப்படுகின்றன. பிரத்தியுத்தரபாவபோதக பிரசின் எ ன்பது பிரத்தியுத்தரத்தைத் தெரிவிக்கத்தக்கதாயினும், தெ ரிவிக்கும்படியான உத்தேச முடையதாகவாயினும், "ஆம்" "அல்ல" என்கிற சாதாரணமான உத்தரவைச் சொல்லத் தக்க முக்கிய சங்கதிகளை யுடையதாகவாயினும் இருக்கி ன்றது. கடைசியிற் சொல்லப்பட்ட விதமான பிரத்தியுத் தரபாவபோதக பிரசினைகளைகுறித்துப் பிலிப்ஸ் என்பவ ர் சரியாய்த் தெரியப்படுத்தி யிருப்பதென்னவென்றால்:— "இவ்விதமாய்ச் சாக்ஷிக்காரனிடத்திலிருந்து வெளிப்படுத் 'தப்படும் சாக்ஷியம் சுயமானதும் சகாயமற்றதுமான அவ "னுடைய சாக்ஷியமாகாது. ஆனால் அது விவகாரபோத "னைக்குரிய சாமர்த்தியத்தோடும் கக்ஷிக்காரன் ருசுப்படு "த்த விரும்புகிற சங்கதிகளைத் தெரிந்துகொண்ட பூர்ண "மான தெளிவோடும் யுக்ததிசெய்து, உருவப்படுத்தி, வர் "ணிக்கப்பட்ட வாக்குமூலமாகும்." ஆயினும் சாக்ஷிக்கா ரன் மூடனாயிருந்து வழக்கமான கேழ்வியினால் அவனுக் குச் சங்கதி போதமாகாவிட்டாலும், சங்கதி சிக்காயிருந் தாலும், பிரத்தியுத்தரபாவபோதக பிரசினையைக் கேட் பதற்கு அப்போதைக்கப்போது அவசியமுண்டாகலாம். மேலும், நியாயாதிபதியானவர் அப்படிப்பட்ட கேழ்விசெழு ப்பது அவசியமென றெண்ணும்போது அப்படிப்பட்ட கே ழ்வியைக் கேழ்க்கும்படி உத்தரவுசெய்ய எப்போதும் அவ ருக்கு யுக்த்தாதிகாரம் உண்டு. பி. சா-உ-பு-௬௦ உ-ப.

உகூஙு. கேவலம் பிரஸ்தாபரூபமான (அதாவது உத கரித்துக் காட்டுகிற) கேழ்விகளையும் அவற்றிற்குச் சம்பந்த ப்பட்டும் விசாரணை விஷயத்துக்கு விரோதமில்லாமலுமிரு க்கிற மறுமொழிகளையும் பிரத்தி யுத்தரபாவபோதக பிரசி னைகளென்று ஆக்ஷேபிக்கப்படமாட்டாது. முக்கிய மில் லாதவையாயும உதகரித்துக் காட்டுகிறவையாயு மிருக்கிற விஷயங்களைப்பற்றி அப்படிப்பட்ட கேழ்வி கேழ்ப்பதினால்

அதிக காலதாமசப்படாமலிருக்கும். (பெ-கூ க க-பி. பி-சா-கூ-பதி-உ-பு-௪௦ க.-ப.) ஆதலால் காலதாமச மாகாமலிருக்கும்பொருட்டு எதிரிலிருக்கும் எந்த மனிதனையாகிலும் வஸ்துக்களையாகிலும் இன்னதென்று சாக்ஷிக்காரன் நிதானித்துச் சொல்லவேண்டியிருக்குமாயின், அந்த மனிதனையாவது வஸ்துக்களையாவது அவனுக்குக் காட்டுவது வழக்கமாயிருக்கின்றது. ஆயினும் முக்கியமான விஷயங்களில் அந்த மனிதன் அவ்விட மிருக்கிறானா இல்லையாவென்று சுற்றிப் பார்க்கும்படியாவது, சற்றேறக்குறைய ஒன்றைப்போலவே இருக்கிற இதர வஸ்துக்களுக்குள் அந்த வஸ்துவைத் தெரிந்தெடுக்கும்படியாவது அவனுடன் சொல்வது நலமாயிருக்கும். அப்போது, சாக்ஷி சொல்லும் உத்தரவானது மனிதனாவது வஸ்துவாவது காண்பிக்கப்பட்டாலெவ்வளவு மதிப்புள்ளதாயிருக்குமோ அதைவிட அதிக மதிப்புள்ளதாயிருக்கும். பெ-கூ க உ-கூ க ௩-பி-கள்.

௯உ௬௪. ஒரு சாக்ஷி கோர்ட்டுக்கு வெளியிற் சொல்லிய சில சங்கதிகளைத் தான் சொன்னதேயில்லையென்று மறுத்தால் அப்படி அவன் வெளியிற்சொன்ன சங்கதிகளை ருசுபடுத்தி, அவனிடத்தில் நம்பிக்கையில்லாமற் செய்யும்பொருட்டு, சில சமயங்களில் வேறொரு சாக்ஷியை விசாரிப்பது அகத்தியமாய் நேரிடும். இப்படிப்பட்ட விஷயத்தில் "முக்கிய சாக்ஷி இன்னின்ன வார்த்தைகளைச் சொன்னான்" என்று நேராய்ப் பிந்திய சாக்ஷியைக் கேட்க்கலாமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் முந்திய சாக்ஷி அந்தருணத்தில் சொன்ன சங்கதி தனக்குத் தெரிந்திருப்பதைச் சொல்லும்படி சாமானிய வசனங்களினாலே இந்தச் சாக்ஷியைக் கேட்பதற்கு முன்னதாக மேற்கண்ட விதமாகிய பிரத்தியுத்தரபாவபோதக பிரசினைகளைச் சாக்ஷியைக் கேட்கக்கூடாதென்பது உத்தமமான அபிப்பிராயமென்று தோற்றுகின்றது. பி-சா-உ-பு-௪௦ க-ப, பெ-கூ க உ-பி.

உகரு. ஒரு கக்ஷிக்காரன் தன் சாக்ஷியைப் பிரத்தியுத்தர பாவபோதக பிரசினைகள் கேழ்க்கக்கூடாதென்றும், எதிர் கக்ஷிக்காரனுடைய சாக்ஷியை அப்படிப்பட்ட கேழ்வி கேழக்கலாமென்றும் விதிக்கும் நிபந்தனைக்கு சாக்ஷிக்காரன் தன்னை கோறிய கக்ஷிக்காரனுக்கு அனுகூலஞ் செய்வதற்கே திருஷ்டி வைத்திருப்பானென்றும் எதிர்க் கக்ஷிக்காரனுக்கு விரோதமா யிருப்பானென்றும் ஊகிக்கப்படுவதே முக்கிய காரணமா யிருக்கின்றது. ஆனால் பல விஷயங்களில் மேற்சொன்னதற்கு விரோதமாய் சாக்ஷியைக் கோறிய கக்ஷிக்காரனுக்கு அந்தச் சாக்ஷி விரோதமாயும் எதிர்க் கக்ஷிக்காரனுக்கு அநுகூலமாயு மிருப்பதுண்டு. இப்படிப்பட்ட விஷயங்களில் எந்தச் சாக்ஷியாவது சொல்லும் மறுமொழிகளினால் அசம்மதியா யிருப்பதாயாவது விரோதமா யிருப்பதாயாவது தெரிவித்தால், அப்படிப்பட்ட சாக்ஷியை பிரத்தியுத்தர பாவபோதக பிரசினைகளைக் கேழ்க்கும்படி கோர்ட்டார் கக்ஷிக்காரனுக்கு உத்தரவு செய்வதுமன்றி, எதிர் கக்ஷிக்காரனால் அழைக்கப்பட்ட சாக்ஷியாயிருந்தாலும், தன பக்ஷத்தில் இஷ்டமுண்டா யிருக்கிறதாகக் காட்டுகிற சாக்ஷியைப் பிரத்தியுத்தர பாவபோதக பிரசினையைக் கேட்கவொட்டாமல் கண்டிப்பார்கள். பி - சா - கூ - பதி - உ - பு-சா0 ௲-சா0 எ-ப-கள். க அருருஅறுப உ-ஆ-௲ 0 -பி.

உகசு. எந்த முக்கியமான அம்சங்களைக்குறித்துச் சாக்ஷிக்காரன் உண்மையைச் சொல்லத் தப்பிப்போவானோ அந்த அம்சங்களையும் அதுகளைக்குறித்து சாக்ஷிசொன்ன சங்கதி மெய்யாயிருந்தால் எதெந்த சங்கதிகளுண்டாயிருக்கக் கூடுமோ அந்தந்த சங்கதிகளையும் ஆலோசித்து அதை அநுசரித்து ஒரு கிரமமான ஏற்பாட்டின்பேரில் அந்தச் சாக்ஷியை எதிர்க்கேழ்வி கேழ்க்கலாம். வெளிஜில்லாக்களிலுள்ள கோர்ட்டுகளில் வக்கீல்கள் எதிர்க்கேழ்வி கேழ்ப்பதில் யாதொரு ஏற்பாட்டையும் அநுசரியாததி

னால் அதிக உழைப்பும காலமும் கொள்ளுகின்றன. முழுதிலும் முக்கியமானதல்லாததா யிராமற்போனபோதிலும் வெகு சொற்ப அம்சங்களைப்பற்றி அவர்கள் அநேகவிதமான கேழ்விகளைக் கேழ்ப்பதல்லாமல், அந்தக் கேழ்விகளானவை விஷயத்துக்குச் சம்பந்தப்பட்டதா யிராததினாலே அதிக பிரயோசன மில்லாமற்போகின்றது.

௨௬௭. எந்தெந்த அம்சங்களைக்குறித்து சாக்ஷியை எதிர்க்கேழ்வி கேழ்க்கப்பட்டதோ அந்தந்த அம்சங்களைக்குறித்துமாத்திரம் அவன் மறுவிசாரணை செய்யப்படவேண்டுமேயொழிய முக்கிய சங்கதிகளைக்குறித்த விசாரணையில் விசாரிக்கப்பட்டிருக்கக் கூடுமான புதியதாகிய எந்த விஷயத்தைப்பற்றியும் விசாரிக்கக் கூடாதென்பது சாதாரணமான விதியாயிருக்கின்றது. ஆனால், முக்கிய சங்கதிகளைக்குறித்த விசாரணையில் எந்த விஷயமாவது விட்டுப்போயிருப்பதாலும் எதிர்க்கேழ்வி கேழ்ப்பதில் சொல்லப்படும் ஒருவித மறுமொழியே நூதன விஷயமாயிருந்தாலும் நியாயாதிபதியானவர் சில சமயங்களில் மேற்படி நிபந்தனையை அநுசரித்து நடக்காமற் போகிறதுண்டு. பி-சா-கூ-பதி-உ-பு-௲௦௭-௲௦௮-ப-கள்.

காவலாளி தன் எதிர்வாதத்துக்காக சாக்ஷியை விசாரிக்கிறதில்லையென்று சொன்னபிறகு அந்தச் சாக்ஷியை நியாயாதிபதி விசாரிப்பது ஆக்ஷேபணைகரமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது. க-ஙி-அ-க-௧௨௦௬.

## நினைப்பூட்டுதல்.

௨௬௮. ஒரு சாக்ஷியை விசாரித்துக் கொண்டிருக்கையில் எழுதிவைத்திருக்கும் ஞாபகக்குறிப்பு முதலிய லிகிதங்களைப்பார்த்து தான் ஞாபகப்படுத்திக்கொள்ளும்படி அந்தச் சாக்ஷிக்கு உத்தரவு கொடுக்கலாம். "இப்படி உத்தரவு கொடுக்கக்கூடிய விஷயங்கள் மூன்றுவகைப்படும்" என்று பிலிப்ஸ் தெரிவித்திருக்கிறார்.

"முதலாவது.—சாக்ஷிக்காரன் மறந்துபோனதைத் தெரு
"பகப் படுத்திக்கொண்டு, அல்லது தன்னுடைய ஞாபகத்
"துக்குச் சகாயஞ் செய்துகொண்டு, சங்கதிகளைத் தன்னு
"டைய மனதில் ஞாபகப்படுத்திக் கொள்ளமாத்திரம் அந்
"த லிகிதம் உபயோகப்படும் விஷயம்."

"இரண்டாவது.—லிகித பத்திரத்தை முன்பு பார்த்தி
"ருந்ததாகச் சாக்ஷிக்காரனுக்கு ஞாபகமுண்டாயிருந்து,
"அதிற் கண்டிருக்கும் சங்கதிகள் அதைப்பார்க்காமலே
"ஞாபகத்திற் கொண்டுவரப்படக் கூடாமற் போனபோதி
"லும், அதைப்பார்த்தபோது அதின சங்கதிகள் சரியாயி
"ருந்ததென்று ஞாபகப்படுத்திக் கொள்ளும் விஷயம்."

"மூன்றுவது.—லிகித பத்திரத்தில் சொல்லப்பட்டிருக்
"கும் சங்கதிகளாவது லிகித பத்திரமாவது சாக்ஷிக்காரனு
"க்கு ஞாபகப்படுத்தத் தக்கதாயிராமற் போனபோதிலும்,
"உண்மையானதென்று அவனுக்குத் தெரிந்திருக்கும் ஒரு
"லிகித பத்திரத்தைப் பார்த்தமாத்திரத்தில் அவன் மனதிலு
"ண்டாயிருக்கிற நிச்சயத்தினுலே ஒரு விசேஷமான சங்க
"தியைக்குறித்து பிரமாணம் செய்யக் கூடுமானதா யிருத்
"தல்; எப்படியெனுல் ஒரு (பாங்கி) காசுக் கடைகாரனு
"டைய லேககிரியின எழுத்துள்ள ஒரு (பில்-ஆப்-எக்ஸ் செ
"ஞ்சி) உண்டிச்சீட்டை அவனுக்குக் காண்பிக்கப்பட்டதின்
"பேரில் அதின் சங்கதியாவது, அதின்பேரில் அவன் ஏதா
"வது எழுதினதாகவாவது அவனுக்கு ஞாபகம் வராமற்
"போனபோதிலும், அந்த உண்டியின்பேரில் அவனுடைய
"எழுத்துண்டா யிருப்பதினுலேயே அது அவன் கைக்கு வ
"ந்து போனதாக அவன் தெரிந்துகொள்ளுகிற விஷயம்."
பி-சா-க-பதி-உ-பு-௫ கக-ப.

உகக. எந்த விஷயத்திலாகிலும் தஸ்தாவேஜைப்பார்க்
காமலே சங்கதிகள் ஞாபகத்துக்கு வராமற் போனபோதி
லும் அவைகளைக்குறித்து நிச்சயமாய்ச் சொல்வதற்கு சாக்
ஷி சக்தியுடையவனு யிருக்கவேண்டும். மேலும் எந்த

விஷயத்திலாகிலும் தஸ்தாவேஜை ஆதாரமாகக் கொண்டி ருக்கிற சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படுவதற்குமுன் அந்த த் தஸ்தாவேஜை அவசியமாய்க் கோர்ட்டுக்குக் கொண்டுவ ந்து காட்டவேண்டும். அதைப்பார்க்கவும் அதைக்குறி த்து எதிர்க்கேள்வி கேழ்க்கவும் எதிர் கக்ஷிக்காரனுக்குப் பாத்தியமுண்டு. க அருகு ஷூ உ-ஆ-சரு-பி. பி-சா-உ-பு-சகஉ-ப.

தஸ்தாவேஜையே சாக்ஷியமாய் ஒப்பிக்கவேண்டியதில் லையாகையால், அது முத்திரைக் காகிதத்தின்பேரி லிருக்க வேண்டியதில்லை.

உளO. மேற்கூறப்பட்ட மூன்றாவது விஷயத்தில் லி கிதபத்திரம் அகத்தியமாய் சாக்ஷியினாலேயே எழுதப்பட் டாவது கையொப்பமிடப்பட்டாவ திருக்கவேண்டும். அ ப்படிக்கில்லாவிட்டால் சாக்ஷிக்காரன் அந்தச் சங்கதியைக் குறித்தாவது அந்த லிகிதத்தின் உண்மையைக்குறித்தா வது ஞாபகமில்லாதவனா யிருக்கிறபடியால் அவன் சுருத சாக்ஷியம் சொன்னவனாகிறான். ஆனால் இது முதலாவது இரண்டாவது விஷயங்களுக்கு உபயோகப்படமாட்டாது. ஆகையால், அப்படிப்பட்ட விஷயங்களில் லிகிதபத்திரம் சாக்ஷிக்காரனாலேயே எழுதப்பட்டிருக்கவேண்டுமென்கிற அகத்தியமில்லை. பி-சா-க-பதி-உ-பு- சகரு - சகச - ப- கள். க அருகு ஷூ உ-ஆ-சரு-பி.

உளக. மூன்றாவது வகுப்பில் சேர்ந்த விஷயங்கள் க அருகு ஷூ உ-வது-ஆக்ட்டு - சரு - பிரிவில் கண்ட விஷயங்களில் சேர்ந்தவைதானாவென்கிற சந்தேகமுண்டா கலாம். அந்தப் பிரிவு இதனடியிற் கண்டபடி விதிக்கின்ற து. "யாதொரு சாக்ஷிசங்கதி நடந்தகாலத்திலாகிலும், அ "தற்குப் பின்னிட்டு உடனேயாகிலும், அந்தச் சங்கதி தனக் "கு நன்றாய் ஞாபகத்திலிருந்து தஸ்தாவேஜில் அது சரியா "யெழுதப்பட்டிருக்கிறதென்று தான் தெரிந்துக்கொண்ட "வேறே எந்தக் காலத்திலாகிலும், தானாவது வேறொருவனா

"வது எழுதிக்கொடுத்த யாதொரு தஸ்தாவேஜை மேற்
"சொல்லிய கோர்ட்டாருக்கு முன்பாகவாவது அதிகாரிக்
"குமுன்பாகவாவது பார்வையிட்டுச் சங்கதியை ஞாபகப்
"படுத்திக்கொள்ளலாம். அப்படிச் செய்கிற பக்ஷத்தில் அ
"ந்த தஸ்தாவேஜை எதிர்கக்ஷிகாரனுக்குக் காட்டி அதை அ
"வன் பார்வையிட்டு அவனுக்கு இஷ்டமிருந்தால் அதைக்
"குறித்துச் சாக்ஷியை எதிர்கேள்விகேழ்க்கலாம்." இவ்வ
ளவு காலத்திற்குள்ளாக அந்த லிகிதம் எழுதப்பட்டிருக்க
வேணுமென்று மேற்கண்ட பிரிவில் நிர்ணயஞ் செய்யப்ப
ட்டிருக்கவில்லையென்று தெரியவருகின்றது. இந்த அம்ச
த்தைக் குறித்து "சங்கதி நடந்தகாலத்தில் எழுதப்பட்ட
'ஞாபக பத்திரத்தினால் சில சாக்ஷிகளுக்குண்டாயிருக்கிற
"பிரயோசனத்தைப் பார்க்கிலும் சங்கதிநடந்த வெகுகால
"த்துக்குப்பின்பு எழுதப்பட்ட பத்திரத்தினால் இன்னும்
"சில சாக்ஷிகளுக்குண்டாயிருக்கிற பிரயோஜன மதிகமாயி
"ருக்கலாமென்று" பிலிப்ஸ் சொல்லியிருக்கிறார். பி-சா-
கூ-பதி-உ-பு-சகச-ப.

உஎஉ. "அசல் தஸ்தாவேஜைக் காட்டக்கூடாமையாக
"யிருக்கிறதெனபதறகுப் போதுமான ஏது யிருக்கிறதாகக்
'கோர்ட்டாராவது அதிகாரியாவது நினைத்தால அந்த அ
"சல் தஸ்தாவேஜின நகலைப் பார்வையிட்டு ஞாபகப்படுத்
"திக் கொள்ளும்படி கோர்ட்டார் சாக்ஷிக்குச் செலவுகொ
"டுக்கலாம" என்று மேற்படி ஆக்ட்டின் சகூ-வது பிரி
விற் காணப்பட்டிருக்கின்றது.

உஎ௩. குருடனான சாக்ஷி விஷயத்தில் அவன் தன்னி
னைப்பூட்டிக்கொள்ளும்பொருட்டு லிகித பத்திரத்தை அவ
னுக்குப் படித்துக்காட்டலாம். பி-சா-உ-பு-சககூ-ப.

சாக்ஷியினிடத்தில் அவநம்பிக்கைக்கோள்ளுதல்.

உஎச. விசாரணை சம்பந்தமான எந்த விஷயத்தைக்கு
றித்தாகிலும ஒரு சாக்ஷிசொல்லுகிற சங்கதிகளுக்கு வி
ரோதமாய் இதரமான சாக்ஷிகளை வரச்செய்து அவர்க்கு

டைய வாக்குமூலத்தைக்கொண்டு அந்தச் சங்கதிகளை ம றுக்கலாம். ஆனல் விசாரணை விஷயத்துக்கு முழுதிலும் சம்பந்தப்படாத எந்தச் சங்கதியைப்பற்றியாவது சாதார ணமாய்ச் சாக்ஷியை விசாரிக்கக்கூடாது. மேலும் அஜா க்கிறதையாய் ஒவ்வாத கேழ்வி கேழ்க்கப்பட்டால் அதற் குத் சாக்ஷி சொல்லும் மறுமொழியே முடிவானதாயும் மற்ற சாக்ஷிகளின் சாக்ஷியத்தால் மறுதலிக்கப்படாததா யுமிருக்கும். இக்ரால்-உகஉ-பி. நா-௪0௧-௪0௨-பி-கள். பெ-௯௧௪-பி. பி-சா-௯-பதி-உ-பு-௩௯௮-ப. டெ-௧உ௧௨-பி.

உ௭௫. ஒரு சாக்ஷியின் வாக்குமூலத்தை மற்ற சாக்ஷி களை வரச்செய்து மறுப்பதற்கும், சாக்ஷிக்காரனை நம்பிக் கைக்குப் பாத்திரனல்லன், அதாவது சாக்ஷியினிடத்தில் அவநம்பிக்கைக்கொள்ளுதல் என்று தெரிவிப்பதற்காக சா க்ஷியத்தைக் கொண்டுவந்து காண்பிப்பதற்கும் பேதமுண் டென்று சுலபமாய்த் தெரிந்துகொள்ளலாம்.

உ௭௬. எதிர் கக்ஷிக்காரனுடைய சாக்ஷியினிடத்தில் அவ நம்பிக்கையுண்டாக்க மூன்று மார்க்கங்களுணடென்று டெ ஸ்ட் என்பவர் தெரிவிக்கிறார். அஃதாவது:—

முதலாவது.— சாக்ஷியினிடத்தில் பிரமாண வாசகத் தைச் சொல்லுவித்து அவனை விசாரித்தபோதிலும் அவன் நம்பிக்கைக்குப் பாத்திரனல்லனென்று வாக்குமூலங் கொ டுப்போருடைய சாக்ஷியத்தைக்கொண்டு சாக்ஷியிடத்தில் அவநம்பிக்கை யுண்டாக்குதல். இப்படிப்பட்ட விஷயங் களில் குறிக்கப்பட்ட சங்கதிகளைப்பற்றிய சாக்ஷியம் அங் கீகரிக்கப்படமாட்டாதாகையால் அந்தச் சாக்ஷியினுடைய பிரமாணிக்கதைப்பற்றி சாமானியமாய் அவனுக்கு உண் டாயிருக்கிற கீர்த்தியைக் குறித்துமாத்திரம் விசாரணை நடப்பிக்கவேண்டும். ஆயினும், க௮௫௫ஆ உ-ஆ-௩௬-பிரிவில் விதிக்கப்பட்டிருக்கிற படிக்கு சாக்ஷியானவன் மெய்நிதான குற்றத்திற்காகவாவது தர்கடத்தைக்காகவா

வது தான் சிக்ஷிக்கப்படவில்லையென்று சொல்லிய பிறகு அந்த குற்றங்களில் எதையாவது செய்ததாய் அவன்மேலிக் குற்றம் ஸ்தாபிக்கப்பட்டதாய் ருசுப்படுத்தலாம. (பெ-சுகச-பி. பி-சா-உ-பு-சகூக-ப.) சாக்ஷியினிடத்தில் அவநம்பிக்கைக் கொள்வதற்காகக் குறிப்பான சங்கதிகளைப் பற்றி விசாரணைசெய்தால், அதனால் முடிவில்லாத சார்பான விவாதங்களுக் கிடமுண்டாகும். அப்படிக் கிடங் கொடுப்பது மிகவும் ஆக்ஷேபணைகரமா யிருக்கும்." பெ-சுகச-பி. பி-சா-உ-பு-சகூஉ-ப.

உஎஎ. இரண்டாவது.—"முன் சில தருணங்களில் அந்தச் சாக்ஷிக்காரன சொல்லிய சங்கதிகளுக்கு விரோதமாய் இப்போது சாக்ஷியஞ் சொல்லியிருக்கிறானென்று ருசுப்படுத்தி அவனிடத்தில் அவநம்பிக்கையுண்டாக்குதல். "ஆயினும் இது வியாச்சிய விஷயத்துக்கு முக்கியமாயிருக்கிற சாக்ஷியத்துக்குமாத்திரமே உபயோகப்படும். ஏனென்றால் சார்பான விஷயத்தைக்குறித்து ஒரு சாக்ஷி சொல்வதை மறுக்கக்கூடாது. பெ-சுகச-பி.

உஎஅ. அப்படிப்பட்ட வசனங்களைப்பற்றிய சாக்ஷியத்தைக் கொண்டுவருவதற்கு முன்னதாக அந்தச் சாக்ஷியானவன் இன்ன காலத்தில் இன்ன சங்கதிகளை இன்னானிடத்தில நிஜமாய்ச் சொன்னதுண்டாவென்று தெரிவிப்பதற்கும், அப்படிச் சொல்லியிருந்தால், முன் சொல்லிய சங்கதிகள் இன்னவிதமா யின்னகாரணங்களைப்பற்றி சொல்லப்பட்டனவென்று மறு விசாரணையில் வகைசொல்லியாவது சாக்ஷி இப்போது சொல்லிய சங்கதிகளுக்கு அது நிஜமாய் விரோதித்திருக்கவில்லையென்று வேறு விதமாயாகிலும் ருசுப்படுததியாவது இப்போதைய வாக்குமூலங்களுடன் அந்தச் சங்கதி ஒத்திருக்கும்படி சரிப்படுத்துவதற்கும், சாக்ஷிக்குச் சமயமுண்டாக்கும்பொருட்டு முதலில் அந்தச் சங்கதிகளைக்குறித்துச் சாக்ஷியை அவசியமாய்க் கேழ்வி கேழ்க்கவேண்டும், மேலும் முன்சொன்ன சங்க

திகளைச் சாக்ஷி பூர்த்தியா யொப்புக்கொள்ளாமல்போனு லும் அந்தச் சங்கதியே தனக்கு ஞாபகமில்லையென்று சொன்னலும் அப்படிப்பட்ட விஷயத்தில்மாத்திரம் முன் சொல்லப்பட்ட சங்கதிகளைப்பற்றிய சாக்ஷியம் அங்கீகரிக் கப்படத் தகுந்ததாகும். டெ-கஅ0க-பி. பி-சா-க-பதி-உ-பு-சாஅ-சஅச-சஅரு-பக்கள், கஅருச௵ கா-லா-புரோ-ஆ-உஅ-பி.

உஎக. மேற்கண்ட தன்மையுடன் கஅருரு௵ உ-வது ஆக்ட்டு அச-வது பிரிவில் விதித்திருப்ப தென்னவென் றால், "வியாச்சியத்தின் சங்கதியைக்குறித்து ஒரு சாக்ஷி "முன்னமே எழுதினதையாவது எழுதுவித்ததையாவது "அவனுக்குக் காட்டாமல் அவைகளைக்குறித்து அவனை எதி "ர்க்கேழ்வி கேழ்க்கலாம். அந்தச் சாக்ஷி சொல்லுகிறது "மேற்படி எழுத்துக்கு விரோதமா யிருக்கிறதென்று ருஜ "ப்படுத்த வேண்டுமானுல், அப்படி ருஜப்படுத்துகிறதற்கு "முன்னமே அந்த எழுத்தில் ருஜவுக்கு வேண்டியிருக்கிற "பாகங்களை அவனுக்குப் படித்துக்காட்டவேண்டும். ஆ "னல் ஜட்ஜியவர்கள் விசாரணைகாலத்தில் எப்போதாகி "லும் அந்த எழுத்தை வரவழைத்துப் பார்வையிட்டபிறகு "விசாரணையிலிருக்கிற விஷயங்களுக்காகத் தமக்கு யுக்த "மாகத் தோற்றுகிறபடி அவைகளை உபயோகப்படுத்த "லாம்."

இந்தப் பிரிவைப்பற்றி மேஸ்டர் நார்டன் தெரிவிப்பதெ ன்னவெனில்,—"சாக்ஷியின் ஞாபகத்தைப்பற்றி பரிக்ஷிக்க "வேணுமென்று விரும்புகிற விஷயந்தவிர மற்ற விஷயங் "களில் மேற்படி பிரிவின் கடைசிபாகத்தில் கண்டிருக்கும் "நிபந்தனையின்படி ஜட்ஜியானவர் கடப்பிதது யாதொரு "லிகிதபத்திரத்தைக்குறித்து சாக்ஷியை எதிர்க்கேழ்வி கே "ழ்ப்பதற்கு முன்னதாக அந்தக் காகிதத்தைச் சாக்ஷிக்கார "னிடையில் கொடுக்கவேண்டுமென்று பலவந்தஞ்செய்வது "நன்மையான காரியமாயிருக்கும்." நா-சஅக-பி.

உ௮௦. ஒரு சாக்ஷி பிரஸ்தாதத்தில் சொன்னது முந்திய ததுடன் ஒப்பியிராத அவனுடைய முந்திய வசனங்களைக் குறித்து அவனை எதிர்க்கேழ்வி கேழ்க்கக்கூடுமென்றும், அந்த வசனங்கள் லிகிதத்தில் ஏற்பட்டிராமற்போனால் அப்படிக் கேழ்ப்பதற்குச் சந்தேகமில்லையென்றும் வெகுகாலமாய் ஒரு நிபந்தனை பரவியிருந்தது. ஆயினும் அந்த வசனங்கள் லிகிதத்தில் ஏற்பட்டிருந்தால் அது கொண்டு வந்து காண்பிக்கப்படாமலே அதைக்குறித்து எதிர்க்கேழ்வி கேழ்கக்கூடுமோவென்று சில நியாயாதிபதிகள் சந்தேகித்தார்கள். அந்தச் சந்தேகத்தை நீக்குவதற்காக க௮௫௫௫ உ-வது ஆக்ட்டு ௩௫-வது பிரிவின் நிபந்தனைகளுள்ள இங்கிலீஷ் காமன்லா புரோசிடியூர் ஆக்ட்டின் உ௫-வது பிரிவு ஏற்படுத்தப்பட்டது. ஹா-நா-ரி,க-பு-க-பக்கததில்கண்ட டார்பி-எதிரி-ஔஸ்லி வியாச்சியத்தில் சீப்-பியாரன் பாலக் என்பவர் கூறியது. லா-ஜ-எ-உ௫-பு-உஉ௯-ப.

உ௮க. மூன்றாவது.—சாக்ஷிக்கு லஞ்சம்கொடுக்கப்பட்டதென்றாவது சாக்ஷிசொல்வதற்காக மற்றவர்களுக்கு லஞ்சம் கொடுப்பதாய்ச் சொன்னானென்றாவது எந்தக் கக்ஷிக்காரனுக்கு விரோதமாய் அவன் சாக்ஷிசொன்னானோ அந்தக் கக்ஷிக்காரன்பேரில் விரோதமாவது பகையாவது அவனுக் குண்டாயிருப்பதாய்த் தெரிவிக்கும்படியான வார்த்தைகளைச் சொன்னானென்றாவது காண்பித்து அவனிடத்தில் அவனம்பிக்கையுண்டாக்கலாம். பெ-௯௧௫-பி. டெ-கஉ௯௮-பி.

உ௮உ. ஒரு கக்ஷிக்காரன் தன் சொந்த சாக்ஷியையே நம்பாமற் போகலாமாவென்கிற அம்சத்தைக்குறித்து அந்தச்சாக்ஷி நம்பிக்கைக்கு யோக்கியனல்லவென்கிற பொதுவான சாக்ஷியத்தைக்கொண்டு அவனிடத்தில் நம்பிக்கை வைக்காமலிருக்கக் கூடாதென்று விதி ஏற்பட்டிருக்கின்றது. "ஏனென்றால், கக்ஷிக்காரன் அந்தச்சாக்ஷியைக் கேழ்க்க "கொண்டதினாலேயே அவன் நம்பத்தக்கவனென்றும் அப்

“படிக்கில்லாவிட்டாலும் எவ்வளவேனும் நம்பத்தகாதவனு
“யிருக்கும்படியான அவ்வளவு அபகீர்த்தி யுள்ளவனல்ல
“னென்றும் கோர்ட்டாருக்குத் தெரிவித்தவனுகிறுன.”
பெ·கூகரு-பி. டெ-கஉஅஉ-பி. பி-சா-உ-பு-சசஅ-ப.

ஆகிலும் அந்தச் சாக்ஷிச்சொன்ன சங்கதிகள் வியாச்சி
யத்துக்குச் சம்பந்தப்பட்டதா யிருக்கிறபட்சத்தில் அவன
சொன்னபடி அவை யிருக்கவில்லையென்று ருசப்படுத்தக்
கக்ஷிக்காரன் வேறு சாக்ஷிகளைக்கோறலாம். பெ-கூகரு-
பி. டெ-கஉஅஉ-பி. பி-சா-உ-பு-சசஅ-ப.

உ௪௩. ஒரு கக்ஷிக்காரன் தன் சொந்த சாக்ஷிசொல்லிய
சங்கதிகளை அவன்முன் சொல்லியிருக்கிற வசனங்களைக்கு
றித்த சாக்ஷியத்தைக்கொண்டு நம்பாமலிருக்கலாமா வெ
ன்கிற அம்சம் கஅருருஞு உ-வது-ஆக்ட்டு ௨௦-வது-பி
ரிவினால் பரிஷ்கரிக்கப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரிவில
இதனடியிற்கண்ட விதி ஏற்பட்டிருக்கின்றது. “கக்ஷிக்கா
“ரன் மனுவுசெய்துக்கொண்டதின்பேரில் யாதொரு சாக்ஷி
“விசாரணை செய்யப்பட்டால் அநதக் கக்ஷிக்காரன் மேற
“சொல்லிய கோர்ட்டாரிடத்திலாவது அதிகாரியினிடத்து
“லாவது உத்தரவு பெற்றுக்கொண்டு தான் மனுவ் செய்ததி
“ன்பேரில் வரவழைக்கப்படாதவனைப்போல் உண்மையை
“வெளிப்படுத்தும்பொருட்டு அநதச் சாக்ஷியை எதிர்கேழ
“விகேட்டு அவன் முன்சொன்னதற்கும் பின் சொல்லுகிறதற
‘கும் வித்தியாசமிருக்கிறதென்று எடுத்துக்காட்டலாம்.”
டெ-கஉஅஉ-பி-ம் பார்த்துக்கொள்க,

௨௪௪. மேற்படி ஆக்ட்டின் ௲க-வது பிரிவின்படி ஒரு
சாக்ஷியினுடைய சாக்ஷியமானது “ஒரு சங்கதி நடந்தபோ
“தாவது அதற்குச் சமீபகாலத்திலாவது அதை விசாரிப்பத
“ற்குச் சட்டப்படி அதிகாரமுடைய யாதொரு அதிகாரி
“முன்பாகவாவது அதைக்குறித்து அந்தச் சாக்ஷிக்கா
“ரன் முன் சொல்லியிருந்த வசனத்தைக் குறித்த” சா
க்ஷியத்தினுல் உறுதிப்படுத்தப்படலாம். இக்காரியத்தி

ற்காக எந்தக் கோர்ட்டாராலாகிலும், மேஜிஸ்திரேட்டா
ராலாகிலும், கம்மிஷனராலாகிலும், தக்கீ என்கிற திருட்
டையும் டகாயதி என்கிற பலர்கூடிக் கொள்ளையிடுவதையுந்
தடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிற அதிகாரியினாலா
கிலும் கிரமப்படி கையெழுத்துச் செய்யப்பட்ட வாக்குமூ
லத்தின் பிரதியானது "அப்படிப்பட்ட வாக்குமூலம் அல
"லது கைபியது கொடுக்கப்பட்டதென்பதற்கும் செர்ட்டிபி
"கேட்டிலாகிலும் அந்த வாக்குமூலம் அல்லது கைபியத்தி
"லாகிலும் குறிக்கப்படுங் காலத்திலும் இடத்திலும் ஏதா
"வது காரணங்க ளுண்டாயிருந்தால் அந்தக் காரணங்களை
"ப்பற்றி கொடுக்கப்பட்ட தென்பதற்கும் பிரத்தியக்ஷ சா
"க்ஷியமாகும்."

## பதில் சொல்லாமலிருக்கச் சாக்ஷிக்குண்டாயிருக்கும் சுதந்திரம்.

௨௮௫. ௧௮௫௫௵ ௨-ஆ-௩௨-வது பிரிவில் விதிக்
கிற தென்னவென்றால்:—"சாக்ஷிக்காரன் யாதொரு வியா
"ச்சியத்திலாவது சிவில் அல்லது கிரிமினல் விவகாரத்தி
"லாவது பிடிப்பான விஷயத்தைப்பற்றிக் கேழ்க்கப்பட்ட
"யாதொரு கேழ்விக்கு ஜவாபு சொன்னால் அதினாலே தான்
"நேரஸ்தனாவானென்றாகிலும், நேராயாவது நேராய
"லாமலாவது தன்னை நேரஸ்தனாக்குகிறதற்கு அது அநு
"கூலமா யிருக்குமென்றாகிலும், நேராயாவது நேராயல்
"லாமலாவது யாதொரு தண்டனைக்குத் தன்னை உள்ளாக்
"குமென்றாகிலும் அப்படி உள்ளாக்குகிறதற்கு அநுகூலமா
"யிருக்குமென்றாகிலும் யோசித்து, அப்படிப்பட்ட கேழ்வி
"க்குப் பதில் சொல்லமாட்டேனென்று சொல்லக்கூடாது.
'ஆனால் அப்படிப்பட்ட பதிலை அநுசரித்து அவனை மறியல்
"செய்யவுங்கூடாது. அவன்பேரில் விசாரணை முதலான
"தும் நடத்தக்கூடாது. அன்றியும் யாதொரு கிரிமினல்
"விவகாரத்தில் அப்படிப்பட்ட பதிலை அவனுக்கு விரோத
"மான சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளவுங்கூடாது. அப்ப

"டிப்பட்ட விசாரணையில் வேண்டுமென்று பொய்ச்சாக்ஷி "சொல்லுகிறதற்காக அவனைத் தண்டிக்க வேண்டியிருந் "தால்மாத்திரம் அப்படிச் செய்யலாம்."

உ௪௬. மேற்படி பிரிவு "விவாத விஷயத்துக்குச் சம் "பந்தப் பட்டிருக்கிற" யாதொரு கேழ்வியைப்பற்றியதா யிருக்கின்றது. ஆகையால் இங்கிலண்ட் தேசத்துக் காமன் லா என்கிற பொது சட்டத்தின்படி அப்படிப்பட்ட ஏதுக்க ளைப்பற்றி ஒரு சாக்ஷிக்காரன் விவாத விஷயத்துக்குச் சம் பந்தப்படாத அப்படிப்பட்ட எந்தக் கேழ்விக் காவது மறு மொழி சொல்லமாட்டேனென்று மறுக்கலாமென்று ஊ கிக்கத் தக்கதாயிருக்கின்றது.

உ௪௭. விவாத விஷயத்துக்குச் சம்பந்தப்பட்ட கேழ விக்கு தான் பதில் சொனனால் அது தன்னை சிவில் வியாச் ஜியத்துக் குட்படுத்துமென்றாவது, அதனால் தனக்குத திர விய கஷ்டமுண்டாகுமெனறாவது, தனபேரில் கடனேற படுமென்றாவது, ஒரு சாக்ஷிக்காரன் அப்படிப்பட்ட கேழ் விக்குப் பதில் சொல்லுகிறதில்லையென்று மறுக்கக்கூடா தென்று தோற்றுகின்றது. உ௪௯-பி. டெ-௧௩௭-பி. ௩௱-௪௦௧-பி.

உ௪௮. சாக்ஷிக்காரன் எப்படிப்பட்ட கேழ்விக்கு பதில் சொன்னால் அது அவனுக்குப் பரோக்ஷமாய்மாத்திரம் அவ மானமுண்டாகத் தக்கதாயிருக்குமோ அப்படிப்பட்ட கேழ்விக்குப் பதில் சொல்லும்படி அவனைக் கட்டாயப்படு த்தலாம். மேலும், விவாத அம்சத்திற்கு முக்கியமான யா தொரு கேழ்விக்கு அவனுத்தரவு சொல்வதினால் அவனுடை ய யோக்கியதைக்குப் பிரத்தியக்ஷமாய் கெடுதியுண்டாகும் படியானதா யிருக்குமென்பதைப்பற்றி அப்படிப்பட்ட கே ழ்விக்கு அவன் பதில் சொல்லுகிறதில்லையென்று மறுக்கக கூடாது. டெ-௧௩௧-௧௩௫-பி-கள்.

உ௪௯. கேழ்வியானது விவாத அம்சத்துக்கு நேராய் முக்கியமானதாயிராமல் சாக்ஷியின் யோக்கியதையையும

காரணத்தையும் பரிக்ஷிப்பதற்காகக் கேட்கப்படுமாயின் அதற்குப்பதில் சொல்வதினால் அவனுடைய யோக்கியதைக்குப் பிரத்தியக்ஷமாய்க் கெடுதி யுண்டாக்கத்தக்கதாயிருந்தால் அப்படிப்பட்ட கேழ்விக்குப் பதில் சொல்லும்படி அந்தச் சாக்ஷியை நிர்ப்பந்தப்படுத்தலாமாவென்கிற அம்சம் சந்தேகத்துக் கிடமுள்ளதாய்க் காணப்படுகின்றது. கேழ்வியிலுதகரிக்கப்பட்ட அவனம்பிக்கையுள்ள சங்கதிகள் அந்தச் சாக்ஷியின் சாக்ஷியத்தில் அவனம்பிக்கை யுண்டாகும்படியாய் சில நாளைக்குமுன் நடந்ததாவென்று நியாயாதிபதி யோசித்தால் மிகவும் யுக்த்தமாயிருக்கும். டெ-கஙகஈ-கஙக௫-பி-கள்.

உகo. மறுமொழி சொல்லுகிறதில்லையென்று மறுதளிக்கும் சுதந்தரம் சாக்ஷிக்காரனுதேயல்லது கக்ஷிக்காரனுதல்ல. ஆகையால் உபயவாதிகளுடைய வக்கீல்களில் யாரும் அப்படிப்பட்ட சுதந்தரம் தனக்குண்டென்று வாதிக்கக்கூடாது. டெ-கஙகக-பி.

உகக. மேலும், "எந்தக் கேழ்விக்காவது பதில் சொல்லாமலிருப்பதற்குச் சுதந்தரமுண்டென்கிற ஏதாவதொரு விசேஷமான காரணத்தைப்பற்றி பதில் சொல்லாமலிருக்கலாமேயொழிய, அந்தக்கேழ்வி கேவலம் சொந்த சங்கதிகளைப்பற்றியிருக்கிறதென்கிற காரணத்தைப்பற்றியாவது அது முக்கியமானதல்லவென்கிற காரணத்தைப்பற்றியாவது சாக்ஷி கேழ்விக்குப்பதில் சொல்லமாட்டேனெனக் கூடாதென்பது தரும சாஸ்திரத்தின் பொது விதியாயிருக்கின்றது." டெ-கஙஉஉ-பி.

உகஉ. "யாதொரு வியாச்சியத்தில் யாதொரு பெரிதான குற்றத்தைக்குறித்தாவது அர்நடத்தையைக்குறித்தாவது குற்றவாளியாக்கப்பட்டாயாவென்று ஒரு சாக்ஷியைக் கேழ்க்கலாம். அப்படிக் கேட்டதின்பேரில் அவன் அந்தச் சங்கதி நடந்ததில்லையென்று மறுத்தாலும் மறுமொழி சொல்லமாட்டேனென்றாலும் அப்படிக் குற்ற

"ளரனி யாக்கப்பட்டாளென்பதை எதிர்கக்ஷிக்காரன் ருசு "ப்பதித்தாவது நியாயமா யிருக்கவேண்டும்" என்று கஅ(௹)(௲) உ-வது ஆ-கூ-வது பிரிவில் விதிக்கப்பட்டிரு க்கிறதாக இவிடம் பிரஸ்தாபிக்கலாம். இது விவாத விஷ யத்துக்குச் சம்பந்தப்படாத அம்சங்களைப்பற்றி சாக்ஷிக்கா ரன் சொன்னதை மறுக்கக்கூடாதென்று உளச-வது பிரி வில் சொல்லப்பட்டிருக்கிற பொதுவிதிக்கொரு விலக்கா யிருக்கின்றது. மேலும், (இரண்டாவது) மறுக்கும் சா க்ஷியம் சாக்ஷிக்காரன்மீது பெரிதான குற்றத்தைக்குறித் தாவது துர்நடத்தையைக்குறித்தாவது குற்றம் ஸ்தாபிக்க ப்படும் சங்கதிக்குமாத்திரம் சம்பந்தப்பட்டிருக்கவேண் டும். ஆகையால் சட்டப்படி ஸ்தாபிக்கப்படாததும் நீதி விரோதமான குற்றத்தைக்குறித்தாவது சட்டத்தில் எடுத் துக் காட்டப்படாத எந்தக் குற்றங்களைக்குறித்தாவது அ ந்தச் சாக்ஷி சொல்லுகிற மறுமொழி முடிவானதா யிருக் கவேண்டுமேதவிர அதை மறுக்கக்கூடாது. ஆனால் அந்த மறுமொழி விவாதாம்சத்துக்கு நேராய்ச் சம்பந்தப்பட் டிருந்தால்தான் அந்த மறுமொழி மறுக்கத்தக்கதாயிருக் கும். டெ-கஉகச-கஉகரு-பி-கள்.

அந்தரங்க விவகாரங்கள்.

உகஅ. ஒரு சாக்ஷி தன்மீது குற்ற மேற்படுத்தும்படி யான கேள்விகளுக்கு மறுமொழி சொல்லுகிறதில்லையெ ன்று மறுக்க அவனுக்குண்டாயிருக்கிற சுதந்தரத்தைக்கு றித்து மேலே சொல்லியாயிற்று. இனி இராஜ்ஜிய பரிபா லன க்ரமத்தை அநுசரித்து எந்த விவகாரங்களை வெளியி டக்கூடாதென்கிற சுதந்தர முண்டாயிருக்கின்றதோ அப் படிப்பட்ட விவகாரங்களைக்குறித்து யோசிப்போம்.

உகசு. "இராஜ்ஜிய பரிபாலன க்ரமத்தையநுசரித்திருக் "கிறதென்கிற காரணத்தைப்பற்றி சிலவகையான சாக்ஷி "யத்தைச் சட்டப்படி ஏற்றுக்கொள்ளக்கூடாதென்று வில "க்கப்பட்டிருக்கின்றது. ஏனென்றால் அப்படிப்பட்ட சா

'க்ஷியத்தை முற்றிலும் விலக்கிப்போடுவதினாலுண்டாகும் "கெடுதியைவிட அதை ஏற்றுக்கொள்ளும்படி விரும்புவதி "னாலாவது இடங்கொடுப்பதினாலாவது உண்டாகிற கெடு 'தியானது அதிகமானதா யிருக்குமென் றெண்ணப்படுகி "ன்றது." டெ-௮௨௧-பி.

௨௧௫. அப்படி வெளியிடக்கூடாதென்று விலக்கப்ப ட்டிருக்கிற விவகாரங்களில் முதல் வகுப்புக்குரியவை, ம னைவிக்கும் மணவாளனுக்கும் நடக்கின்றவைகளா யிருக்கி ன்றன. "சிவில் விவகாரங்களிலெல்லாம் புருஷனாகிலும் "பெண்சாதியாகிலும் ஒருவருக்கொருவர் விரோதமாக சா "க்ஷிசொல்லலாம். ஆனால் விவாகமாய் சமுசாரஞ் செய் "துகொண்டிருக்குங்காலத்தில் புருஷன் பெண்சாதிக்கா "வது பெண்சாதி புருஷனுக்காவது தெரிவிக்கிற யாதொரு "சங்கதி அந்தரங்கமானதாக எண்ணப்படும். அப்படிப்ப "ட்ட சங்கதி புருஷனுக்கும் பெண்சாதிக்கும் நடக்கிற வி "யாச்சியத்தில் விவாத விஷயத்துக்குச் சம்பந்தப்பட்ட "தாயிராவிட்டால் அதைத் தெரிவித்தவருடைய சம்மதமி "ல்லாமல் அப்படிப்பட்ட சங்கதியை வெளிப்படுத்தக்கூ "டாது" என்று ௧௮௫௫௵ ௨-வது ஆக்டில் ௨௦-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கின்றது.

௨௧௬. கண்டிப்பாய் அந்தரங்கமான விவகாரங்கள் மாத்திரமே யல்லாமல், புருஷனுக்கும் பெண்சாதிக்கும் ந டக்கிற விவகாரங்கள் எத்தன்மையுள்ளவையாயிருந்தபோ திலும், அப்படிப்பட்ட எல்லா விவகாரங்களும் அந்தரங்க மானவையேயாம். அந்தரங்கமானவை என்கிற காரணத் தைப்பற்றி வெளியிடப்படக் கூடாதென்கிற இந்த சுதந்த ரமானது இதற்குமுன் உதகரிக்கப்பட்ட பிரிவின் கடைசி பாகத்தில் கண்டிருக்கிற விலக்குக்குட்பட்டு அன்னியர்களு டைய சம்பந்தமாத்திர முண்டாயிருக்கிற விஷயங்களுக் கும்யாதொரு வழக்கில் மனைவி அல்லது மணவாளன் கக்ஷி க்காரி அல்லது கக்ஷிக்காரனாயிருக்கிற விஷயங்களுக்கும்

வியாபிக்கச்செய்யப்பட்டிருக்கின்றது. அந்த விவகாரம் விவாகமாய் அவர்கள் சமுசாரம் செய்யுங்காலத்தில் நடந்திருக்கவேண்டும். ஆகையால் விவாகத்துக்குமுன் நடத்தப்பட்ட எந்த விவகாரத்துக்கும் மேற்படி காப்பு வியாபிக்கமாட்டாது. ஆயினும் விவாககாலத்தில் நடந்த விவகாரத்தைப்பற்றிய சுதந்தரம் மரணத்தினாலாவது, விவாக சம்பந்த விமோசனத்தினாலாவது விவாகபாத்தியம் விட்டுப்போனபிறகும் நின்றிருக்கும். டெ-அரு௰ - அருக-பி-கள்.

உகஎ. புருஷனுக்கும் பெண்சாதிக்கும் உண்டாயிருக்கிற விசேஷ நம்பிக்கையைப்பற்றி அவர்களுடைய குடும்பத்தில் அமைதி யுண்டாயிருக்கவேண்டியதாகையால், அப்படிப்பட்ட அமைதிக்கு விரோதம் நேரிடாமற் காக்கும்பொருட்டு, அந்த மனைவிக்கும் மணவாளனுக்கும் நடக்கப்பட்ட விவகாரங்களுக்கு இப்படிப்பட்ட சுதந்தரம் உண்டுபண்ணப்பட்டதென்று சொல்லவேண்டியது எவ்வளவும் அவசியமல்ல. டெ-அரு௰-பி.

உகஅ. சட்டப்படி வெளியிடக்கூடாத பிரிய வருப்புக்குரிய விவகாரங்கள் விவகாரபோதகன் தன்னுடைய வியாச்சியக்காரன் பக்ஷத்தில் நடத்துகிற விவகாரபோதக காரியத்தைக்குறித்து அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளப்படும் விவகாரங்களா யிருக்கின்றன. விவகாரபோதகன் எந்த விவகாரத்தைக்குறித்து நியமிக்கப்படுகிறானோ அல்லது அவனுடன் ஆலோசிக்கப்படுகிறதோ அப்படிப்பட்ட விஷயத்தைக்குறித்து அவ்விருவருக்கும் நடக்கிற விவகாரங்களுக்குச் சுதந்தரம் உண்டாக்குவதினால் அந்த விவகாரபோதகனுக்கும் வழக்காளிக்கும் விவகாரம் தாராளமாய் நடக்கலாம். ஆதலால், அப்படித் தாராளமாய் நடப்பதை அபிவிருத்திசெய்வது மிகவும் விவேகமான காரியமென்று எண்ணப்பட்டிருக்கின்றது.

உகக. ஒரு வழக்கிற் சேர்ந்த எந்தக் கக்ஷிக்காரனாவது தனக்கும் தன் விவகாரபோதகனுக்கும் நம்பிக்கையின்பேரில் ஏற்பட்ட லிகிதத்தையாவது கடிதத்தையாவது கொண்டுவந்து காண்பிக்க வேண்டியதில்லையென்று கஅ௲௯ வருடம் உ-ஆ-உஉ-பிரிவிற் கண்டிருக்கின்றது. அப்படி அவன் தானாய்ச் சாக்ஷிச் சொல்லவருகிறவிஷயத்தில் அந்த லிகிதத்தைக் கொண்டுவந்து காட்டும்படி விரும்புகிற கக்ஷிக்காரனுடைய சங்கதிக்கு அது சம்பந்தப்பட்டதாயிருந்தால் அவன் அதைக் கொண்டுவந்து காட்டவேண்டும்.

ஈ00. உச-வது பிரிவில் அடியில்கண்டபடி விதிக்கப்பட்டிருக்கின்றது. "பாரிஷ்டராவது அட்டர்ணியாவது "வக்கீலாவது தான் அப்படிப்பட்ட உத்தியோகத்திலிருக்"குங்காலத்தில் தன்னுடைய கக்ஷிக்காரன் தன்னிடத்தில் "சொல்லியிருக்கிற யாதொரு சங்கதியையாகிலும் தான் "அவனுக்குச் சொல்லிய யாதொரு யோசனையையாகிலும் "தனக்குத் தெரிந்திருக்கிற அவனுடைய தஸ்தாவேஜின் ச"ங்கதிகளையாகிலும் அவனுடைய சம்மதியில்லாமல் வெ"ளிப்படுத்தக்கூடாது. அப்படி வெளிப்படுத்தும்படியான "பாத்தியதை கக்ஷிக்காரனுக்குண்டு. ஒரு வியாச்சியத்தில் "கக்ஷிக்காரனாயிருக்கிறவன் தானே வேண்டுமென்று அதி"ல் சாக்ஷிசொன்னால் அதினாலே வெளிப்படுத்தத்தக்கதா"யும் பாரிஷ்டராவது அட்டர்ணியாவது வக்கீலாவது வெ"ளிப்படுத்த வேண்டியதாயுமிருக்கிற மேற்கண்ட யாதொரு "சங்கதியை அவர்கள் வெளிப்படுத்தலாமென்று தன்னு"டைய பாத்தியதையை விட்டுவிட்டுச் சம்மதித்தவனாய்ப் "போலாகிறான். அப்போது பாரிஷ்டராவது அட்டர்ணியா"வது வக்கீலாவது விசாரணையில் அப்படிப்பட்ட சங்கதி"யை வெளிப்படுத்தவேண்டும்."

ஈ0க. (கிளார்ஜிமென்) மதபோதகர்கள், வைத்தியர்கள், லேககர்கள், காரியஸ்தர்கள், அல்லது சிநேகிதர்கள்,

இவர்களுக்கு நம்பிக்கையின்பேரில் தெரிவிக்கப்படும் விவகாரங்களுக்கு மேற்கண்ட சுதந்தரம் வியாபிக்கச்செய்யப்படமாட்டாது. (டெ-௮௯௭-பி.) மேலும் கக்ஷிக்காரர் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் எழுதிக்கொள்ளுகிற கடிதங்களுக்காகிலும் விவகார போதகனிடத்திற்கு அனுப்புவதற்காக ஒரு கக்ஷிக்காரனாலாவது கக்ஷிக்காரனுக்காவது எழுதப்படுகிற கடிதங்களுக்காகிலும் மேற்கண்ட சுதந்தரம் வியாபிக்கச் செய்யப்படமாட்டாது. (டெ-௮௪௨-௮௪௪-பி-கள்.) பின்னும் அந்தச் சுதந்தரம் இதனடியிற்கண்ட விஷயங்களுக்கும் உபயோகப்படமாட்டாது. அவையாவன:—விவகாரபோதகனுக்குக் கட்டணம் கொடுப்ப தவசியமில்லாமற்போனாலும், அந்த விவகாரபோதகனை ஏற்படுத்துவதற்கு முன்பாவது அவன் வேலை முடிந்த பிறகாவது அவனுக்குத் தெரிவிக்கப்படும் சங்கதிகளும் அந்த விவகார போதகனுடன் சிநேகபாவமாகமாத்திரம் யோசித்த விஷயங்களும்; அந்த விவகார போதகனுடைய உத்தியோக தருமத்தை அநுசரியாததாயாவது அவசியமில்லாததாயாவதிருந்தாலும், அதாவது காவலாளியைத் தூக்கிவிட்டால் விசேஷப்பொருள் கொடுப்பேனென்று வழக்காளி தன்னுடைய விவகாரபோதகனுடன் சொன்னாலும், விவகாரபோதகன் அவனுடைய வழக்காளி எழுதிக்கொடுத்த ஒரு தஸ்தாவேஜில் சாக்ஷிகையெழுத்துப்போட்டு அந்த தஸ்தாவேசு எழுதிக்கொடுக்கப்பட்ட சங்கதியை ருசுப்படுத்தும்பொருட்டு அந்த விவகாரபோதகனை அழைக்கவேண்டி வந்த சந்தர்ப்பங்களுமாம். ஆயினும் கடைசி விஷயத்தில் விவகாரபோதகனென்கிற நம்பிக்கையினபேரில் அவனுக்குத் தெரிவிக்கப்பட்ட அந்த தஸ்தாவேசை முதலில் உண்டாக்கினபோதோ, அதை எழுதினபோதோ, பின்பதை அழித்தபோதோ, நடந்த சங்கதிகளைத் தெரிவிக்கும்படி அவனைக் கேட்கக்கூடாது. டெ-௮௪௪-௮௯௨-௮௯௪-பி-கள்.

௩0உ. அப்பிரகாரமே யாதொரு தஸ்தாவேஜில் கண்டிருக்கிற சங்கதியையாவது இருக்கி எழுதியிருப்பதையாவது வழக்காளி தெரிவித்ததாயிராமல் விசாரணைக்காலத்தில் அட்டர்ணியாவது வக்கீலாவது தானாய் கண்டுபிடித்ததாயிருந்தால் அதைக்குறித்து அந்த அட்டர்ணியாவது வக்கீலாவது சாக்ஷி சொல்லலாம். இதுவுமல்லாமல் தன் வழக்காளியினுடைய பெயரைத் தெரிவிக்கும்படியாகவும் அவனின்னானென்றாவது அவனுடைய எழுத்து இன்னதென்றாவது ரூபிக்கும்படியாகவும் அல்லது கௌண (மத்தியம) சாக்ஷியத்தை அங்கீகரிப்பதற்காக அவனுடைய வழக்காளியினிடத்திலிருந்து அவன் பெற்றுக்கொண்டிருக்கத்தக்க ஒரு தஸ்தாவேஜு அவன் சுவாதீனத்திலிருக்கிறதா இல்லையாவென்பதைத் தெரிவிக்கும்படியாகவும் அந்த அட்டர்ணி அல்லது வக்கீலைக் கட்டாயப் படுத்தலாம். (டெ-அ௫சு-பி.) அப்படியே தன் வழக்காளிக்காக தான் எதிர் கக்ஷிக்காரனுக்குத் தெரிவித்த அல்லது அவனால் தான் தெரிந்துகொண்டிருக்குஞ் சங்கதிகளை எல்லாம் அவன் வெளியிடவேண்டும். டெ-அ௫ச-பி.

௩0௩. யார்மூலமாய் வழக்காளிக்கும் அவனுடைய விவகார போதகனுக்கும் விவகாரங்கள் நடத்தப்படவேண்டியிருக்கிறனவோ, அப்படிப்பட்ட துவிபாஷிகள், காரியஸ்தர்கள், முதலானவர்கள் விஷயத்திலும், லேகரிகள் அல்லது விவகாரபோதகனால் அவ்வவ்விடத்தி லேற்படுத்தப்பட்டிருக்கிற காரியஸ்தர்கள் விஷயத்திலும், மேற்படி சுதந்தரம் வியாபிக்கச் செய்யப்பட்டிருக்கின்றது. பி-சா-க-பு-க௬௩-ப. ௱-௩௯ச-பி. டெ-அசக-பி.

ஒரு சாக்ஷி தன்னுடைய நிலத்தின் மூலாதாரங்களைக் கொண்டுவந்து காண்பிக்கவேண்டியதில்லை. மேலும் (டிரஸ்டீஸ்) இதராளுக்காகச் சொத்துக்களைக் காப்பாற்றும் பொருட்டு ஏற்படும் பொருப்பாளிகளும் அடமானக்காரர்களும் அவரவர்கள் வசத்தில் நம்பி வைக்கப்பட்ட சொத்

தின் மூலாதாரங்களைக் கொண்டுவந்து காட்டும்படிக்காவது அப்படிப்பட்ட தஸ்தாவேசுகளின் சங்கதிகளைப்பற்றி வாய்மொழிசாக்ஷியம் கொடுக்கும்படிக்காவது அவர்களை நிர்ப்பந்தப்படுத்தக்கூடாதென்று தெரியவருகின்றது. டெ-சஉ௲-சஉக-அருக-பி-கள்.

கூ0ச. அந்தச் சுதந்தரமானது ஒருதடவை உண்டாயிருந்தால் அது வழக்காளிக்கும் விவகாரபோதகனுக்கும் உண்டாயிருக்கிற சம்பந்தம் முடிவானவுடனே அற்றுப்போகமாட்டாது. அந்த வழக்காளி இறந்தபிறகும் நடந்துவரும். ஆனால் அவனாவது அவனுக்குப்பதில் அவன் சொத்துக்குப் பாத்தியஸ்தனாய் வருகிறவனாவது அந்தச் சுதந்தரம் வேண்டியதில்லையென்று நிறுத்திவிட்டால் அற்றுப்போகும்; ஆயினும் வழக்காளி இறந்துபோனபிறகு இருவர் ஏற்பட்டு ஒவ்வொருவனும் அவனுக்குப்பின் பாத்தியஸ்தனென்று விவாதப்படும்படியாய் நேரிடும் விஷயங்களுக்கு மேற்கண்ட விதி உபயோகப்படமாட்டாது. டெ-அசக-அரு0-பி-கள்.

கூ0ரு. மூன்றாவது.—ஜட்ஜிகளின் எதிரில் நடத்தப்பட்ட விசாரணையில் என்ன நடந்ததோ அதை ருசுப்படுத்தும்படி அவர்களைக் கேழ்க்கக்கூடாது. மத்தியஸ்தர்களாவது, ஜூரர்களாவது உண்மையாய் மோசஞ்செய்தார்களென்று சொல்லப்பட்டாலொழிய அவர்களுடைய தீர்ப்புகளுக்குக் காரணஞ் சொல்லும்படி அவர்களை விசாரணைசெய்யக்கூடாது. ஆயினும் அவர்கள் இச்சுதந்தரத்தை விட்டுவிடலாம். டெ-அருக-பி. நா-கூருக-கூருஉ-பி-கள்.

கூ0சு. நான்காவது.—துரைத்தனத்தார் பக்ஷத்தில் நடப்பிக்கப்படும் கிரிமினல் விவகாரங்களில் துரைத்தனத்தாருக்காக விசாரிக்கப்படும் சாக்ஷிகளை எதிர்கேழ்வி கேழ்க்கும்போது அந்தச் சாக்ஷிகள் தங்களை உத்தியோகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறவர்களுடைய பெயர்களையாவது அந்தக் குற்றத்தைக்குறித்த சமாசாரத்தை எவனால் தாங்

கள் தெரிந்துகொண்டார்களோ அல்லது எவனுக்குத் தாங்கள் தெரிவித்தார்களோ அப்படிப்பட்டவர்களுடைய பெயர்களையாவது வெளியிட ஒட்டக்கூடாது. போலீசாரிடத்திலாகிலும் கவரன்மெண்டாரிடத்திலாகிலும் வேவுக்காரர்களாயாவது காரியஸ்தர்களாயாவது அமர்ந்திருக்கிறவர்களைக் காப்பாற்றுவது யுக்தமென்று யோசித்து மேற்படி விதி ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆனால் இது ஜில்லாக்களிலுள்ள கோர்ட்டுகளில் எவ்வளவுவரையில் அநுசரிக்கப்படுமோவென்பது சந்தேகாஸ்பதமா யிருக்கின்றது. டெ-அசு0-பி. பி-சா-க-பு-களஅ-ப.

ஙு0எ. சமஸ்தானத்தில் நடக்கிற இரகசியமான காரியங்களும் இராஜ்ஜிய பரிபாலன கிரமத்தை அநுசரித்த காரணங்களைப்பற்றி வெளியிடப்படக்கூடாது. மேலும் இந்த ஏதுக்களைப்பற்றியே விசாரணைக்காலத்தில் கொண்டுவந்து காட்டப்பட்ட கோட்டையின் உருவப்படம் சரியாயிருக்கின்றதாவென்பதைக்குறித்து லண்டன் பட்டணத்து (டவர் என்கிற) சிறைச்சாலையிலிருக்கும் ஒரு உத்தியோகஸ்தனைக் கேழ்விகேழ்க்க உத்தரவு கொடுக்கப்படவில்லை. அது போலவே ஒரு பிரதேசத்தை யாளுகிற கவர்னருக்கும் அவருடைய அட்டர்னி ஜனரலுக்குமாவது ஒரு பிரதேசத்தை யாளுகிற கவர்னருக்கும் அவ்ரதிகாரத்துக்குட்பட்ட சைன்னியத்தைச்சேர்ந்த உத்தியோகஸ்தனுக்கும் நடந்த விவகாரங்கள் அந்தரங்கமானதாகவே எண்ணப்பட்டிருக்கின்றன. அப்படியே உத்தியோகஸ்தர்களுக்குள் உத்தியோக சம்பந்தமாய் நடக்கிற இதரமான அநேக விவகாரங்களும் அந்தரங்கமானவையென்று எண்ணப்பட்டிருக்கின்றன. பின்னும் அந்த ஏதுவைப்பற்றியே அப்படிப்பட்ட தஸ்தாவேஜுகளிலுள்ள சங்கதிகளைக்குறித்த கௌணசாக்ஷியம் அங்கீகரிக்கக்கூடாதென்று விலக்கப்பட்டிருக்கின்றது. மேலும் லிகிதத்தில் ஏற்பட்டிருக்கிற விவகாரங்களுக்குள்ள விதியே வாய்மொழியான விவகாரங்களுக்கும்

உபயோகப்படும். ஆனால் ஒரு சாமானியமான மனிதனால் ஒரு உத்தியோகஸ்தனிடத்தில் செய்யப்படும் பிரியாதாவது இதரமான விவகாரமாவது சர்க்கார் காரியத்தை நிறைவேற்றுகையில் செய்யப்படாதபக்ஷத்தில் உரிமையானதாக எண்ணப்படமாட்டாது. பி-சா-க-பு-க௮க-க௮உ-ப-கள். டெ-௮௯௯-பி. க௮ருக௵ அ-ஆ-க௩அ-பி.

௩0௮. க௮ருரு௵ உ-வது ஆக்ட்டு- உக -வது பிரிவு இதனடியில் விவரிக்கப்பட்டபடி விதித்திருக்கின்றது. “துரைத்தனகாரியத்தைச் சேர்ந்த யாதொரு தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டுகிறது ராஜநீதிக்கு விரோதமாகையினாலே, அப்படிப்பட்ட தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டச்சொல்லி யாதொரு சாக்ஷி கக்ஷிக்காரனாயிருந்தாலும் இராவிட்டாலும் அவனைக் கட்டாயஞ்செய்யக் கூடாது. மேலும் ஒருவன் தன்னிடத்தில் வைத்துக்கொண்டிருந்தபோதிலும் கொண்டுவந்து காட்டவேண்டிய நிமித்தமில்லாத யாதொரு தஸ்தாவேசை அவனுக்காக மேற்படி சாக்ஷி தன்னிடத்தில் வைத்துக்கொண்டிருந்தால் அப்படிப்பட்ட தஸ்தாவேசையும் கொண்டுவந்து காட்டும்படி கட்டாயஞ் செய்யக்கூடாது.”

இந்தப்பிரிவின் கடைசிப்பாகமானது எந்தக் காரணத்தைப்பற்றியாகிலும் உரிமையானவைகளாயிருக்கிற விவகாரங்களுக்கு உபயோகப்படும்போலேயிருக்கின்றது.

௩0௯. கிரிமினல் அல்லது சிவில் விவகாரங்களில் நியாயபரிபாலனஞ் செய்வதற்கு அவசியமாயிருக்கிற எந்தச் சாக்ஷியமாகிலும் அசப்பியமானதாயிருக்கிறதெனகிற காரணத்தைப்பற்றி அப்படிப்பட்ட சாக்ஷியமானது சாதாரணமாய்ச் சட்டத்தினால் விலக்கப்பட்டிருக்கவில்லை. ஆனால் புருஷனோ ஸ்திரீயோ வென்பதைக்குறித்தாவது ஒரு ஸ்திரீயானவள் பிள்ளைபெற்றாளா வென்பதைக்குறித்தாவது பந்தியம் போடப்பட்டிருக்கும் விஷயங்களிலெப்படியோ அப்படியே அப்படிப்பட்ட சாக்ஷியம் அவசியமி

ல்லாதிருக்க அதைத் தானும் கொண்டுவந்து காட்டும்படி அந்த பட்சத்தில் இடங்கொடுக்கமாட்டாது. மேலும் அசப்பியமென்கிற காரணத்தைப்பற்றியே ஒருசிசுவானது கிரமமாய் தாய்தந்தைகளுக்குப் பிறந்ததா அல்லவாவென்கிறதைக்குறித்து விவாதமுண்டானபோது அந்தப் பிள்ளையின் தாய்தந்தைகளுக்கு தேகஸம்பந்த முண்டாயிருந்ததாவென்று அவர்களைக் கேழ்க்கக்கூடாது. டெ-அகூஎ-அகூஅ-பி-கள். பி-சா-கூ-பதி-க-பு-கஅரூ-ப.

## அபிப்பிராய சாக்ஷியம்.

ரூகo. ஒரு சாக்ஷிக்காரன் தனக்குச் சுதாவில் தெரிந்திருக்கிற சங்கதிகளைமாத்திரம் சொல்லவேண்டுமேயொழிய அந்தச் சங்கதிகளைப்பற்றி தனக்குண்டாகிற அபிப்பிராயத்தையும் தெரிவிக்கவேண்டியதில்லை என்பது சாதாரணமான விதியாயிருக்கின்றது. டெ-கஉஎஉ-பி. டெ-சகூரூ-பி.

ரூகக. ஆனால் சாக்ஷிசொல்வதில் சுபாவமாகவே அபிப்பிராயத்தைத் தெரிவிக்கவேண்டிய அம்சங்களுஞ் சிலதுண்டு. அவை மனிதர்களாவது வஸ்துக்களாவது இவைதானென்று குறிப்பிடும்படியான கேழ்விகளும் கையொப்பத்தின் உண்மையைத் தெரிவிக்கத்தக்க கேழ்விகளுமாம். மேலும், அப்படிப்பட்ட கேழ்விகளைக்குறித்து தன்னுடைய அபிப்பிராயத்தையாவது தனக்குண்டாகிய நம்பிக்கையையாவது தெரிவிக்கும்படி சாக்ஷிக்காரனுக்கு உத்தரவு கொடுக்கவேண்டியது மிகவும் அவசியமா யிருக்கின்றது.

இதைப்போலவே விபசாரம் செய்யப்பட்டதென்கிற காரணத்தைப்பற்றியாவது விவாகத்தைப்பற்றி செய்யப்பட்ட வாக்குத்தத்தப்படி நடத்தாமற்போன காரணத்தைப் பற்றியாவது நஷ்டத்துக்காகக் கொண்டுவரப்படும் வியாச்சியங்களில் கக்ஷிக்காரர்களுடைய நடத்தையைத் தான் பார்த்ததில் ஒருவர்க்கொருவர் அவர்கள் இஷ்டமுள்ளவர்க

னாயிருந்தார்களா வென்பதைக்குறித்து தனக்குண்டாகிய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படியாய் அவனுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. டெ-கஉஎங-பி. பெ-சகக-பி.

ஙகஉ. அப்படியே கட்டடம் அல்லது கோர்ட்டுக்குக் கொண்டுவரக்கூடாத தஸ்தாவேசு, கொண்டுவந்து காண்பிக்கக்கூடாத இப்படிப்பட்ட யாதொரு வஸ்து சாக்ஷியத்தின் தோற்றத்தையும் நிலையையுங்குறித்து சாக்ஷிக்காரன் தனக்குண்டாகிய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கலாம். கீர்த்தி அல்லது நடத்தையைக்குறித்த சாக்ஷியமானது அபிப்பிராய சாக்ஷியத்துக்கு மற்றொரு திருஷ்டாந்தமாம். பெ-சகக-பி.

ஙகங. நெடுகாலைய பழக்கம் அல்லது பயிற்சியினால் மாத்திரம் கிரமமாய்த் தெரிந்துகொள்ளத் தக்கதாயிருக்கிற சாஸ்திரம் அல்லது வித்தையைக்குறித்த விஷயங்களில் அந்தந்த விஷயங்களில் தேறியிருப்பவர்களுடைய அபிப்பிராயங்களைச் சாதாரணமாய் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அப்படி தேறியிருக்கிற சாக்ஷிகளை "பயிற்சியுடையவர்கள்" என்று தரும சாஸ்திரக்கியர்கள் சொல்லுகிறார்கள். எப்படியென்றால் வியாதி அல்லது மரணத்தின் மூலத்தைக் குறித்தாவது ஒருவனுடைய தேகாரோக்கியதையின் ஸ்திதியைக் குறித்தாவது ஒருவனுக்குப் புத்தி ஸ்திரமாயிருக்கிறது அல்லது மாறுபட்டமா யிருக்கிறதென்பதைக்குறித்தாவது அடிக்கடி வைத்தியனுடைய அபிப்பிராயம் பெற்றுக்கொள்ளப்படுகின்றது. அதைப்போலவே தபால் முத்திரையின் உண்மையைக்குறித்தாவது அல்லது தபால் கூலியில்லாமல் அதை அனுப்புவதற்காக அதின்பேரில் அதிகாரி செய்யும் கையொப்பத்தின் உண்மையைக்குறித்தாவது அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி தபாலாபீசு உத்தியோகஸ்தர்களைக் கேட்கலாச்சுது. கட்டடங்களைக்குறித்து (இஞ்சினீர்கள்) யந்திர சாஸ்திரக்கியர்களையும், படங்களைக்குறித்து படமெழுதுவோரையும், ஒரு முத்திரை

பின் அடையாளத்தைக்குறித்து முத்திரை வெட்டுகிறவர் களையும், கப்பலைச் செலுத்துவதைக்குறித்து மாலுமி சாஸ் திரக்கியர்களையும், அவரவர்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டது. டெ-கஉஎச-கஉஎஅ-பி-கள். டெ-சகரு-பி.

௩கச. ஆயினும் அவர்களுடைய அபிப்பிராயமானது அவர்கள் எந்தெந்த விஷயங்களில் நன்றாய் பயிற்சியுடையவர்களா யிருப்பார்களோ அப்படிப்பட்ட விஷயங்களை மாத்திரம் குறித்ததா யிருக்கவேண்டும். எப்படியெனில் வைத்தியனான ஒரு சாக்ஷிக்காரன் அவ்வைத்திய அநுவ ஸப்பார்க்கிற மற்றொருவன் கண்ணியமாயும் யோக்கிய மாயும் நடந்துகொண்டானு வென்பதைக்குறித்துத் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கக்கூடாது. ஏனென்றால், அப்படிப்பட்ட சங்கதியைப் பரிஷ்கரிப்பது (ஜூரி) தர்ம கர்த்தர்களுடைய காரியமா யிருக்குமேயொழிய விசேஷ பயிற்சி யுண்டாயிருக்கவேண்டிய அம்சமா யிராது. டெ-கஉஎசு-பி.

௩கரு. "சாஸ்திரக் கியானமுள்ள சாக்ஷிகளின் அபிப் "பிராயங்களை சாக்ஷியமா யங்கீகரிப்பது அப்படிப்பட்ட, "அபிப்பிராயங்கள் சாக்ஷிக்காரன் சுதாவில் பார்த்த விஷ "யங்களைப்பற்றியதாயும் சுதாவாய் அறிந்த சங்கதிகளைப் "பற்றியதாயு மிருக்கும்போதுமாத்திரமல்ல; விசாரணைக் "காலத்தில் இதர சாக்ஷிகளால் ருசுவானதாக ஏற்படும் "விஷயத்தைக் குறித்ததாய்மாத்திரம் இருக்கும்போதும், "அவ்வபிப்பிராயங்கள் அங்கீகரிக்கப்படவேண்டும்." டெ-கஉஎஅ-பி.

௩கசு. அப்பிரகாரமே விசாரணைக் காலத்தில் மற்ற சாக்ஷிகள் சொன்ன சாக்ஷியத்தைக் கேட்டிருந்த ஒரு வைத்தியன் வைத்திய சாஸ்திர சம்பந்தமாய் ருசுச் செய்யப்பட்ட சங்கதிகளைக்குறித்து தங்களுக்குண்டாகிய அபிப்பிராயத்தைச் சாக்ஷியத்திற் சொல்லலாம். ஆனால் அப்

படிப்பட்ட விஷயத்தில் அந்தச் சங்கதிகளினால் எவனுக் குக் கெடுதி யுண்டாகுமோ அவன் அந்தச் சங்கதிகளை ஒப் புக்கொள்ளாத பட்சத்தில் அந்தச் சங்கதிகள் ருசுவாச்ச தா இல்லையா வென்பதை நிச்சயிப்பது ஜூரிகளைச் சார்ந்த தாகையால் அந்தக் கேழ்வி அந்த வைத்தியனுடைய சாக்ஷி யைக் கேழ்க்கக்கூடாது. ஆனால் "இன்னின்ன சங்கதிகள் "உண்மையா யிருந்தால் அவைகளைக்கொண்டு நீ என்ன "ஊகிப்பாய்" என்று உத்தேசமாய் கேழ்க்கவேண்டும். மேலும் சாக்ஷியத்தைக் கேழ்ப்பதற்கு பயிற்சியுடையவ னொருவன் கோர்ட்டி லுட்கார்ந்திருக்கையில் ஒவ்வொரு விஷயத்திலும் மேற்சொல்லிய விதமாய்க் கேழ்வி கேழ் க்கவேண்டும். ஏனெனில், உண்மையானதென்றெண்ணப் பட்டதாய் அவனுக்குத் தெரிவிக்கப்படும் விஷயத்தில் அவ னுடைய சாமர்த்தியமுள்ள அபிப்பிராயத்தைத் தெரிவிப் பது, அவனுடைய கடமையே யல்லது எந்தச் சங்கதிகள் ருசுவாச்சுதென்று நிர்ணயிப்பது அவனுடைய காரியமல்ல. டெ-கஉஎஅ-பி.

௯௧௭. பயிற்சியுடையவர்கள் தங்கள் சாஸ்திரம் அல் லது வித்தையைக்குறித்துச் சொல்லியிருக்கிற சாஸ்திரக் கிரந்தங்களைப்பார்த்துச் சங்கதிகளைக் ஞாபகப் படுத்திக் கொள்ளும்படி இடங் கொடுக்கப்படுகின்றதென்று தோற் றுகின்றது. டெ-கஉஎகூ-பி.

௯௧அ. "தேச சரித்திரம், கல்வி, சாஸ்திரம், கலை "களைச்சேர்ந்த சங்கதிகளில் எல்லாக் கோர்ட்டாரும் * * * "அந்த விஷயங்களைக்குறித்து நம்பத்தக்கனவென்று தாங் "கள் நினைக்கிற பிரசித்தமான புஸ்தகங்கள் பூமி படங் "கள் முதலானவைகளைச் சாக்ஷியமாகப் பார்வையிட "லாம்." கஅ௫௫ஹ உ-வது ஆ-கக-வது-பி.

௯௧௯. "மேற்சொல்லிய கோர்ட்டாரும் அதிகாரிக "ளும் அன்னிய தேசத் துரைத்தனத்தாருடைய உத்தரவி "ன்பேரில் அத்தேசத்தின் ஸ்டாட்டியூட்டு முதலான சட்

"டங்கள் அடங்கி யிருக்கிறதாகக் கண்டெழுதி அச்சித்
"பதிப்பித்து பிரசித்தஞ் செய்யப்பட்ட புஸ்தகங்களையும்
"அச்சிட்டுப் பிரசித்தஞ் செய்யப்பட்ட அத்தேசத்துக்
"கோர்ட்டுத் தீர்ப்புகளின் ரிபோர்ட்டு புஸ்தகங்களையும் அ
"த்தேசத்தின் சட்டத்தைக்குறித்து அந்தக் கோர்ட்டுக
"ளில் சாதாரணமாய்ச் சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்
"பட்டதென்று தெரியவந்த புஸ்தகங்களையும் அந்த அன்
"னியதேசத்துச் சட்டத்தின் சாக்ஷியமாக ஏற்றுக்கொள்
"ளவேண்டும்." கஅருருஙு உ-வது ஆக்ட்டு கஉ-பி.

௩௨0. ஆனால் எந்த முக்கியமான சட்டத்தைக்குறி த்துச் சாக்ஷி சொல்லவேண்டியதோ அந்தச் சட்டத்தில் பயிற்சியுள்ளவர்களாக ஊகிக்கப்படத்தக்க அன்னியதேச த்து உத்தியோகஸ்தன் அல்லது லாயர்தொழிலிலிருக்கும் தர்ம சாஸ்திரக்கியன் இப்படிப்பட்ட ப்யிற்சியுடையவர்க ளுடைய சாக்ஷியத்தில் அந்த அன்னியதேச சட்டத்தை ருசுப்படுத்துவது உத்தமமான மார்க்கமா யிருக்கின்றது. ஏனெனில், கோர்ட்டாருடைய சுவாதீனத்திலிருக்கிற கிர ந்தங்களைக்கொண்டு அன்னியதேச சட்டத்துக்கு அர்த்தம் செய்வதில் கோர்ட்டார் தவறிப்போகும்படியான அபா யம் நேரிடும் என்பது தெளிவா யிருக்கின்றது. டெ- கஉஅ0-கஉஅக-பி·கள்.

௩உக. அன்னியதேசத்தில் வர்த்தகம் நடப்பித்து அத னால் அவ்விஷயத்தில் பயிற்சியுடையவனென் றெண்ணப் படத்தக்க ஒரு வர்த்தகனுடைய சாக்ஷியத்தினால் அந்த அன்னியதேசத்து வர்த்தகாசாரம் ருசுப்படுத்தப்படலாம். டெ-கஉஅக-பி.

௩உஉ. பயிற்சியுடையவர்களுடைய சாக்ஷியத்தின் வ லுமை பலவிதமா யிருக்குமாகையால் அதைக்குறித்து நிர் த்தாரணஞ்செய்வது பலமுறை கஷ்டமான விஷயமாயி ருக்கும். விசேஷ கீர்த்தியடைந்த வைத்தியர்கள் எப்படி தவறிப்போவதற்கு யிடமாயிருக்குமோ அந்தச் சன்னதியை

யும் அந்த வைத்தியர்களில் யாதொரு என்னுடையவர்களில் அபிப்பிராயங்கள் எவ்வளவு பரஸ்பர விரோதமாயிருக்கக்கூடுமோ அந்தச் சங்கதியையும் ஒரு ஸ்திரீயை விஷம்வைத்துக் கொன்றதைக்குறித்து டாக்டர் ஸ்மிதர்ஸ்ட் என்பவரை விசாரணைசெய்த விஷயத்தில் நாம் கண்டிருக்கின்றோமல்லவா. எந்தெந்த விஷயங்களில் அநேக வைத்தியர்கள் சாக்ஷிகளாக விசாரிக்கப்பட்டார்களோ ஏறக்குறைய அந்தந்த விஷயங்களிலெல்லாம மேற்சொன்னபடியிருந்ததாகத் தெரியவருகின்றது. ஆகையால் தனித்த ஒரு மனிதனுடைய வைத்திய சாஸ்திர சம்பந்தமான அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்வதில் கொஞ்சம் சாக்கிரதையாயிருக்கவேண்டும். இவ்விஷயத்தைக்குறித்து பெஷ்ட் என்பவருடைய கிரந்தத்தின் ௫௩௬-வது பிரிவில் விசேஷமாய் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தப் பிரிவைப் பார்த்துக்கொள்க.

௩௨௩. ஒரு சாக்ஷிக்காரன் தனக்குண்டாயிருக்கிற நம்பிக்கையைக்குறித்து பொய்ச்சாக்ஷியம் சொன்னால் அவன் சங்கதிகளைக்குறித்து பொய்ச்சாக்ஷியம் சொல்லியிருந்தால் எப்படியோ அப்படியே பொய்ச்சாக்ஷி சொன்னதற்காக சிக்ஷிக்கப்படத் தகுந்தவனாவான். பீ-கோ-௧௯௧-பி - ௨-வது அர்த்தம்.

## வேண்டிய சாக்ஷியத்தின் பரிமாணம்.

௩௨௪. வேண்டிய சாக்ஷிய மெவ்வளவென்பதைக்குறித்து ஏற்பட்டிருக்கிற பொதுவிதி என்னவென்றால் சாக்ஷிகளின் சாக்ஷியத்தை யாராய்ந்து யோசிக்கவேண்டியதேயொழிய அவர்களை எண்ணிப்பார்க்கக்கூடாது. (பெ-௫௯௯-பி) மேலும் ஒரு சாக்ஷியினுடைய சாக்ஷியத்தினிடத்தில் நம்பிக்கைவைத்தால் அது குற்றத்தை ஸ்தாபிப்பதற்குப் போதுமான ஆதாரமாயிருக்குமென்று அநேக வருஷங்களுக்குமுன் சென்ற ௧௮௭௭-வது வருஷத்தில் பங்காளா நிஜாமத் அதாலத்துக் கோர்ட்டார் விதித்திருக்கிறார்கள். ௧-௯௩௪.

௧உ௫. "(ட்ரீசன்) ராஜத் துரோகத்தைச்சேர்ந்த விசா "ரணைகளில்தவிர மற்ற விசாரணைகளில் மேற்சொல்லிய "யாதொரு கோர்ட்டிலாவது அதிகாரிக்கு முன்பாகவா "வது ருசுக் கொடுக்கிறதற்குப் பூர்த்தியாய் நம்பத்தகு "ந்த ஒரு சாக்ஷி சொல்லுகிற சரியான சாக்ஷியமே போ "தும். ஆனால் பொய்ச்சத்தியத்தைச்சேர்ந்த விசாரணை "யில் குற்றவாளிகளில் ஒருவனுகிலும் ஒரு தனி சாக்ஷியா "கிலும் சொல்லுகிற சாக்ஷியத்துக்குமேல் சாட்சி வேண் "டியிருக்கிறதாக யாதொரு கோர்ட்டில் விதி ஏற்படுத்தி "யிருந்தாலும் அப்படிப்பட்ட வழக்கமிருந்தாலும் அவை "களை இந்த நிபந்தனை கெடுக்கமாட்டாது." ௧௮௬௫ உ-வது ஆக்ட்டு ௨௮-வது-பி.

௧உ௬. ராஜத்துரோக விஷயத்தில் சாக்ஷியமானது (இண்டைட்மெண்ட்) குற்ற ஏற்பாடு பத்திரத்தில் சொல்லப்பட்ட வெளியான ராஜத்துரோக செய்கைகளை ருசுச் செய்யத்தக்கதா யிருக்கவேண்டும். மேலும் குற்ற ஏற்பாடு பத்திரிகையில் கண்ட வெளியான செய்கையை ருசுப்படுத்தவேண்டிய விஷயத்தில்தவிர அதிற்கண்டிராத மற்றெந்த வெளியான செய்கையைக்குறித்தும் சாக்ஷியமேற்றுக்கொள்ளப் படமாட்டாது.

பின்னும் இங்கிலீஷ் சட்டப்படி ராஜத்துரோகத்தை ருசுப்படுத்த இரண்டு சாக்ஷிகள் வேண்டியிருக்கின்றது. அவ்விரண்டு சாக்ஷிகளும் பகிரங்கமான ஒரு ராஜத்துரோகக் காரியத்தை ருசுச்செய்வதற்காகவாயினுமிருக்கலாம். அவர்களிலொருவன் அப்படிப்பட்ட ஒரு காரியத்தையும் மற்ளுருவர் மற்றொரு காரியத்தையும் ருசுச் செய்வதற்காகவாயினு மிருக்கலாம். ஆனால் குற்றஞ் சாட்டப்பட்டவன் பகிரங்கமான கோர்ட்டில் தானாய் குற்றத்தை ஒப்புக்கொண்டாலும்மௌனமாயிருந்தாலும் அதைக்குறித்து வாதிக்கிறதில்லையென்று மறுத்தாலும் அப்படிப்பட்ட விஷயங்களில் மேற்கண்டவிதி உபயோகப்படமாட்டாது. ஆர்ச்-

கச-பதி-கூ0அ-ப. டெ-அகூக-முதல் அஎச-வரை-பி-கள். பெ-ருஎஅ-பி.

கூஉஎ. ஆயினும் காவலாளி அந்த ராச்சியத்துக் குடித்தனக்காரன்தான் என்பதைப்போன்ற யாதொரு சார்பான சங்கதியானது வழக்கப்படியே ருசுப்படுத்தப்படலாம். ராஜத்துரோகத்தைக்குறித்த வெளியான காரியங்களை ருசுச் செய்வதற்குமாத்திரம் இரண்டு சாக்ஷிகளிருக்கவேண்டும். இதுவுமல்லாமல் இராணியவர்களுக்கு மரணமுண்டுபண்ணத்தக்கதாய்த் தெரியவரும் அவ்வித இராஜத்துரோகத்தை ருசுச்செய்வதற்காக இரண்டு சாக்ஷிகளிருக்கவேண்டிய அவசியமில்லை. (மேற்படி கிரந்தங்களே.)

கூஉஅ. இராஜத்துரோக குற்றத்தை ருசுப்படுத்த இரண்டுபேர் சாக்ஷிகள் வேண்டுமென்கிற விதிக்கு பலவகைக் காரணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் இதன்பின் சொல்லப்படுமவை சற்றேறக்குறைய சரியானவையாய்த் தோற்றுகின்றன. "அவையாவன;—இராஜாங் "கத்தாருடைய சர்வாதிகாரத்தோடு காவலாளி எதிர்த்து "போராடவேண்டி யிருப்பதென்பதும், இவ்வதிகாரமான "து கோபமதிகரிக்குங் காலங்களில் வெகுசாய் துர்விநி "யோகப் படுத்தப்படுமென்பதும், இராஜத் துரோகத்தை "க்குறித்த சட்டம் செம்மையாய் விவரிக்கப்படாமலும் "நன்றாய் கிரகிக்கப்படாமலும் இருப்பதெனபதும், குற்ற "ம் ஸ்தாபிப்பதினாலுண்டாகிற பலன் குற்றஞ் சாட்டப்ப "ட்டவனுக்கும் அவனுடைய குடும்பத்தாருக்கும் மிகவுங் "கொடிதாயும் அருவருப்புள்ளதாயு மிருப்பதென்பதும் "ஆம்." டெ-அஎக-பி.

கூஉகூ. திருடமான ஆதாரமுடையதாகக் காணப்படுகிற இங்கிலீஷ் சட்டப்படி தப்புச் சத்தியத்துக்குரிய பிரியாதை ருசுச்செய்வதற்காக இரண்டு சாக்ஷிகளுடைய சாக்ஷியமாவது இருக்கவேண்டும். அல்லது குற்றஞ் சாட்ட

ப்பட்டவனுடைய பிரமாணத்துக்கும் அவன் குற்றமற்றவ னென்கிற அநுமேயத்துக்கும் மிஞ்சி போதுமான சாக்ஷிய மாவது இருக்கவேண்டும். பிரியாதை ருசுப்படுத்துவதற்கு ஏக சாக்ஷியினுடைய சாக்ஷியமாத்திரம் உண்டாயிருக்கிறப க்ஷத்தில் குற்றஞ்சாட்டப்பட்டவனுடைய பிரமாணத்து க்கு விரோதமாய் அந்தச் சாக்ஷியினுடைய பிரமாணமொ ன்றுதானுண்டாயிருக்கிறதாகையால் குற்றஞ் சாட்டப்ப ட்டவன்பேரில் குற்ற மேற்படுத்துவதற்கு அதைவிட கொ ஞ்ச மதிக ருசுவேண்டியிருக்கின்றது. மேலுமொரு குற்ற ஏற்பாடு பத்திரிகையிற்றானே அனேக சங்கதிகளைக்குறித்து த் தப்புசத்தியங்கள் செய்யப்பட்டிருக்கிறதாகக் கண்டிருந் தால் அவைகளில் ஒவ்வொரு குற்றத்திற்குள்ள ஏக சாக்ஷியி னுடைய சாக்ஷியத்துக்கு உபபலமாய் சாக்ஷியமிருக்கவே ண்டும். (டெ-அளசு-அளஎ-பி-கள்.) "தப்புசாக்ஷியம் சொல் லுதல்" என்கிற குற்றத்தைக்குறித்து பீனல்கோட்டின் கக-வது அத்தியாயத்தில் அர்த்தம் விவரிக்கப்பட்டிருக்கின்றது. மேலும் அவ்விடத்திலேயே இதற்கும் இதைப்போன்ற கு ற்றங்களுக்கும் சிக்ஷை ஏற்பட்டிருக்கின்றது. மேற்படி கோட்டின்-கஅக-வது பிரிவையும் பார்த்துக்கொள்க.

கஙo. 'ஒரு மேஜிஸ்திரேட்டானவர் தனக்குள்ள நி "யாயங்களை எழுதிவைப்பதில் செஷன்கோர்ட்டாரால் வி "சாரிக்கப்படத்தக்க யாதொரு குற்றத்தில் நேராயாவது குருக்கடியாயாவது சம்பந்தப்பட்டிருக்கிற அல்லது உட் "கையாயிருக்கிற எந்த மனிதனையாவது மன்னிக்கிறதாகச் "சொல்லலாம்." அல்லது விசாரணைக்காலத்தில் அப்படி மன்னிக்கிறதாகச் சொல்லும்படி செஷன்கோர்ட்டாரா வது உதாரவுக்காகச் சங்கதிகளைத் தெரிவிக்கத்தக்க கோ ர்ட்டாராகிய ஹைகோர்ட்டாராவது அந்த மேஜிஸ்தி ரேட்டுக்கு உத்தரவுசெய்யலாம். எந்த மனிதனை மன்னி க்கிறதாகச் சொல்லப்படுகின்றதோ, அந்த மனிதன் "கட 'ந்தப்பட்ட குற்ற சம்பந்தமான சங்கதிகளையெல்லாம் 'தானறிந்தமட்டில் பூர்த்தியாயும் உண்மையாயும் தெளி

"வாயும் வெளிப்படுத்துகிறதல்லாமல் அந்தக் குற்றத்தைச் "செய்வதில் சம்மந்தித்திருக்கிற ஒவ்வொரு மனிதனையும் "வெளிப்படுத்துகிறதாக" அவன் உடன்படிக்கைசெய்தால் மன்னிக்கிறதாகச் சொல்லவேண்டும். அப்படி மன்னிப்ப தாகச் சொல்லியதை அந்தமனிதன் ஒப்புக்கொண்டதின் பேரில் அவனை சாக்ஷியாய் விசாரிக்கலாம். கஅகூக ௵ உரு-ஆ-உ0க-உக0-பி-கள்.

கூகூக. ஆனால் "மன்னிக்கிறதாகச் சொல்வதின்பேரில் "அதற்குச் சம்மதித்திருக்கிறவனெவனாவது உடன்பட்டப "டி எதார்த்தத்தைச் சொல்லாமல் முக்கியமான யாதொ "ரு சங்கதியை வேணுமென்று மறைத்ததாகவாவது பொய் "ச்சாக்ஷியம் சொன்னதாகவாவது பொய்யான சங்கதியை "த்தெரிவித்ததாகவாவது பரிசீலனைக்காலத்தில் செஷன் "கோர்ட்டாருக்காகிலும் ஹைகோர்ட்டாருடைய ஆலோ "சனைக்கு அனுப்பப்பட்ட விஷயங்களிலே அந்த ஹைகோ "ர்ட்டாருக்காகிலும் தோற்றினால் அந்தக்கோர்ட்டார் எந் "தக் குற்றத்தைக்குறித்து மன்னிக்கிறதாகச் சொல்லப்படு "கிறதோ அதற்காக பரிசீலனை செய்யும்பொருட்டு அப்ப "டிப்பட்டவனை கமிட்டுபண்ணும்படி உத்தரவுசெய்யலா "ம்." கஅகூக ௵ உரு-ஆ-உகக-பி.

கூகூஉ. மேற்கண்ட விதியானது இங்கிலீஷ் நியாயஸ் தலங்களில் நடக்கிற கிரமத்தை அநுசரித்து ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. அதை மிகவுஞ் சாக்கிரதையாய்ப் பகு த்தறிந்து உபயோகப்படுத்தவேண்டும்; இல்லாவிட்டால் பிரிட்டிஷ் அதிகாரிகளுடைய வாக்குத்தத்தங்கள் வீசா ணையா யெண்ணப்படுவதுமன்றி குற்றத்திற்குச் சகாய மாயிருப்பவன் காவலாளிகளின்பேரில் பொய்யாய் குற்ற ங்களைச் சாட்டி தன்னை மிகுத்துக்கொள்ளும்படி எத்தனப் படுவான்.

கூகூகூ. ஸ்காட்லண்ட் தேசத்தி லிப்படிப்பட்ட வாக் குத்தத்தங்கள் மிகவும் கண்டிப்பாய் நிறைவேற்றப்படுகின்

றன. ஆகையால் குற்றத்திற்குச் சகாயஞ்செய்பவன்பே
ரில் அந்தக குற்றத்தைச் செய்ததாக மறுபடியும் குற்றஞ்
சாட்டப்படக்கூடாது. மேலும் இதைக்குறித்து ஸர்-ஜ-
அலிஸன் என்பவர் சொல்லியிருப்பதியாதெனில்;—"சா
"க்ஷிக்காரன தான் முன் வெளியிட்டசங்கதிகளை சரியல்ல
"வென்று அழிப்பதினாலாவது சாக்ஷியாகாரத்தில் (என்
"ருல், சாக்ஷி நின்று சாக்ஷியம்சொல்லும் பெட்டியில்)
"கொண்டுவந்து நிறுத்தப்பட்டபிறகு எந்தக் குற்றத்தை
"யாகிலும் ஒப்புக்கொள்ளுகிறதில்லையென்று சொல்லுவ
'தினுலாவது, நியாயத்துக்குப் பலமுறை இடருண்டாக்க
"லாம. ஆயினும் தன்னோடுகூட விருக்கும் காவலாளிகளு
'க்கு விரோதமாய்த் தான எவ்வளவு பேசுவானே அவ்வள
"வு க்ஷேமம் தனக்கு இனிமேல உண்டாகுமென்பது சாக்ஷி
"க்காரனுக்குத் தெரிந்திருந்தால் அப்போது நியாயத்துக்கு
"இன்னமும் விசேஷ அபாயம் உண்டாக்கப்படும்." அலி
ஸனஎனபவர் இயற்றிய ஸ்காட்லண்ட் தரும சாஸ்திரத்
தைக்குறித்த பிராக்ட்டிஸ் சஅ௬-ப.

௧௧௪. கலகத்தா நிஜாமத் அதாலத்து கோர்ட்டாரு
டைய கஅகரு-வருஷத்திய தீர்ப்புபுத்தகம் - ௧௦௫-வது
பக்கத்தில் கண்டிருக்கிற மொகதிப் என்பவனுடைய வழக்
கில் கொடுக்கப்பட்ட பத்துவாவினுல் ஒரு உடன் குற்ற
வாளியினுடைய சாக்ஷியம் ஏக சாக்ஷியமாயிருந்தால் அது
காவலாளியின்பேரில் குற்றம் ஸ்தாபிப்பதற்குப் போதுமா
ன சாக்ஷியமாகமாட்டாதென்பது மகம்மதிய சாஸ்திரத்தி
ல் ஒரு விதியாயிருப்பதாகத் தெரியவருகின்றது. மேலும்
ஒருவன் முதலில் ஒரு குற்றத்தைச்செய்து பிறகு தன்னு
டைய கூட்டாளிகளை வெளியிட்டால் அப்படிப்பட்டவனு
டைய சாக்ஷியத்தைக்குறித்து சந்தேகிப்பதற்கு விசேஷ
காரணமுண்டாயிருக்கிறதல்லாமல் அப்படிப்பட்ட மனித
ன தன குற்றம் வெளியிடப்பட்டதின்பேரில் குற்றமற்றவ
ர்களை குறறததில் உடக்கைப்படுத்தும்படி முயலுவதி
னுல் இருந்த அபாயம் நேரிடுமாகையால் அப்படிப்பட்ட

சாக்ஷியத்துக்கு உபபலமாய் அதைவிட விசேஷ நம்பிக்கையுள்ள இதர சாக்ஷியமில்லாதபக்ஷத்தில் அதைச் சந்தேகிக்கவேணுமென்று இங்கிலண்ட் தேசத்துக் கோர்ட்டார் எப்போதும் வழக்கமாய் (ஜூரி) மத்தியஸ்தர்களுக்குத் தெரிவித்துக்கொண்டுவருகிறார்கள். அந்த வழக்கத்தை இந்தத் தேசத்திலும் அநுசரித்தால் நன்றாயிருக்கும். (ெட-அஅஎ-பி. ஆர்ச்-உ௱ச. ா-க௱அ-கசக-கரு௦.) ஆகிலும் இது வழக்கத்தைப்பற்றி யுண்டாக்கப்பட்ட நிபந்தனையேயொழிய சட்டத்தை அநுசரித்துண்டாக்கப்பட்டதல்ல. மேலும், உடந்தைக்காரனால் சொல்லப்பட்டதும் இதர சாக்ஷியத்தினால் ஸ்தாபிக்கப்படாததுமான சாக்ஷியத்தைக்கொண்டு செய்யப்பட்ட குற்றஸ்தாபனம் அவசியமாய் செல்லத்தகாததன்று. லா-ஜ-மே-கே-உரு-புகக-பக்கத்தில்கண்ட இராணி எதிரி ஸ்டப்ஸ் வியாச்சியம். பொன்னுசாமிபிள்ளையால் இயற்றப்பட்ட ரூல்ஸ் ஆப்-பிராக்டிஸ் இரண்டாவது பக்கத்தில்கண்ட மதராஸ் ஹைகோர்ட் கஅகக(ரு)-கஉ௱-நம்பர் கிரிமினல் விண்ணப்பவிஷயத்தில் அப்பீல் வாதிகளாயிருந்த பலவேசம் முதலானவர்களுடைய வியாச்சியவிஷயம்.

௱கரு. குற்றம் சாட்டப்பட்டவன் குற்றஞ் செய்யப்பட்ட காலத்தில் நேரிலிருந்தானென்பதும் குற்றஞ்செய்தவன் அவன்தானென்று ரூபிப்பதும் அந்தக் குற்றத்தில் ஒவ்வொருவன் இன்னின்ன காரியம் செய்தானென்பதும் ஆகிய இப்படிப்பட்ட விஷயங்களைக்குறித்து உடந்தைக்காரன் தப்பாய் தெரிவிக்கலாமாகையால் அந்த உடந்தைக்காரனுடைய சாக்ஷியம் இவ்விஷயங்களில் முக்கியமாய் பலப்படுத்தப்படவேண்டும். குற்றம் நடத்தப்பட்ட விதத்தைக்குறித்து மாத்திரம் உடந்தைக்காரனுடைய சாக்ஷியத்தை பலப்படுத்துவது போதாது. ஒவ்வொரு காவலாளியும் குற்றமுள்ளவனென்கிற விஷயத்திலும் உடந்தைக்காரனுடைய சாக்ஷியம் பலப்படுத்தப்படவேண்டும். மேலும், ஒரு உடந்தைக்காரனுடைய சாக்ஷியம் மற்றொரு

உடந்தைக்காரனுடைய சாக்ஷியத்தினாலாவது அவனுடைய சொந்த மனைவியின் சாக்ஷியத்தினாலாவது பலப்படுத்தப்படுவது போதாதததான். ரா-கருக. டெ-அகூ0-பி. பெ-கசுஎ-பி. மேறகண்ட இராணி எதிரிஸ்டப்ஸ் வியாச்சியம்.

கூகூசு. செய்யப்போகிற குற்றமின்னதென்று முன்னதாகத் தெரியப்படுத்தி குற்றவாளிகளை லேசாய்ப் பிடிக்கும்பொருட்டு அதிகாரஸ்தாகளுடைய உத்தரவின்பேரில் அந்தக் குற்றவாளிகளோடு கலந்துக்கொண்டு நடக்கிற மருமம்தெரிந்தவனுடைய சாக்ஷியம் பலப்படுத்தப்படவேண்டியதில்லை. டெ-அகூக-பி

## லிகிதரூபமான சாக்ஷியம்.

கூகூஎ. தஸ்தாவேசு என்கிற மொழி வெகு சாதாரணமான அர்த்தத்தை யுடையதாயிருக்கின்றது. மனிதர்கள் தங்கள கருத்தை எதின்பேரில் எழுதி அல்லது குறிப்புசெய்து தெரிவிக்கிறாகளோ அப்படிப்பட்ட யாதொரு வஸ்துவும் அந்தமொழியில் சோந்ததாகும். ஆகையால் காகிதஙகள்மாத்திரமேயல்லாமல், கல், சுவர், செடி இதுகளின் பேரில எழுததேறபட்டிருந்தால் அதுகளும் தஸ்தாவேசுகளேயாம. மேலும ஒரு கொம்பின்பேரில் கணக்காய்க் குறிவைக்கப்பட்டிருந்தால் அந்தக் கொம்பும் தஸ்தாவேசாகும. ஆனல படங்களும் பிம்பங்களும் தஸ்தாவேசுகளாக எணணப்படுகிறதில்லை. (பெ-உ0கூ-பி) இதனடியில் எழுதப்பட்டது பீனல்கோட்டின் உகூ-வது பிரிவில் கண்ட விவரமாம். "தஸ்தாவேசு என்னும் வார்த்தையானது "எழுத்தினாலாகிலும் லக்கத்தினாலாகிலும் அடையாளங்க "ளினாலாகிலும் இந்த வகைகளில் ஒருவகையினாலல்லாமல் "பலவற்றாலாகிலும் யாதொரு சங்கதிக்குச் சாக்ஷியமாக உ "பயோகிக்கவேணுமென்று உத்தேசிக்கப்பட்டதாகவாவ "து உபயோகிக்கத்தக்கதாகவாவதிருக்கிற எதின்பேரிலாகி

"னும் வரைந்து தெரிவிக்கப்பட்டிருக்கிற அந்த சங்கதியெ
"ன்று அர்த்தமாகும்."

"அர்த்தம் - க.—அந்த எழுத்துக்களும் லக்கங்களும் அ
"டையாளங்களும் எந்த கருவியினுலாவது எதின்பேரிலா
"வது வரைந்திருந்தாலும் யாதொரு கோர்ட்டிக்கு சாக்ஷி
"யமாக உத்தேசிக்கப்பட்டதா யிருந்தாலும் இராவிட்டா
"லும் யாதொருகோர்ட்டில் உபயோகிக்கப்படுவதா யிருந்
"தாலும் இராவிட்டாலும் நிமித்தமில்லை."

திருஷ்டாந்தம்.

"ஒப்பந்த ஷரத்துகள் கண்டிருக்கிற ஆதாரவானது அ
"ந்த ஒப்பந்தத்திற்கு சாக்ஷியமாக உபயோகிக்கப்படுமா
"னல் அது தஸ்தாவேசென்று சொல்லப்படும்.

"ஒரு சாவுகார்பேரில் கொடுக்கப்பட்ட செக்கானது
"தஸ்தாவேசென்று சொல்லப்படும்.

"வகாலத்து நாமாவானது தஸ்தாவேசென்று சொல்லப்
"படும்.

"சாக்ஷியமாக உபயோகிக்க உத்தேசிக்கப்பட்டதாக
"வாவது உபயோகிக்கப்படுவதாகவாவதிருக்கிற பூமிப்பட
"மும், நக்ஷாவும், தஸ்தாவேஜென்று சொல்லப்படும்.

"கட்டளைகளும் கற்பனையும் அடங்கிய ஆதாரவானது தஸ்
"தாவேசென்று சொல்லப்படும்.

"அர்த்தம் - உ.—வியாபாரமுதலியவற்றிலுள்ள வழக்கப்
"படிக்கு எழுத்துகளினுலாவது லக்கங்களினுலாவது அ
"டையாளங்களினுலாவது என்னென்ன தெரிவிக்கப்படுகிற
"தோ அது உள்ளபடி தெரிவிக்கப்படாமற் போனபோதி
"லும் இந்தப்பிரிவின் தாற்பரியப்படிக்கு உள்ளபடி தெரி
"விக்கப்பட்டதாகவே எண்ணப்படும்.

திருஷ்டாந்தம்.

"ஒருவன் தன் உத்தரவுபெற்றவனுக்கு பணஞ்செலுத்த
"ப்படத்தக்க உண்டியின் பின்புறத்தில் தன்பேரை எழுதி

"ஞல் அப்படி எழுதுவது உண்டியைக் கொண்டுவருகிறவ "னுக்குப் பணஞ் செலுத்தப்படவேணுமென்று வியாபார "வழக்கப்படி அர்த்தமாவதால் அது தஸ்தாவேஜா யிருக்கி "றது. மேலும் 'கொண்டுவருகிறவனுக்குப் பணஞ்செலுத்து' "என்னும் வார்த்தைகளாவது அப்படி அர்த்தமாகிற வேறே 'வார்த்தைகளாவது அந்தக் கையெழுத்துக்குமேலே எழு "தியிருப்பதுபோலவே அதற்கு அர்த்தம் பண்ணவேண்டி "யது."

௩௩௯. "லிகிதங்கள்" அல்லது "லிகிதரூபமான சாக்ஷி யம்" என்கிற வார்த்தையானது யாதொரு உடன்படிக் கையைச் செய்துகொண்ட ஆசாமிகளுடைய கருத்து, தீ ர்ப்புகள், விதாயகங்கள் இப்படிப்பட்டவைகளுக்கு ஞயா பகக் குறிப்பாக எழுதிவைக்கப்பட்ட லிகிதங்களைக்குறித் துமாத்திரம் பரிபாஷையாய் வழங்குகிறதேயாம். பெ- உகக-பி.

௩௪௰. லிகிதங்கள் (பப்ளிக்) பொதுவிஷயத்திற் குரி யதாயாவது(பிரைவேட்) சொந்தவிஷயத்திற்குரியதாயாவ திருக்கின்றன. சட்டவிதாயக சபையாராலாகிலும் துரை த்தனத்தாராலாகிலும் ஏற்படுத்தப்படும் ஆக்ட்டுகள், நியா யசபையாருடைய சித்தாந்தங்கள், அல்லது செய்கைகள், வாக்குமூலங்கள், கக்ஷிக்காரருடைய விமரிசைக் கிரந்தங் கள், இப்படிப்பட்டவை பொது விஷயத்திற்குரிய லிகிதங் களாம். குடிகள் தங்கள் தங்கள் சொந்தத்தில் எழுதிவை க்கிற தஸ்தாவேசுகள், பத்திரங்கள், உடன்படிக்கைகள், மரண சாசனங்கள், முதலியவை சொந்த விஷயத்திற்குரிய லிகிதங்களாம். "சாதனம்." என்கிற பதம் சாதாரணமா ய்ச் சொந்த விஷயத்திற்குரிய லிகிதங்களைப்பற்றி வழங்க ப்படுகின்றது. பெ-உக௦-பி - ம் - மிகுதியும்.

## போது விஷயத்திற்குரிய லிகிதங்களின் ருசுவும், பிரயோசனமும்.

௩௪௦. ௧௮௬௯ ௵ ௨-வது ஆக்ட்டு ௨-வது ௩-வது பிரிவுகளின்படி இந்தியாவின் சட்டவிதாயக சபையாரா லும் பிரிடிஷ் சட்டநிர்மாண சபையாராலும் ஏற்படுத்தப்ப ட்ட ஆக்ட்டுகளைக் கோர்ட்டார் நியாய முறைமையின்படி தெரிந்துகொள்ளத்தக்கவர்களென்று (இந்நூலின்-௫-வது பிரிவிற்) சொல்லப்பட்டிருக்கின்றது. அந்த ஆக்ட்டின் ௭-வது பிரிவில் "பிரிட்டிஷ் துரைத்தனத்திலிருக்கிற யா "தொரு தேசம், புதசாய் குடியேறிய தேசம், மேற்படி து "ரைத்தனத்துக்கு உட்பட்டிருக்கிற சமஸ்தானம், இவைக "ளின் கவர்ன்மெண்டு கெஜிட்டைக் கொண்டுவந்து காட்டி "மாத்திரம் ருசுப்படுத்தலாம்" என்று விதிக்கப்பட்டிருக்கி ன்றது மேலும், ௮-வது பிரிவின்படி "அப்படிப்பட்ட கெ "ஜிட்டில் பிரசித்தஞ்செய்யப்பட்ட எல்லா விளம்பரங்களை "யும் இராஜாங்கத்தின் லெஜிஸ்லேட்டிவ் அல்லது எக்சிகியூ "ட்டிவ் ஆக்ட்டுகளையும் உத்தியோக நேமகங்களையும் மற்ற "சர்க்கார் சம்பந்தமான தஸ்தாவேசுகளையும் ருசுப்படுத்த "வேண்டுமானல் அப்படிப்பட்ட கெஜிட்டைக் கொண்டுவ "ந்துகாட்டி ருசுப்படுத்தலாம். அதுகள் எதற்காக பிரசி "த்தஞ்செய்யப்பட்டதோ அந்தச் சர்க்கார் சம்பந்தமான "சங்கதிக்கு பிரத்தியக்ஷமான சாக்ஷியமாக அதுகளை ஏற்று "க்கொள்ளவேண்டும்." இதைக்குறித்து இங்கிலீஷ் சாஸ்தி ரத்தை டெயிலருடைய கிரந்தத்தின் ௧௨௨௭-௧௩௨௮-வது பிரிவுகளைப் பார்த்துக்கொள்க.

௩௪௧. மேற்படி ஆக்ட்டின் ௯-வது பிரிவில் "சர்க் "கார் சம்பந்தமான யாதொருசங்கதி நியாயப்பிரமாணங் "களும் சட்டங்களும் ஏற்படுத்தும் பொருட்டு நேமிக்கப்ப "ட்ட ஆலோசனை சபையிலுள்ள இண்டியாவின் கவர்னர் "ஜனரலவர்களால் செய்யப்பட்ட யாதொரு ஆக்ட்டில் "கண்டெழுதி யிருந்தால் அந்தச் சங்கதியின் உண்மையை

"மேற்படி கோர்ட்டாரும் அதிகாரிகளும் பிரத்தியக்ஷமான "சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று விதிக்க ப்பட்டிருக்கின்றது. டெ-கஙஉசு-பி-பார்த்துக்கொள்க.

ஙசஉ. க0-வது பிரிவின்படி "கவரன்மெண்டு ஸ்டா "ட்டியூட்டையாவது, ஆக்ட்டையாவது, சட்டத்தையாவ "து கட்டளையையாவது கோர்ட்டாராகிலும் ரிவினியூ போ "ர்ட்டாராகிலும் ரிவினியூ ஆபீசராகிலும் செய்திருக்கிற நிப "ந்தனையையாவது கட்டளையையாவது ஆதாரமாகக்கொ "ண்டு யாதொரு விளம்பரத்தைப் பிரசித்தஞ் செய்திருக்கி "றதாகக் கண்டிருக்கிற கெஜிட்டையாகிலும் சமாசாரபத் "திரிகையையாகிலும் மேற்சொல்லிய கோர்ட்டார் அல்ல "து அதிகாரிகள் அப்படிப்பட்ட ஆதாரத்தைக்கொண்டே அ "ந்த விளம்பரம் பிரசித்தம் செய்யப்பட்டதெனபதற்குப் "பிரத்தியக்ஷமான சாக்ஷியமா யேற்றுக்கொள்ளவேண் "டும்."

ஙசங. பார்லெமெண்டாருடைய பயிரங்கமான ஆக்ட்டுகள் நியாய முறைமையின்படி தெரிந்துக்கொள்ளத் தக்கவையாதலால் அவைகளை ருசுப்படுத்தவேண்டிய அவசியமுமில்லை; கொண்டுவந்து காட்டவேண்டியதுமில்லை. மேலும் பார்லெமெண்டார் சொந்தத்தில் ஏற்படுத்தின ஆக்ட்டுகள் இராணியவர்களுக்காக அச்சடிக்கிறவனு டைய அச்சிடப்பட்ட ஒரு பிரதியைக் கொண்டுவந்துக் காண்பித்து பிரத்தியக்ஷமாய் ருசுப்படுத்தப்படலாம். கஅ௱ருறு௵ உ-ஆ-ங-பி. டெ-கஙசுஅ-பி.

ஙசச. கேவலம் கெஜிட்டு பத்திரிகையைக் கொண்டு வந்துக் காட்டி ருசுப்படுத்தவேண்டிய விதத்தைக்குறித்து டெயிலர் என்பவர் (கசஎரு-வது பிரிவில்) தெரிவித்திரு ப்பதியாதெனில் "உத்தியோக காரியத்தைப்பற்றியும் சுயப் "பிரயோஜனத்தைப்பற்றியும் பிரசுரம் செய்யப்படும் பிர "சித்த பத்திரிகைகள் உண்மைதானென்பதற்கு அதுகளைப்

"பிரசித்தஞ் செய்தவன் உத்தரவாதியா யிருப்பதால் அப்
"படிப்பட்ட விஷயங்கள்தவிர மற்றெந்த விஷயமாவது
"சர்க்கார் அதிகாரியினால் பிறப்பிக்கப்பட்ட தல்லவென்று
"தெரிந்திருந்தும் அவர்களால் பிறப்பிக்கப்பட்டதாக ம
"னப்பூர்த்தியாய் பிரசுரஞ்செய்வது தர்மார்க்கமான கா
"ரிய மாகுமென்று ஙியாபகத்தில் வைத்துக்கொள்ளவே
"ண்டும்."

௩சடு. பொதுவான சரித்திரம், கல்வி, சாஸ்திரம், கலை, அல்லது அன்னியதேச சட்டம், இவைகளைப்பற்றிய விஷயங்களில் க௮௫௫௫) உ-ஆ-கக-கஉ - வது பிரிவுக ளின்படி மேற்கோளாகிய கிரந்தங்களைப் பார்வையிட கோ ர்ட்டாருக் கதிகார முண்டாயிருப்பதாக (௩க௮ - ௩கக- வது பிரிவுகளில்) முன்னமே பிரஸ்தாபித்திருக்கிறோமல்ல வா. இங்கிலீஷ் சட்டப்படி இப்படிப்பட்ட சாக்ஷியம் பொதுவான சரித்திர விஷயங்களில்மாத்திரம் அங்கீகரிக் கப்படலாம். சாஸ்திரம், கலை, அல்லது அன்னியதேச சட் டம், இவைகளைப்பற்றிய அம்சங்கள் அந்தந்த விஷயததில் பயிற்சியுள்ள சாக்ஷிகளினால் ருசுப்படுத்தப்படவேண்டும். டெ-கஉஎக-கஉ௮0-க௫௮௫-பி-கள்.

௩சசு. க௮௫௫௫) உ-வது ஆக்ட்டு க௩-வது பிரிவின் படி "யாதொரு விவாதத்தைத் தீர்மானிக்கும்பொருட்டுச் "செய்யப்படாமல் கவரன்மென்டார் அல்லது சமஸ்தா "னத்தாருடைய உத்தரவின்பேரில் செய்யப்பட்ட பூமி "முதலியவற்றின் படங்களெல்லாம் சரியானதாகவும் வே "றே அத்தாட்சி வேண்டாமல் பிரத்தியக்ஷமான சாக்ஷிய "மாகவும் ஏற்றுக்கொள்ளப்படும்."

௩சஎ. எந்தெந்த சர்க்கார் தஸ்திரங்களிலாகிலும் இ தர தஸ்தாவேஜுகளிலாகிலும் சர்க்கார் உத்தியோகஸ் தர்கள் சட்டப்படிக்காவது அவர்களுடைய உத்தியோகத் தன்மையைப்பற்றியாவது முக்கியமான சங்கதிகளை எழு திவைக்கவேண்டுமோ அப்படி சர்க்கார் தஸ்திரங்கள் அல்

லது இதர தஸ்தாவேசுகள் வழக்கமான பரிசோதனைக் கருவிகளாகிய பிரமாணத்தினுலும் எதிர்கேழ்வியினுலும் உறுதிப்படுத்தப்படாமற் போனபோதிலும் அவை அப்ப டிப்பட்ட சங்கதிகளுக்குச் சாக்ஷியமாகச் சாதாரணமாய் அங்கீகரிக்கப்படுகின்றன. அப்படிப்பட்ட தஸ்திரங்களா வையெனில்:—பிறப்பு இறப்பு கலியாணம் இவைகளைக்கு றித்து சட்டப்படி ஏற்படுத்திவைக்கப்படும் தஸ்திரங்களா ம். நம்பிக்கையுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்களை நியமி த்து அவர்களைக்கொண்டு எழுதி வைத்திருப்பதினுலும் அவ ற்றிற்குச் சம்பந்தப்பட்ட சங்கதிகள் பொதுவான சுபா வத்தை யுடையனவாயும் வெகுசாய் புராதனதேதி யுடை யனவாயு மிருப்பதைப்பற்றி சாக்ஷிகளினுல் ருசுப்படுத்து வது கஷ்டமாயிருக்குமாதலாலும், அவை சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படுகின்றன. ஆனுல் அப்படிப்பட்ட பொது வான தஸ்தாவேசுகளைச் சட்டப்படியாவது சர்க்கார் உத் தியோக தர்மத்தைப்பற்றியாவது ஏற்படுத்தி வைக்கப் பட்டவையா யிருந்தால்மாத்திரம் அங்கீகரிக்கப்படும். மேலும், அவை சர்க்கார் உத்தியோகஸ்தனுல் எழுதி வை க்கப்படத் தக்கதல்லாத வேறு எந்த சங்கதிகளையாவது ருசுப்படுத்தும் பொருட்டு அங்கீகரிக்கப்படமாட்டாது. இன்னூல் உஉஉ-உ௨௩-பி-கள். டெ-கசஉக-கசா௩௦-பி-கள். டெ-௨௧௩-பி.

௩சஅ. கடைசியிற் சொல்லிய விதமான சர்க்கார் தஸ் தாவேசுகள் எவனுடைய சுவாதீனத்தி லிருக்கவேண்டுமோ அப்படிப்பட்டவனுடைய சுவாதீனத்திலிருந்து அவைக ளையே கொண்டுவந்து காட்டுவதினுலாவது அல்லது அதி காரிகளினுல் கையொப்ப மிடப்பட்டாவது ஒத்திடப்பட் டாவதிருக்கிற அந்த விதிதங்களுடைய பிரதிகளைக் கொ ண்டுவந்து காட்டுவதினுலாவது ருசுப்படுத்தப்படலாம். அப்படிப்பட்ட தஸ்தாவேசுகள் சாக்ஷியமாகக் கொள் ளப்படும்போது அவைகளை வைத்திருக்கும் அலுவல் எந்த

உத்தியோகஸ்தனைச் சார்ந்ததோ அந்த உத்தியோகஸ்த னுடைய நிலைமையும் நடத்தையையும் பற்றி அவற்றின் பேரில் மதிப்புண்டாகும். பொய்ச்சங்கதிகளை எழுதிவை க்கத் துணியத்தக்க உத்தியோகஸ்தர்களினாலே கிராம தஸ் திரங்கள் சில தருணங்களில் எழுதி வைக்கப்படுகின்றன வென்று எண்ணவேண்டியதா யிருக்கின்றது. டெ-கசாநகூ-கசாநஎ-பி-கள். நா-சரு௯-பி.

ந௯௧. தஸ்திரங்களில் கண்ட சங்கதிகளையாவது சட் டப்படி எழுத்தில் ஏற்பட்டிருக்கவேண்டிய யாதொரு சாதனத்தின் சங்கதிகளையாவது ருசுப்படுத்துவதற்கு வா ய்மொழியான சாக்ஷியத்தைப் பதிலாயிக்கக்கூடாது. ஆதலால்-கோர்ட்டாருடைய சித்தாந்தங்கள், வாக்குமூலங் கள், ஜாமீன்சீட்டுகள், முதலிய சர்க்கார் தஸ்தாவேசுகள் வாய்மொழியான சாக்ஷியத்தினால் ருசுச் செய்யப்படக் கூடாது. சட்டப்படி லிகிதத்தி லேற்பட்டிருக்கவேண் டிய மரண சாசனங்களையும் மற்ற சாதனங்களையும் ருசுப் படுத்துகிற விஷயத்திலும் இந்த விதியே உபயோகமாகின் றது. (டெ-நஎ0-பி.) ஆனால் வாக்குமூலம் அல்லது வி சாரணைப்பத்திரம் கிரமப்படி எழுதப்பட்டிருக்கவில்லை யென்று நீக்கப்பட்டாலும் அது எழுத்தி லேற்படுத்தப்ப டாமற்போனாலும் அப்படிப்பட்ட விஷயங்களில் மேற் கண்ட விதி உபயோகப்படமாட்டாது. எப்படியென்றால், காவலாளியாவது சாக்ஷிக்காரனாவது ஒரு தருணத்தில் எழுத்துமூலமான வாக்குமூலங்கொடுத்து, மற்றொரு தரு ணத்தில் வாய்மொழியாய் வாக்குமூலங்கொடுத்து அதை எழுதிவைக்காமற்போனால் அப்படிப்பட்ட வாய்மொழி யான வாக்குமூலம் வாய்மொழியான சாக்ஷியத்தினாலே யே ருசுச்செய்யப்படலாம். டெ-நஎக-பி.

நரு0. ஆனால் எவ்வளவாவது மதிக்கத்தக்க அல்லது முக்கியமான சர்க்கார் தஸ்தாவேசுகளைச் சாக்ஷியத்துக் காக வேண்டுமென்று கேட்பவர்களெல்லாருக்கும் அவை

கொடுப்பது மிகவும் அசந்தர்ப்பமாயிருக்கையால் அதிகாரிகளினால் கையொப்ப மிடப்பட்ட அல்லது ஒத்திடப்பட்ட பிரதிகளைக்கொண்டு அந்த தஸ்தாவேசுகள் சாதாரணமாய் ருசுச்செய்யப்படலாம் பிரதிக்குப் பிரதி கொண்டுவந்தால் அது எவ்வளவும் அங்கீகரிக்கத்தக்கதாகாது. டெ-கரு.எஅ-பி.

ருருக. அதிகாரியினால் கையொப்பமிடப்பட்டு உண்மையானதென்று நிர்ணயிக்கப்பட்ட பிரதி, அல்லது அதிகாரியினால் கையொப்பமிட்ட பிரதி என்பது பிரதிசெய்து கொடுப்பதற்கு அதிகாரம்பெற்ற உத்தியோகஸ்தனாலே கொடுக்கப்பட்டு உண்மையான பிரதியென்று அவரால் கையொப்பமிடப்பட்ட பிரதியேயாம். அப்படிப்பட்ட பிரதிகள் சாக்ஷியத்தில் சாதாரணமாய் ஏற்றுக்கொள்ளப்படுவதுமல்லாமல் சில சங்கதிகளில் அங்கீகரிக்கப்படத்தக்கனவென்று சட்ட விதாயக சபையாருடைய ஆக்ட்டினால் வெளிப்படையாய் விதிக்கப்பட்டிருக்கின்றது. மேலும், "இப்போது வழங்கிவருகிற யாதொரு ஸ்டாட்டியூட்டு, "ஆக்ட்டு, சட்டம், அல்லது கட்டளையின்படியாவது, இனி "மேல் வழங்கப்போகிற யாதொரு ஸ்டாட்டியூட்டு அல் "லது ஆக்ட்டின்படியாவது எந்தக் கோர்ட்டிலாகிலும் யா "தொரு சங்கதியைக்குறித்து சாக்ஷியாக ஏற்றுக்கொள்ள "ப்படுகிற யாதொரு சர்ட்டிபைகேட்டாகிலும், சர்க்கார் 'கையெழுத்துச் செய்திருக்கிற மலாகிலும், வேறே தஸ் "தாவேசுகளாகிலும், சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்படு "மென்று சொல்லியிருக்கிற ஸ்டாட்டியூட்டு, ஆக்ட்டு, "சட்டம் அல்லது கட்டளையில் கண்டிருக்கிறபிரகாரம் அ "வைகள் யதார்த்தமாய் கிரமப்படி எழுதப்பட்டிருக்குமா "னால், அவைகள் ஏற்றுக்கொள்ளப்படுகிறபட்சத்தில் யா "தொரு சீலாவது, ஸ்டாம்பாவது, கையெழுத்தாவது, அ "டையாளமாவது அத்தாக்ஷியாவது இல்லாமற்போனாலும் "பிரத்தியக்ஷமான சாக்ஷியமாகும்" என்று கஅருருஹு

உ - ஆக்ட்டு ருக - வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கிறது. கஎ௫-உ௩எ-௩௫௭-பி-களைப்பார்த்துக்கொள்க.

௩௫௨. ஆனால் வாக்குமூல மெழுதிவைப்பதில் பொய்ச்சத்தியஞ் செய்தல் தஸ்திரத்தைப் பொய்யாய் சிருஷ்டித்தல் ஆகிய இப்படிப்பட்ட விஷயங்களில் எப்படியோ அப்படியே தஸ்திரத்தி னிருப்பைக்குறித்தாவது அதில்கண்ட சங்கதியைக்குறித்தாவது பிரத்தியக்ஷமாய் விவாதமுண்டாயிருக்கும்போது அசல் தஸ்தாவேஜைக்கொண்டுவந்து காட்டவேண்டும். மேலும், இத்தேசத்தில் அதிகாரிகள் பிரதிகளை எழுதுவித்து அது உண்மையானதென்று கையெழுத்துசெய்வதில் வெகு அசாக்கிரதையாய் இருப்பதால் அப்படிப்பட்ட பிரதியின் உண்மையைக்குறித்து எவ்விதமான நியாயத்தைக்காட்டியாவது ஆக்ஷேபிக்கப்படும்போதெல்லாம் கோர்ட்டார் சாதாரணமாய் அசல் தஸ்தாவேஜைப்பார்க்க விரும்புகிறார்கள். டெ-க௩எ௪-பி-பார்த்துக்கொள்க.

௩௫௩. ஒத்திடப்பட்ட அல்லது பிரமாணிக்கமான பிரதி என்பது-தான் ஒத்திட்டதாகவும், சரியாயிருக்கிறதாகவும், பிரமாணஞ் செய்யவாவது, பிரமாணவசனத்தைச் சொல்லவாவது, சித்தமாயிருக்கிறவனால் அசல் தஸ்தாவேஜுடன் ஒத்திடப்பட்ட பிரதியாம். இந்த விஷயத்தில் ஸ்டார்க்கி என்பவர் (உஎ0-வது பக்கத்திற்) சொல்லியிருப்பதற்கு வேறுபாடாய் டெயிலர் என்பவர் (க௩௮௪ - வது பக்கத்தில்) சொல்லுவதென்னவெனில்:—ஒருவன் உறக்கவாசிக்க மற்றொருவன் அசல் தஸ்தாவேஜுடன் பிரதியை ஒத்திடும்போது "அப்படி ஒத்திடுகிறவர்கள் தங்களி "லொருவர்கையிலிருக்கிற காகிதத்தை மற்றொருவன வா "ங்கிக்கொண்டு வாசிக்கவேண்டிய அகத்தியமில்லை." ஆயினும் அப்படிச்செய்வது மிகவும் பத்திரமான மார்க்கமென்பதற்குச் சந்தேகமில்லை. பிரதி உண்மையானதாயும் பூர்ணமானதாயும் அசலில் விவரமா யெழுதப்பட்டிருக்

கிற மொழிகளைச் சுருக்கி எழுதியிராமலும் இருக்கவேண்டும். மேலும் பிரதியைச் சாக்ஷியமாய் வாசிப்பதற்கு முன்னதாக அதின் அசல் தகுதியான இடத்தில் வைக்கப்பட்டிருந்து அவ்விடத்தினின்றுகொண்டு வரப்பட்டதாகவாவது தகுமான அதிகாரியின் சுவாதீனத்திலிருந்துகொண்டு வரப்பட்டதாகவாவது ருசுப்படுத்தப்படவேண்டும். டெ-கஙஅக-பி. ௯ா-சருக-பி. டெ-சககக-பி.

பிரதிசெய்யும் யந்திரத்தினுலான பிரதியைக்குறித்து ருசுவேண்டியதில்லை. கஅருருஞூ உ-ஆ-ஙரு-பி.

ஙருச. ஒருவன் சர்க்கார் அலுவலைப் பார்த்துவரும் சங்கதி அவன் கிரமமாய் நியமிக்கப்பட்டிருக்கிறுனென்பதற்குப் பிரத்தியக்ஷ சாக்ஷியமாயிருக்குமாகையால் அவன் நியமிக்கப்பட்டதைக்குறித்து சாக்ஷியம் கொண்டுவரவேண்டியது சாதாரணமாய் அவசியமில்லை. டெ-சஎஉ-பி.

எவனுவது தான் சர்க்கார் உத்தியோகத்திலிருக்கிறதாக மாறுபாடாய் நடந்தால் அப்படிப்பட்டவன் பீனல் கோட்டின்-கஎ0-கஎக-வது பிரிவுகளின்படி அபராதத்திற்கும் காவலுக்கும் உள்ளாவான் என்று கியாபகத்தில் வைக்கவேண்டும்.

## விவகார சம்பந்தமான லிகிதங்கள்.

ஙருரு. இனி சித்தாந்தங்கள், விமரிசைக் கிரந்தங்கள், சாக்ஷி வாக்குமூலங்கள், இப்படிப்பட்ட விவகார சுபாவமுள்ள பொது லிகிதங்களின் ருசுவைக்குறித்தும் அவைகளினுலுண்டாகும் பலனைக்குறித்தும் முக்கியமாய் யோசிக்கத்தடங்குவோம்.

ஙருசு. வெளிஜில்லாக் கோர்ட்டுகளில் ஒரு தீர்ப்பை ருசுப்படுத்தவேண்டுமானுல் அதிகாரியினுல் கையொப்பமிடப்பட்ட பிரதியைக் கொண்டுவந்துகாட்டி ருசுச்செய்யப்படலாம். அந்தப் பிரதி முத்திரைக்கடிதாசியின்பேரில் எழுதப்பட்டிருக்கவேண்டும். ஙரு0-ஙருக-பி-கள்.

௲டுஎ. ஒரு சிவில் கோர்ட்டாருடைய தீர்ப்பை அந்தக் கோர்ட்டாருடைய அதிகாரவரம்புக்கு வெளியில் நிறைவேற்றவேண்டுமாயின் அந்தத் தீர்ப்பின் பிரதியையும் அது நிறைவேற்றப்படவில்லையென்பதற்கு ஒரு (சர்ட்டிபிகேட்) நிச்சயபத்திரிகையும், அதற்குமுன்னேதாவது உத்தரவுகள் செய்யப்பட்டிருந்தால் ஜட்ஜியின் கையெழுத்தும் கோர்ட்டாருடைய முத்திரையும் உள்ள அப்படிப்பட்ட பிரதிகளையும் எந்தக் கோர்ட்டாருடைய வரம்புகளில் அந்தத் தீர்ப்பை நிறைவேற்றிக்கொள்ளவேண்டுமோ அந்தக் கோர்ட்டாருக்கு அனுப்பவேண்டுமென்று ௧௸டுக௳ ௮-வது ஆக்ட்டு-௨௮௪-ஷ ௨௮௭-வரையிலுள்ள பிரிவுகளில் விதிக்கப்பட்டிருக்கின்றது. மேலும் "யாதொரு உத்தரவி "லாகிலும் காணப்படுகிற எந்த விசேஷ சங்கதிகளைப்பற் "றியாவது ருசுவேண்டுமென்று விதிக்கப்பட்டாலொழிய" கோர்ட்டாருடைய தீர்ப்பைக்குறித்தாவது உத்தரவுகளைக்குறித்தாவது பிரதிகளைக்குறித்தாவது கோர்ட்டாருடைய முத்திரை கையெழுத்து அல்லது அதிகார வரம்பைக்குறித்தாவது எவ்வித ருசுவுவேண்டியதில்லையென்று ௨௮௯-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கின்றது.

௲டு௮. ஒரு கோர்ட்டு சித்தாந்தத்தைக் கொண்டுவந்து காண்பித்தால் அது உண்மையாய் பிறந்திருப்பதைக்குறித்தும் அதின் தேதியைக்குறித்தும் அதினாலுண்டாகும் விவகார சம்பந்தமான பிரயோசனத்தைக்குறித்தும் அதில் சம்பந்தப்பட்டிருக்கிறவர்களுக்கு மாத்திரமல்லாமல் உலகத்திலுள்ளவர்கள் எல்லார் விஷயத்திலும் அது முடிவான சாக்ஷியமாயிருக்கும். அவ்வளவு முக்கியமும் பயிரங்கமுமுள்ள தஸ்தாவேசானது அதிக சாக்கிரதையுடனும் சரியாயும் எழுதப்பட்டிருக்குமென்கிற அநுமேயத்தைப்பற்றி மேற்சொன்ன அம்சங்களைக்குறித்து அது தேறுகடையானதாயிருக்கின்றது. ஆனால் அன்னியர்களைக்குறித்து மற்றெந்த அம்சங்களைப்பற்றியும் அது சாதாரணமாய்

முடிவானதா யிருக்கமாட்டாது. "எப்படியென்றால் ஒரு "வேலைக்காரனாவது காரியஸ்தனாவது அஜாக்கிரதையாய் "நடந்ததைப்பற்றி அவனுடைய யஜமானன் அல்லது முத "லாளிக்கு விரோதமாய்ச் செய்யப்பட்ட சித்தாந்தமானது "(அந்த யஜமானனாலாவது முதலாளியாலாவது அந்த வே "லைக்காரன், அல்லது அந்த காரியஸ்தன்பேரில் கொண்டு "வரப்பட்ட வழக்கில்) அந்த யஜமானனாவது முதலாளி "யாவது தீர்ப்புசெய்யப்பட்ட நஷ்டத்தொகையைச் செலுத் "தவேண்டி வந்ததென்பதற்கு அந்த வேலைக்காரன் அல்ல "து காரியஸ்தனுக்கு விரோதமாய் தேறுகடையான சாக்ஷி "யமாயிருக்கின்றது. ஆனால் அது எந்த விஷயத்தை ஆதா "ரமாகக் கொண்டிருந்ததோ அந்த விஷயமாகிய வேலைக் "காரன் அல்லது காரியஸ்தனுடைய துர்நடத்தையைக்கு "றித்துச் சாட்சிய மாகமாட்டாது. எப்படியென்றால், ஜா "மீன்தாரன்பேரில் செய்யப்பட்ட ஒரு தீர்ப்பானது, கடனா "ளிக்காக ஜாமீன்தாரன் செலுத்துவதாக ஏற்பட்ட மொத் "தத்தை ருசுப்படுத்த அந்த ஜாமீன்தாரன் பக்ஷத்தில் சா "க்ஷியமாயிருக்குமேயொழிய கடனாளி கடனைச் செலுத் "தாமற்போனால் அந்தத் தொகையைச் சட்டப்படி அந்த, ஜா "மீன்தாரன் செலுத்த பாத்தியப்பட்டிருக்கிறானென்பதற் "கு அது எவ்வளவும் ருசுவாகமாட்டாது." டெ-கசஅ0-பி. நா-சகூடு-பி-ம் பார்த்துக்கொள்க.

கூடுக. ஒரு சித்தாந்தத்தினால் சட்டப்படிக்கு உண்டா கிற முடிவுகளுக்குள் ஒரு மேஜிஸ்திரேட்டின்பேரில் கொ ண்டுவரப்படும் வியாச்சியத்தில் "அந்த வியாச்சியவிஷயத் "தை விசாரிப்பதற்கதிகாரமுள்ள ஒருமேஜிஸ்திரேட்டினால் "செய்யப்படும் குற்றஸ்தாபனையைப் பார்த்தமாத்திரத்தில் "எந்தக் குறைவுமில்லாததாய்க் காணப்பட்டால் அதிற்கண் "டவிஷயங்களுக்கு அதுவே தேறுகடையான சாக்ஷியமா "கும்." (ஸ்மி-லீ-கே-க-பு-டுஎஎ-பக்கத்திற்கண்ட கிரொப்ஸ் எதிரி டார்டென் இவ்வழக்கின் குறிப்பிற்கண்ட பிரிடென்

கின்னர்ட்டு ராச்சியங்களின் சீப் ஜஸ்டிஸ் ஆன டாலாஸ் என்பவருடைய அபிப்பிராயம்.) மேலும், எந்தச் சங்கதிகளை ஆதாரமாகக்கொண்டு அந்தத் தீர்ப்பு செய்யப்பட்டதோ அந்தச் சங்கதிகளை வேறு சாக்ஷியத்தைக்கொண்டு மறுப்பதற்கு வாதி சுதந்தரனல்லன். நடந்த சங்கதிகளைக் குறித்து மேஜிஸ்திரேட்டார் பிசகிப்போயிருந்தால் அப்பீல் செய்வதே அதற்குத் தகுந்த பரிகாரம். மேலும் குற்றஸ்தாபனமானது அழிக்கப்படுகிறவரையில் நடந்த சங்கதிகளை ஆதாரமாகக்கொண்டு வழக்கிடக்கூடாது. மேஜிஸ்திரேட்டு தனக்குள்ள அதிகாரத்தை மீறி நடந்ததாக வாதி சொன்னபோதிலும் அவருக்குள்ள அதிகாரவரம்பிவ்வளவென்று குற்ற ஏற்பாடுபத்திரிகையினாலே வெளியாய் அந்தப் பத்திரிக்கை கிரமமானதாயும் ஒழுங்கானதாயுமிருக்கிறபட்சத்தில் அப்படிக்கி அதிகாரத்தைக் கடந்து நடந்த சங்கதியை வேறு சாக்ஷியத்தைக்கொண்டு வாதிருசுப்படுத்தக்கூடாது. மேஜிஸ்திரேட்டுகளைக்குறித்து மேற்கூறப்பட்ட பாதுகாப்பானது ஜட்ஜிகளும் மற்ற அதிகாரஸ்தர்களும் செய்யக்கூடுமான தீர்ப்புகள் விஷயமாய் அவர்களுக்கும் உபயோகப்படுகிறதாகத் தோற்றுகின்றது. மேலும் இது சித்தாந்தத்தினால் சட்டப்படி உண்டாகிற முடிவுகளிலொன்றாயிருக்கின்றது. ஸ்மி-லீ-கே-க-பு-௬௭௭-வது-பக்கத்தில்-கிரொப்ஸ்-எதிரி-டர்டென் வியாச்சிய விஷயத்துக்குச் சேர்க்கப்பட்ட குறிப்பு. ௩ா-௨௯௯-பி. டெ-க௭௮௨-க௭௮௩-பி-கள்.

௩௪௦. இனி நிர்ணயிக்கப்பட்ட சங்கதிகளைப்பற்றிய மட்டில் தீர்ப்புகளின் பிரயோஜனத்தைக்குறித்து நாம்யோசிப்போம். தகுந்த அதிகாரமுள்ள கோர்ட்டாருடைய சித்தாந்தமானது அந்தக் கக்ஷிக்காரர்களுக்குள்ளாவது அவர்கள் மூலமாய் வழக்காடுகிறவர்களுக்குள்ளாவது பிறகு நடக்கும் யாதொரு விவகாரத்தில் பிரத்தியக்ஷமாய் நிர்மாணிக்கப்பட்ட எந்த விஷயத்தைப்பற்றியாவது முடிவா

னதாயிருக்குமென்பது பொது விதியாயிருக்கின்றது. ஆனால் சார்பாய் அல்லது தற்செயலாய் பிரஸ்தாபிக்கப்படும் எந்த விஷயத்தைக்குறித்தாவது தீர்ப்பைப்பற்றி செய்யப்படும் வாதத்தினால் உளகிக்கப்படத்தக்க எந்த விஷயத்தைக்குறித்தாவது அந்தத் தீர்ப்பு சாக்ஷியமாகமாட்டாது. தீர்ப்பு செய்யப்பட்ட விஷயமானது இரண்டு வியாச்சியங்களிலும் ஒன்றாகவே யிருக்கவேண்டும். ஆனால் இதற்குச்சொல்லின்பேரில அர்த்தஞ்செய்யக்கூடாது. ஏனெனில், ஒரு ஆட்டுமந்தையானது மத்திய காலத்துக்குள் சில ஆடுகள் செத்துப்போயும் சில ஆடுகள் உற்பத்தியாயு மிருந்தபோதிலும் அது சில காலத்துக்குப்பிறகு அந்த மந்தையாகதானிருக்கும். இரண்டு வழக்குகளிலும் விவாதாம்சம் ஒன்றாகவே யிருக்கிறதாவென்று தெரிந்துகொள்வதற்கு அந்தச் சாக்ஷியத்தைக்கொண்டே ஸ்தாபிக்கலாமாவென்று யோசிப்பது நன்றாயிருக்கும். டச்செஸ்-ஆப் - கிங்க்ஷ்டன் என்கிறவளுடைய வழக்கில் ஜட்ஜிகள் கொடுத்த மறுமொழியைப் பார்த்துக்கொள்க. ஸ்மி லீ-கே-௨-பு-௫௯௪-ப. பெ-௱௯௯-பி. டெ-௧௫௧௨-பி. மஹை-கோ-ரி-௨-பு-௧௩௧-பக்கத்திற்கண்ட உடையாத்தேவர் எதிரி-காத்தம நாச்சியார் வழக்கு. இந்நூலின்-௧௫௫-பி.

விவாத விஷயம் ஒன்றாகவேயிருந்தால் வாதத்தில் கொஞ்சம் ஒழுங்கு பேதமிருந்தாலும் நிமித்தமில்லை. ஆயினும் குற்றஞ் சாட்டப்பட்டவன் தன்பேரில் முன்செய்யப்பட்டிருந்த குற்றஸ்தாபனமாவது விடுதலையாவது தன்பேரில் புதிதாய் ஏற்பட்ட பிரியாது பத்திரத்திற்குத் தடையாக வாதிக்கக்கூடாது. முந்திய பிரியாது பத்திரமானது இரண்டாவது பிரியாது பத்திரத்தை ஸ்தாபிப்பதற்கு அவசியமான சங்கதிகளின் ருசுவைக்கொண்டு அவன்பேரில் குற்றத்தை ஏற்படுத்தத் தக்கதாயிருந்தால் விவாத அம்சங்கள் வேறானவையா யிருக்குமாதலால் அப்படி வாதிக்கலாம். எப்படியெனில், ஒரு காவலாளி ஒரு வீட்டில் புகு

ந்து A என்பவனுடைய சில சரக்குகளைத் திருடினதாக ஏற்பட்ட குற்றத்திலிருந்து விடுதலை செய்யப்பட்டால் அது அவன் அவ்வீட்டிலேயே புகுந்து B என்பவனுடைய இதரச் சரக்குகளைத் திருடினதற்காக அவன்பேரில் ஏற்படுத்தப்பட்ட குற்றபத்திரத்திற்குத் தடையாயிருப்பதாக வாதிக்கக்கூடாது. டெ-கருககூ-பி.

௩கூக. ஆனால் ஒரு நியாய சபையார் தங்கள் முன்பாகக் கொண்டுவரப்பட்ட சாக்ஷியத்தையும் விவாதர்களையுமாத்திரம் அனுசரித்து தீர்ப்புச் சொல்லத்தக்கவர்களாயிருக்கிறார்கள். மேலும் வியாச்சிய நடவடிக்கையின் பேரில் யாதொரு சுதந்தரமில்லாதவர்களும் சாக்ஷியம் கொண்டுவரவாவது சாக்ஷிகளை எதிர்கேழ்விகளைக் கேழ்க்கவாவது சமயமில்லாதவர்களும் அப்பீல் செய்யத்தக்க சுதந்தர மில்லாதவர்களுமாகிய அன்னியர்களுக்கு அந்தத் தீர்ப்பினால் எவ்வளவேனும் கெடுதியுண்டாவது சாதாரணமாய் அன்னியாயமாகவே யிருக்கும். ஆகையால இனி தெரிவிக்கப்படும் விஷயங்கள் தவிர மற்ற விஷயங்களில் ஒரு தீர்ப்பு அன்னியனுக்கு விரோதமான சாக்ஷியமாகமாட்டாதென்பது பொதுவிதியா யிருக்கின்றது. இதுவுமல்லாமல் தீர்ப்பில் சம்பந்தபடாத அந்த அன்னியனுக்கு விரோதியாயிருப்பவன் அந்தத் தீர்ப்பில் சம்பந்தப்பட்ட கக்ஷிக்காரனா யிருந்தபோதிலும் அது அந்த அன்னியனுக்கு அனுகூலமான சாக்ஷியமாகமாட்டாது, ஏனெனில், எந்தத் தீர்ப்பானது ஒருவனுக்கு விரோதமா யிருக்கிறதென்கிற காரணத்தைப்பற்றி அவனுக்குப் பிரதிகூலமாய் உபயோகிக்கக்கூடாதோ அந்தத் தீர்ப்பில் அவனுக்கு அனுகூல முண்டாகுவதும் சமநீதிக்கு விரோதமென்றெண்ணப்படுகின்றது. டெ-கசகரு-பி. பெ-ருகசு-பி.

௩கூஉ. (ஜட்ஜ்மெண்ட் இன்ரெம்.) ஸ்திதி நிர்த்தாரித சித்தாந்தம். அஃதாவது தகுந்த அதிகாரியினால் ஒரு முக்கியமான நிலை அல்லது தன்மையைப்பற்றி செய்யப்

படும் சித்தாந்தமானது மேற்கண்ட நிபந்தனைக்கு முக்கியமான விலக்காயிருக்கின்றது. ஒரு கப்பலைக் கொள்ளையாய்ப் பிடித்துக்கொள்ளும்படி தீர்மானித்தல், திருட்டுச் சரக்குகளை வாங்கக்கூடாதென்று தகுந்த ரிவினியூ அதிகாரிகள் கண்டித்தல், விவாகசம்பந்த விமோசனத்திற்குரிய தீர்ப்பு, மரணசாஸன விஷயமான புரோபேட் என்னும் அதிகாரபத்திரம் இவை ஸ்திதி நிர்த்தாரித சித்தாந்தம் என்பதற்கு திருஷ்டாந்தங்களாம். விசேஷித்து இப்படிப்பட்ட விஷயங்களில் யாருடைய பிரயோசனத்துக்குக் கெடுதியுண்டாகுமென்று தோற்றுகின்றதோ அவர்கள் அந்த வழக்குக்குக் கக்ஷிக்காரர்களாயிருக்கலா மாகையாலும், அப்படிப்பட்ட தீர்ப்பினாலேயே ஒரு விஷயத்தின் தன்மை இப்படிப்பட்டதென்று ஒருதரம் ஸ்தாபிக்கப்பட்டபின்பு அதை மறுபடியும் மாற்றக்கூடா தாகையாலும், வழக்குகள் விர்த்தியாகாம லிருக்கும்படி தடுப்பதற்கும் அப்படிப்பட்ட சித்தாந்தங்கள் உலகத்தார் யாவரைக் குறித்தும் முடிவானவையென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. டெ-கசஅஅ-கசஅகூ-பி-கள். ரா-சஎக-பி. டச்செஸ்-ஆப்-கிங்க்ஷ்டன் என்பவனுடைய வழக்குக்கு ஸ்மித் என்பவரால் சேர்க்கப்பட்டிருக்கிற குறிப்பு. கஅகூஉ௵-ம-ச-அ-தீரப்பு புத்தகத்தின் ௩௫ - வது பக்கத்தில் கண்ட கூசம்மாள் - எதிரி - மாதவாசாரி - இவர்களுக்கு நடந்த கஅகூ0௵ உ0கூ-வது நம்பர் அப்பீல் வழக்கு.

௩கூ௩. ஆயினும் அப்படிப்பட்ட ஸ்திதியைக் குறித்தாவது நிலையைக்குறித்தாவது நடத்திய நடவடிக்கையைப் பார்த்தமாத்திரத்திலே அதின் சங்கதி பிரத்தியக்ஷமாய் விவகாரத்தில் கொண்டுவரப்பட்டதென்றும் உண்மையாய்க் கோர்ட்டாரால் பரிஷ்கரிக்கப்பட்டதென்றும் தெரியத்தக்கதா யிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அந்தத் தீர்ப்பு அந்தச் சங்கதிக்கு முடிவான சாக்ஷிய மாகமாட்டாதாகையால் பிந்திக் கொண்டுவரப்படுமொரு வழக்கில்

அந்தச் சங்கதி உண்மையானதல்லவென்று ருசுப்படுத்தப் படலாம். ௭-கசக௦-கசகக-பி-கள்.

௩௯௪. ௩௯௧-வது பிரிவிற் கண்டிருக்கிற விதிக்கு மற்றொரு விலக்கானது வெளிப்படையான சுபாவமுள்ள விஷயங்களைக்குறித்த சித்தாந்தங்களா யிருக்கின்றது. அவையாவன:—"வழக்கங்கள், விதிகள், சுங்கங்கள், பாரி "ஷஸ் கௌண்டீஸ் அல்லது மேனர்ஸ் இப்படிப்பட்ட "பூபாகங்களின் எல்லைகள், ஆறு முதலிய ஜலத்தின்பேரில் "ஜனங்களையாவது சொத்துக்களையாவது அனுப்புகிற சுத "ந்தரம், பாட்டைகள், கடலோரச் சுவர்கள் இப்படிப்ப "ட்டவைகளைப் பழுதுபார்க்கும் சுதந்தரம், நிலத்துக்கு "ரியவனுக்கு தீர்வைக்குப்பதிலாய் பணத்தைச்செலுத்தும் "பாத்தியதை முதலியவை." இப்படிப்பட்ட விஷயங்களில் ஒரு சித்தாந்தமானது சகூதிக்காரனைக்குறித்து முடிவானதா யிருப்பதுமல்லாமல் அன்னியனைக் குறித்து அது முடிவானதாயிராமற் போனபோதிலும பிரக்கியாதியைக்குறித்த சாக்ஷியமா யேற்றுக்கொள்ளத் தக்கதாயிருக்கும். ௭-கசகூ௯-பி. இனறாய்ஸ்-ககஉ-பி - பார்த்துக்கொள்க.

௩௯௫. ஒரு குற்றத்தைக்குறித்து பிராது செய்யப் பட்டு பிறகு குற்றவாளி யல்லவென்று விடுதலை செய்யப் பட்ட விஷயம் சீவில் விவகாரத்தில் தோஷமில்லையென்பதற்கு சாக்ஷியமாகமாட்டாது. மேலும் ஒருவன் தான் விடுதலையாயிருக்குஞ் சங்கதியை சாக்ஷியத்தில் எப்படி உபயோகப்படுத்திக்கொள்ளக் கூடாதோ அப்படியே கிரிமினல் விவகாரங்களில் செய்யப்பட்ட குற்றஸ்தாபனமானது அவன் குற்றவாளிதான் என்று வாதிக்குதாலொழிய அவனுக்கு விரோதமான சாக்ஷியமாகமாட்டாது. அப்படிக் கில்லாவிட்டால் ஒருமைப்பா டுண்டாகமாட்டாது. இதுவுமல்லாமல் அனேக கிரிமினல் விவகாரங்களில் இராணியவர்கள் பிராதை நடப்பிப்பதினாலும் சீவில்

வியாச்சியத்தில் அவர்கள் கக்ஷிக்காரராயிராமற் போ வதினாலும் கிரிமினல் விவகாரங்களின் கக்ஷிக்காரர்களும் சிவில் வியாச்சியங்களின் கக்ஷிக்காரர்களும் வெவ்வேறா னவர்களா யிருக்கிறார்களென்று ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். ஆகையால் கல்கத்தா சதர் திவானி அ தாலத்துக்கோர்ட்டாருடைய ௧௮௪௮-ம் வருஷத்திய தீர் ப்புபுத்தகத்தில்-௫0௮-வது பக்கத்திற்கண்ட மன்னிமொ ஹன்மந்தல் என்பவன் மொதுசுத்தீனமந்தல் என்பவன் பேரில் செய்த வழக்கில் பொய்ப்பிராது செய்ததற்காக பிரதிவாதிக்கு அபராதம விதித்து மேஜிஸ்திரேட்டு செய்த உத்தரவு அப்படிக்கி பொய்ப்பிராது செய்ததைக்குறித்து நஷ்டத்திற்காகக் கொண்டுவரப்பட்ட வழக்கில் வாதிபக்ஷ த்தில் பலமான சாக்ஷியமாயிருந்ததென்று அந்தக் கோர்ட் டில் ஜட்ஜியாயிருந்த ஜஸ்டிஸ் ஹாகின்ஸ் என்பவர் பிசகா ய்த் தீர்மானித்திருப்பதாகத் தோற்றுகின்றது. (பூதாஸெ ன் என்பவனாலும் மற்றொருவனாலும் கோபாலபுகார்ட்டு மு தலியவர்கள்பேரில் செய்யப்பட்டு கலகத்தா சதர் திவானி அதாலத்துக் கோர்ட்டாருடைய-௧௮௫0-ம் வருஷத்திய தீர்ப்பு புத்தகத்தில் ௪0௫ - வது பக்கத்தில் கண்டிருக்கிற வழக்கையும் பார்த்துக்கொள்க.) இதுவுமல்லாமல் அந்தக் காரணங்களைப்பற்றியே அதாவது கக்ஷிக்காரர்கள் வெவ் வேறானவர்களா யிருப்பதினாலும் ஒருமைப்பாடில்லாமை யினாலும் சிவில் வியாச்சியத்தின் தீர்ப்பு கிரிமினல் விவகா ரத்தில் சாக்ஷியமாகமாட்டாது. ஏனெனில் எந்த பிசகினா லாவது தவருதலினாலாவது ஒருவன் ஒரு சிவில் வியாச்சி யத்தில் அபஜயப்பட்டுப் போவானோ அந்தப் பிசகு அல்ல து தவருதலைப்பற்றி யாதொரு கிரிமினல் விசாரணையில் உலகத்தாரெல்லாரும் சங்கடப்படும்படி செய்வது அநியா யமாயிருக்கின்றது. ஒரு ஸ்திதி நிர்த்தாரித சித்தாந்தமா னது கிரிமினல் விசாரணைகளில் சாக்ஷியமா யேற்றுக்கொ ள்ளப்படலாமா வென்பது சந்தேகமானதாயிருக்கின்றது.
ரா - ௪௮௮ - ௪௮௯ -பி - கள். டே - ௧௫0௫-பி.

௩௬௬. ஸ்திதி நிர்த்தாரிதஞ் செய்யாத சித்தாந்தங்களா னவை (ஜட்ஜ்மெண்ட்ஸ் - இன்டர் - பார்டீஸ்) துவிகக்ஷி பூர்வக சித்தாந்தங்கள் அதாவது இரு கக்ஷிக்காரர்கள் விஷயமாய்ச் செய்யப்பட்ட சித்தாந்தங்களென்று சொல் லப்படுகின்றது. அப்படிப்பட்ட சித்தாந்தங்கள் கக்ஷிக்கா ரர்களுடைய விஷயத்திலாவது அவர்களுக்காக வழக்கா டுகிறவர்கள் விஷயத்திலாவது முடிவானதென்று (௩௬௦-வது பிரிவில்) நாம் கண்டிருக்கிறோமல்லவா. கக்ஷிக்கா ரனென்கிற மொழிக்கு வழக்கு நடக்கிறகாலத்தில் வாலிபர் களா யிருந்தாலும் வியாச்சியக் கிரந்தங்களில் கக்ஷிக்கார னென்றுகண்டிருக்கிறவர்களெல்லாருமென்று அர்த்தமாம். ஆயினும் ஒருவன் தனக்குத் தெரியாமலும் குறிக்கப்பட்ட வ ழியாய் தனக்குச் சம்மன் முதலிய கட்டளைகள் கொடுக்கப் படாமலும் ஒரு வழக்கில் பிரதிவாதியாய்ச் சேர்க்கப்பட்டி ருந்தால் அவ்வழக்கில் செய்யப்படும் சித்தாந்தத்தினால் அவ ன் கட்டுப்பட்டவனாகமாட்டான். மேலும் ஒரு நிலைமையை ப்பாராட்டி வழக்கிட்ட ஒருவனுக்கு விரோதமாய்ச் செய்ய ப்பட்ட தீர்ப்பு அந்த மனிதனே மற்றொரு நிலைமையைப் பாராட்டி பின்பு வழக்கிடுவதற்குத் தடையாகமாட்டாது. என்னத்தினாலென்றால், அப்போது அவன் விவகாரத்தில வேறொரு மனிதனாகவே எண்ணப்படுகிறான். டே-கசக-அ- பி, ஸ்பி-லீ-கே-உ-பு-௬௪அ-ப.

௩௬௭. ஒரு சித்தாந்தத்தினால் ஒரு கக்ஷிக்காரனுடைய சங்கதி முடிவாய்ப்போச்சுதென்று வாதிக்க எண்ணங் கொண்டிருக்கிற விஷயத்தில் அந்தத் தீர்ப்பினால் தடைய ண்டாயிருப்பதாக வாதிப்பதற்குச் சமயம் வாய்த்திருந்தா ல் அப்படிக்கு வாதிக்கப்படவேண்டும். அப்படிப்பட்ட சமயத்தை உபயோகப்படுத்திக்கொள்ளாத விஷயத்தில் அப்படிக்கதை வாதிக்காமல் விட்டுவிட்ட கக்ஷிக்காரன் த டையைக்குறித்து வாதிக்கும் விஷயத்தில் தனக்குள்ள அ திகாரத்தை விட்டுவிட்டதாக எண்ணப்படும். மேலும் அ

ப்படிப்பட்ட தீர்ப்பை சாக்ஷியமாய்க் கொண்டுவரும் விஷ யத்தில் அது கேவலம் அங்கீகரிக்கத்தக்கதாயிருக்குமே யொழிய முடிவானதா யிருக்கமாட்டாது. ஆயினும் மூந் தின தீர்ப்பைக்குறித்து வாதிப்பதற்கும் சமயம் வாய்க்கா விடின் அந்தத் தீர்ப்பு அந்தக் கக்ஷிக்காரருக்கேயாவது அவ ர்கள் மூலமாய் வழக்காடுகிறவர்களுக்கேயாவது முடிவா ன சாக்ஷியமாயிருக்கும். ஸ்மி-லீ-கே-உ-வது புத்தகத்தி லகண்ட டச்செஸ் - ஆப் - கிங்க்ஷ்டன் என்பவளுடைய வி..ாச்சிய விஷயத்துக்குச் சேர்க்கப்பட்டிருக்கிற குறிப்பு.

௩௩௮. அன்னியதேசத்துக் கோர்ட்டாருடைய தீர்ப்பு இத்தேசத்துக் கோர்ட்டாருடைய தீர்ப்பைப்போலவே ச மரேறக்குறைய அந்த ஏற்பாட்டின்படியே அங்கீகரிக்கப்ப டத்தக்கதாகவும், முடிவானதாகவும் இருக்கும். "அன்னி "யதேசத்துக் கோர்ட்டாருடைய தீர்ப்பினால் தீர்க்கப்ப "ட்ட தொகையை வரப்பற்றிக்கொள்ளுகிறதற்காகக் கொ "ண்டுவரப்படும் வழக்கை விசாரிக்க அதிகாரமுடைய எந்த "ச் சிவில்கோர்ட்டிலாகிலும் வழக்குத் தொடரப்படலாம். "அந்த அன்னியதேசத்தின் கோர்ட்டு தீர்ப்பு வியாச்சியமூ "லமா யிருக்கும்.

"அன்னியதேசத்தின் தீர்ப்பு ஏற்றுக்கொள்ளப்படவே "ண்டுமாகில் அது விவாதத்திலிருக்கிற அம்சங்களை முடி "வாய் த்ரமாணிப்பதாயும் வியாச்சியத்தின் உண்மை "யான நியாயங்களை விசாரித்துச் செய்யப்பட்டதாயும் "இருக்கவேண்டும். மேலும், வியாச்சியமூலத்தின்பேரி "லாவது, வியாச்சிய விஷயத்தின்பேரிலாவது, அந்த "அன்னியதேசத்துக் கோர்ட்டாருக்கு அதிகாரமில்லாம "லிருந்ததென்கிற காரணத்தைப்பற்றியாகிலும், மறுமொ "ழி சொல்லும்பொருட்டு பிரதிவாதிக்குச் சம்மன் சேர்ப் "பிக்கப்படவில்லையென்கிற காரணத்தைப்பற்றியாகிலும், "அந்தப் பிரதிவாதியினுடைய எதிர்வார்த்தைத் தெரிவி "ப்பதற்கு சமயங் கொடுக்கப்படவில்லையென்கிற நியா

"யத்தைப்பற்றியாகிலும், அந்தத் தீர்ப்பு மோசவிதமாட் "ப் பெறப்பட்டது அல்லது அது ஒப்படைப்பு செய்யப்ப "ட்டதென்கிற சங்கதியைப்பற்றியாகிலும், அந்தத் தீர்ப்பு "சரியானதல்லவென்று சொல்வதற்கு ஆஸ்பதமுண்டாயி "ருக்கும். மேற்கண்ட ஏதுக்களில் எதைக்குறித்தாகிலும் "நிலைக்கத்தக்க ஆக்ஷேபனை யில்லாதபக்ஷத்தில் அந்த வி "யாச்சியம் அதின் நியாயாநியாயங்களைப்பற்றி மறுபடி "ம் விசாரிக்கப்படக்கூடாது. ஏனெனில், அன்னியதேச "த்துக் கோர்ட்டில் எதிர்வாதஞ் செய்வதற்கு எந்த நியா "யங்களுண்டாயிருந்ததோ அந்த நியாயங்களை அவ்விடத் "திலேயே வாதிக்கப்படவேண்டி யிருந்தது." ரு - பிரா- க அசுக (ஐ) நவம்பர்மீ உசு-ப.

௩௬௬. ஒரு சித்தாந்தமானது மாற்றப்பட்டது, அல்லது அந்த வழக்கில் சுதாவில் சம்பந்தப்பட்டிருந்த ஜட்ஜியினால் அது செய்யப்பட்டது என்கிறவைப்போன்ற இதர ஆக்ஷேபனைகள் வியாச்சிய சாராம்சத்தில் பிரவேசிக்காமலே ஏற்றுக்கொள்ளப்படலாம். டெயிலருடைய கிரந்தத்தின் கருஙஅ-வது பிரிவிலிருந்தெடுத்து இதன்பின் எழுதப்பட்டிருக்கும் விஷயத்தினால் இங்கிலண்ட்தேசத்தில் பிரதிவாதிக்கு வெகு சலக்கரணை செய்யப்பட்டிருந்ததாகத் தெரியவருகிறது. "அன்னியதேசத்தில் செய்யப்பட்ட தீர் "ப்பானது ஒரு தேசத்தாருக்கும் மற்றொரு தேசத்தாருக் "கும் உள்ள தருமசாஸ்திரத்துக்கு விரோதமா யிருக்கிற "தென்றாவது சுபாவமாய் நியாயமுறைமைக்குஒத்திருக்கவி "ல்லையென்றாவது இங்கிலீஷ் சாஸ்திரத்தைக்குறித்து தப்பு "அபிப்பிராயங்கொண்டு அந்தத் தீர்ப்பு செய்யப்பட்டிருக் "கிற தென்றாவது அந்தத்தீர்ப்புஎந்தத்தேசத்தில்செய்யப் "பட்டதோ அத்தேசத்து தருமசாஸ்திரத்துக்கு அது பிர "த்தியக்ஷ விரோதமா யிருக்கிறதென்றாவது யாதொரு அம் "சமானது வாஸ்தவமாய் பரிஷ்கரிக்கப்பட்டிருந்தால் அப் "படி பரிஷ்கரிக்கப்பட்ட அம்சம் ஏதென்று சந்தேகமுண்

டாக்கத்தக்க குறைவுண்டாயிருக்கிறதென்றுவது எந்த முக்கிய அம்சங்களின்பேரில் அந்தத் தீர்ப்பு செய்யப்படக்கூடாதென்று வெளிப்படையாய்த் தெரியவருகிறதோ அப்படிப்பட்ட முக்கிய அம்சங்களைப்பற்றி செய்யப்படுவதாகக் காணப்படுவதுபோல பிரத்தியக்ஷமாய் பிசகுள்ளதாயிருக்கிறதென்றுவது நடவடிக்கைகளைப் பார்த்தமாத்திரத்திலே தெரியவந்தாலும் அல்லது புறம்பான ருஜுவினால் கண்டுகொள்ளத்தக்கதாயிருந்தாலும் அவ்வன்னிய தேசத்து சித்தாந்தத்தைச் சாக்ஷியமாய் ஏற்றுக்கொள்வதினாலுண்டாகும் பயன் முற்றிலும் கெட்டுப்போகும்."

௩௭௦. அன்னியதேசத்தில் செய்யப்பட்ட ஸ்திதிநிர்த்தாரித சித்தாந்தத்தைக் குறித்தோவென்றால், கொள்ளைப் பொருளைப்பற்றியாவது அன்னியதேசத்தில் குடியிருந்து அந்தேசத்தின் சட்டங்களுக்கு உட்பட்டிருக்குமவர்கட்கு அவ்விடத்திலேயே நடந்த விவாஹத்தைப்பற்றியாவது செய்யப்பட்ட தீர்ப்புகள் உலகத்தாரைக்குறித்து முடிவான தீர்ப்புகளாயிருக்குமேயல்லது அத்தேசத்தில் செய்யப்பட்ட காரியங்களைக்குறித்து தவிர மற்றப்படி சவரக்ஷிக்க வேண்டிய பாத்தியம், கடனிறுக்கச் சக்தியில்லாமை, மரண சாசனுதிகாரம், இவைகளைக்குறித்த தீர்ப்புகள் அப்படி முடிவானவையாயிராது. டெ - ௧௫௭௨ - முதல்-௧௫௭௭-வரையிலுள்ள பிரிவுகளைப் பார்த்துக்கொள்க.

௩௭௧. அன்னியதேசத்துக் கோர்ட்டில் ஒருவன் தன் பக்ஷமாய் தீர்ப்புபெற்று அந்த வியாச்சியமூலத்தைப்பற்றி அந்தப பிரதிவாதியின்பேரிலேயே இத்தேசத்தில் புது வியாச்சியம் கொண்டுவந்தால் அந்தப் பிரதிவாதி அந்த அன்னியதேசத்துத் தீர்ப்பு நிறைவேற்றப்படாமலிருக்கிறபக்ஷத்தில் அதைத் தன்னுடைய எதிர் வாதத்தில் தனக் கனுகூலமாய் உபயோகப்படுத்தக்கூடாது. அது நிறைவேற்றப்பட்டிருந்தால் அந்தத் தீர்ப்பு வாதி விஷயத்தில் தேறுதலையானதாயிருக்கும். ஆனால் அந்த அன்னியதேசத்துத்

தீர்ப்பு பிரதிவாதிக் கனுக்கூலமானதாயிருந்தால் அந்த வ
ழக்கின் வாதியினலேயே அந்த வியாஜ்ஜிய மூலத்தைப்ப
ற்றியே இத்தேசத்தில் செய்யப்படும் இரண்டாவது வழக்
கைத் தடுக்கத்தக்கதாயிருக்கிறதென்று அந்தப் பிரதிவாதி
வாதிக்கலாம். "ஒருவனொரு அன்னியதேசத்தில் தகுந்த
'அதிகாரமுள்ள கோர்ட்டாரால் விசாரித்து விடுதலை செ
"ய்யப்பட்டிருந்தால் அந்தக் குற்றத்தைக்குறித்தே இத்தே
"சத்தில் அவன்பேரில் ஏறபடுத்தப்படும் குற்ற பத்திரத்
"துக்குத் தடையாய் அவ் விடுதலையைப்பற்றி வாதித்து ரு
"சுச்செய்யலாம்." டெ-கருசஅ-கருசக-பி-கள்.

கஎஉ. அன்னியதேசத்தில் தன் பக்ஷமாய் தீர்ப்பைப்
பெற்ற ஒரு வாதி இத்தேசத்தில் அச்சங்கதியின் சாரா
ங்களைப்பற்றி வழக்கிட்டாலும் இடலாம். அல்லது அ
ந்த் தீர்ப்பைப்பற்றியே வழக்கிட்டாலும் இடலாம். சார
ம்சங்களைப்பற்றி வழக்கிடுகிறபக்ஷத்தில் அந்த அன்னியதே
சத்துத் தீர்ப்பைக்கொண்டுவந்து காட்டினபோதிலும் பி
ரதிவாதி அந்த வழக்குக்கு ஆக்ஷேபனை செய்யலாம். டெ-
கருருரு-பி.

ஒரு அன்னியதேசத்துத் தீர்ப்பானது சிலோன் தீவிலிரு
க்கிற கோர்ட்டாரால் செய்யப்பட்டதாயிருந்தபோதிலும்
அதைக்குறித்து புது வழக்கு செய்யப்படாமலே நம்முடை
ய தேசத்துச் சிவில்கோர்ட்டாரால் நிறைவேற்றப்படமா
ட்டாது. ஆனால் கவர்னர் ஜனரல் அவர்களால் அன்னிய
சமஸ்தானத்தி லேற்படுத்தப்பட்ட கோர்ட்டாருடைய தீ
ர்ப்புகளுக்கு இந்த நிபந்தனை வேண்டுவதில்லை. ரு-பிரா-
கஅகூக ௵ நவம்பர்மீ.

கஎக. ஒரு தீர்ப்பானது மேலான பெரிய கோர்ட்டா
ரால் செய்யப்பட்டதாயிருந்தபோதிலும் மோசரீதியாயா
வது பலர்கூடி உட்கையாயிருந்ததினலாவது பெறப்பட்ட
தாயிருந்தால் அதை நீக்கிவிடலாம். எவனுக்கு விரோத
மாய் ஒரு தீர்ப்பு சாக்ஷியத்தில் கொண்டுவந்து காட்டப்ப

ட்டதோ அப்படிப்பட்ட அன்னியன் அந்தத் தீர்ப்பு மோசடிதமாய் பெறப்பட்டதென்று எப்போதும் ருசுப்படுத்தலாம். ஒரு தீர்ப்பில் சம்பந்தப்பட்ட கக்ஷிக்காரன் மோசம் நடந்திருக்கிற சங்கதியை ருசுப்படுத்தலாமாவென்கிற சந்தேகம் இன்னும் தீர்ப்பாகாமலே யிருக்கின்றது. அந்த மோசம் அக் கக்ஷிக்காரனால் நடந்ததாயிருந்தால் அவன் அதை எவ்வளவேனும் ருசுப்படுத்தக்கூடாதென்பது சந்தேகமற்றதா யிருக்கின்றது. டெ-கரு௨௨-பி.

௩எச. இதவுமல்லாமல் தீர்ப்புச்செய்த கோர்ட்டாருக்கு அந்த விஷயத்தில் அதிகாரமில்லாமற் போச்சுதென்றுவது அல்லது அந்தத் தீர்ப்பே மாற்றப்பட்டதென்றுவது ருசுப்படுத்தி ஒரு தீர்ப்பை எப்போதாவது மறுதலிக்கலாம். டெ-கரு௨௩-கரு௩0-பி-கள்.

கிரிமினல் தீர்ப்புகளுக்கு அர்த்தம் செய்வதைக்குறித்து பீனல்கோடின் எ௨-வது பிரிவில் இதனடியிற்கண்ட விதி ஏற்பட்டிருக்கின்றது. அதாவது "ஒருவன் பல குற்றங்களில் ஒன்றைச் செய்தவனென்றும், ஆனால் அந்தக் குற்றங்களில இன்னதைச் செய்தவனென்று சொல்லுவதற்குச் சந்தேகமா யிருக்கிறதென்றும் தீர்ப்பில் கண்டெழுதப்பட்டால், அந்த எல்லாக் குற்றங்களுக்கும் ஒரேவிதமான தெண்டனை சொல்லியிராமல் வெவ்வேறு தெண்டனை சொல்லியிருக்கிறபட்சத்தில், அந்தக் குற்றங்களில் எதற்கு மிகவும் குறைந்த தெண்டனை சொல்லியிருக்கின்றதோ அந்தக் குற்றத்திற்காக அந்தக் குற்றவாளி தெண்டிக்கப்படுவான்."

வாக்குமூலங்களும் விசாரணை கிரந்தங்களும்.

௩எரு. சட்டப்படி எழுத்திலிருக்கவேண்டிய வாக்குமூலத்துக்காவது விசாரணை கிரந்தங்களுக்காவது பதிலாய வாய்மொழியான சாக்ஷியம் உபயோகப் படுத்தக்கூடாதென்று இதற்குமுன்னமே (௩௬௧-வது பிரிவில்) சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும் ரிகார்டில் ஏற்பட்டிருக்

லும் சாக்ஷியத்துக்கு எவ்வளவாவது அதிகமாயாவது வித்தியாசமாயாவது அக்காலத்தில் வாக்குமூலம் எழுதி வைத்தவன் சொன்னானென்று ருசுப்படுத்துவதற்கு வாய்மொழியான சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாதென்பது பொதுவான விதியாயிருக்கின்றது. ஆயினும் வாக்குமூலத்திலாகிலும் விசாரணைக் கிரந்தத்திலாகிலும் சிலபாகம் எவ்வளவும் எழுதிக்கொள்ளப்படவில்லையென்று எந்த வியாச்சியத்திலாகிலும் வெளிப்படையாய் ருசுச் செய்யக்கூடுமானால் அந்தப் பாகத்தை வாய்மொழியான சாக்ஷியத்தினால் ருசுப்படுத்தும்படி கோர்ட்டார் உத்திரவுசெய்யலாம். ௩ா-௫௨௪-௫௨௧-பி-கள். ௭-௮௧௬-பி.

௩௭௬. விசாரணைக்கு முன்னதாக எழுதிவைக்கப்பட்டிருக்கிற வாக்குமூலமானது அதை எழுதிவைத்தவன் உயிருடனிருந்து அவனைக் கோர்ட்டுக்கு அழைத்துக்கொண்டு வரக்கூடுமான பக்ஷத்தில் சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்படமாட்டாதென்பது பொதுவான விதியாயிருக்கின்றது. (ஆனால் ௨௩௬-வது பிரிவைப் பார்த்துக்கொள்க.) அப்படிப்போலவே முத்துபெருமாள் என்கிறவர்களுடைய வழக்கில் சென்னப்பட்டணம் பௌசுதாரி அதாலது கோர்ட்டார் சொல்லியிருப்பதென்னவெனில் "காவலாளியின் விசாரணைகாலத்தில் கொண்டுவரப்படும் சாக்ஷியந் "தவிர மற்றெந்த சாக்ஷியத்தினாலும் எவ்விதத்திலும் அவ "னுக்குக் கெடுதி யுண்டாகமாட்டாதென்பதும ஒரு விதி "யா யிருக்கின்றது. சர்க்கியூட் கோர்ட்டின் மூன்றுவது "ஜட்ஜியினால் விசாரணைக்கு அனுப்பப்பட்ட வேறொரு வி "யாச்சியத்திற்குச் சம்பந்தமான முதல்விசாரணை சரித்தி "ரமானது இப்போது நடத்தப்படும் சாக்ஷி விசாரணைக்கு "றைவை எவ்வளவாவது நிறைவாக்கமாட்டாது. பின "னும் அந்தச் சரித்திரமானது இந்த விஷயத்தில் மேஜிஸ் "திரேட்டினாலும் ஜாயிண்டு கிரிமினல் ஜட்ஜியினாலும் நடத்தப்பட்டதா யிருந்தபோதிலும் அப்படி சாக்ஷியத்தின்

"குறைவை சரிப்படுத்த உபயோகப்படமாட்டாது." ஆதலால் இன்னும் சாக்ஷியத்தைப் பெறவேண்டுமென்று கோர்ட்டார் உத்திரவு செய்தார்கள். ஆர்ப்-கிளௌ-௩௬-௪௯. க-ச-தி-அ-கோ-௧௮௫௯வருஷத்திய தீர்ப்பு புத்தகத்தின் ௩௪௯-வது பக்கத்தில்கண்ட பிலம்பர் பித்தியுஷன் என்பவர் பரத்துவான மகாராஜாவின்பேரில் கொண்டுவந்த வியாச்சியத்தையும்; ௧௮௫௭வருஷத்திய தீர்ப்பு புத்தகத்தின் ௩௫௨-வது பக்கத்தில்கண்ட ராம் முகர்ஜி என்பவர் ராம்லாலால் சக்கர்பட்டி முதலாகியவர்கள்பேரில் கொண்டுவந்தவியாச்சியத்தையும்; ௧௮௫௩வருஷத்திய தீர்ப்பு புத்தகத்தின் ௪௯௪-வது பக்கத்தில் கண்ட கூடர் சௌத்திரி என்பவர் நம்கோரத் சௌத்திரிபேரில் கொண்டுவந்த வியாச்சியத்தையும்; க-றி-அ-கோ-௯௫அ-வது நம்பர்-௧-பார்த்துக்கொள்க.

௩௭௭. சாக்ஷிக்காரன் அற்பகாலத்தில் சொஸ்தமாகத் தக்க வியாதியினால் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தால் அந்த வியாதி நீங்குகிறவரையில் அந்த விசாரணையை நிறுத்தி வைக்கவேண்டும். ஆனால் சிவில் விவகாரத்தில் ஒரு சாக்ஷிக்காரன தீராத வியாதிகிரஸ்தனாயாவது தள்ளாதவனாயாவது அந்தஸ்துள்ளவனாயாவது பெண்பாலாயாவது மோசமினறி கோர்ட்டு இருக்கிற இடத்துக்கு நூறு மைல் தூரத்துக்கு அப்புறமிருக்கிறவனாயாவதிருந்து கோர்ட்டுக்கு வரவழைக்கக்கூடாத பக்ஷத்தில் ௧௮௫௯௵ ௩-வது ஆக்ட்டு ௧௭௰-வது பிரிவின்படி அவனை கமிஷன் மூலமாய விசாரிக்கலாம். மேலும் அந்தக் கமிஷன்படி சக்கிரமமாய் நடப்பிக்கப்பட்டு அது திரும்பிவந்தபிறகு அப்படிப்பட்ட வாக்குமூலங்கள் ௧௭௯-வது பிரிவின்படி ஏற்றுக்கொள்ளப்படத்தக்கனவா யிருக்கின்றன.

௩௭௮. சாக்ஷிக்காரன இறந்துபோயிருந்தாலும் அவனைக் கோர்ட்டுக்கு வரவழைக்க அந்தக் கக்ஷிக்காரனுக்காவது கிரிமினல் விஷயத்தில் கோர்ட்டாருக்காவது கூ

டாமற்போயிருந்தாலும், அவன் அதற்கு முன்னடந்த ஒரு விவகாரத்தில் பிரமாணஞ்செய்தாவது பிரமாண வாசகத்தைச்சொல்லியாவது வாக்குமூலம் கொடுத்திருந்து அந்தக்காலத்தில் எதிர்க்கக்ஷிக்காரன் அவனை எதிர்க்கேழ்வி கேழ்க்கச் சமயமிருந்ததானால் இப்போதிய விவாதாம்சமும் முந்தின விவாதாம்சமும் உண்மையா யொன்றாகவே யிருக்கிறபக்ஷத்தில் அந்த வாக்குமூலம் அந்தக் கக்ஷிக்காரர்கள் விஷயத்திலாவது அவர்கள் மூலமாய் வழக்காடுகிறவர்கள் பக்ஷத்திலாவது அங்கீகரிக்கத்தக்கதாயிருக்கும். (டெ-சாஙசு-பி) ஆனால் அந்த வாக்குமூலம் விவகாரம் நடத்தப்படுகையில் பிரமாணஞ் செய்வித்தாவது பிரமாண வாசகம் சொல்லுவித்தாவது வாங்கிக்கொள்ளப்பட்டிருக்கவேண்டும். இந்தச் சங்கதியை சித்தாந்தத்திற்கு ஒரு பிரதி கொண்டுவந்து காண்பித்து ருசுப்படுத்தலாம். மேலும் எதிர்க்கேழ்வி கேட்பதற்குச் சமயமிருந்திருக்கவேண்டும். கிரிமினல் விஷயங்களில் மேஜிஸ்திரேட்டினெதிரில் சாக்ஷிக்காரனிடத்தில் பிரமாணம் செய்விக்கும்போதும் வாக்குமூலம் வாங்குங் காலமுழுமையும் குற்றஞ் சாட்டப்பட்டவன் எதிரிலிருக்கவேண்டும். இதுவுமல்லாமல் விவாதத்திலிருக்கும் சங்கதி உள்ளபடி வேறானதாயிருந்தால் அந்த வாக்குமூலம் அங்கீகரிக்கத்தக்கதாகமாட்டாதாகையால் அந்த வாக்குமூலம் இப்போதும் அது எழுதப்பட்டபோதும் விவாத அம்சத்தை யனுசரித்ததா யிருக்கவேண்டும். கஅசுக (ஹ) உ௫-வது ஆக்ட்டு ஙகுகூ-பி. இன்னூலின் கஙஎ-பிரிவைப் பார்த்துக்கொள்க.

கடைசியாய், அந்த விவகாரமானது அந்தக் கக்ஷிக்காரர்களுக்குள்ளாவது அவர்கள் மூலமாய் வழக்காடுகிறவர்களுக்குள்ளாவது உண்டானதா யிருக்கவேண்டும். ஏனெனில், எதிர்கேழ்வி கேழ்க்கச் சமயமில்லாமற்போன மூன்றும் மனிதனுக்கு விரோதமாய் ஒரு வாக்குமூலத்தை எப்படி உபயோகப்படுத்தக்கூடாதோ அப்படியே அவனுக்கு

விரோதமாய் உபயோகிக்கப்படக்கூடாத சாக்ஷியத்தை யும் அவன்பக்ஷத்தில் உபயோகப்படுத்தக்கூடாது. (டெ-சாகூச-பி-ம் மிகுதியும் பார்த்துக்கொள்க) இப்படிப்பட்ட சங்கதிகளைப்பற்றி கிரிமினல் விஷயங்களில் வாக்குமூலங் களை அங்கீகரிப்பதைக்குறித்து இதற்கு முன்னமே-கஙஅ-உஙகூ - வது பிரிவுகளில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது.

ஙஎக. உஅச-வது பிரிவிற் சொல்லப்பட்டிருக்கிறபடி ஒரு சாக்ஷியின் சாக்ஷியத்தை உறுதிப்படுத்துவதற்காவது அவனிப்போது சொன்ன சங்கதிகளுக்கு விரோதமாய் முன் சொல்லியிருந்தானென்று ருசுப்படுத்துவதற்காவது வாக்குமூலங்களை உபயோகிக்கலாம். உஎஎ-உஎஅ-பிரிவு களைப் பார்த்துக்கொள்க.

ஙஅ0. வாக்குமூலங்களாவது விசாரணைக் கிரந்தங்களாவது ஒப்புதல்களாகவாகிலும் குற்ற ஒப்புதல்களாக வாகிலும் ஏற்றுக்கொள்ளப்படலாம். ஆயினும் கஅருரு ஹு உ-வது ஆக்ட்டு-கூஉ-வது பிரிவின்படி ஒரு சாக்ஷியினிடத்தில் பலாத்காரமாய்ப் பெற்றுக்கொண்டிருக்கப்பட்ட மறுமொழி கிரிமினல் விவகாரத்தில் அவனுக்கு விரோதமாய் குற்ற ஒப்புதலாக உபயோகிக்கப்படக்கூடாது. கசுஅ-கஎரு-பி-களைப் பார்த்துக்கொள்க. டெ-கருசுக-பி.

ஙஅக. மேலும் விவாதங்கள் ஆரம்பமாகிறதற்கு முன் வம்சபரம்பரை வழக்கம் அநுபவம் இவைகளைக்குறித்து இறந்துபோனவர்களால் எழுதி வைக்கப்பட்ட வாக்குமூலங்கள் அன்னியர்களுக்கு விரோதமாயாகிலும் கீர்த்தியைக்குறித்த சாக்ஷியமாய் அங்கீகரிக்கப்படலாம். ககஉ-ககஎ-உ0ங-பி-களைப் பார்த்துக்கொள்க. டெ-கருசுக-பி. நா-ருகசு-பி.

ஙஅஉ. மிகவும் சாதாரணமாய் சாக்ஷியமாக வழங்கி வருகிற வாக்குமூலங்களும் விசாரணைக் கிரந்தங்களும் கிரிமினல் பிரியாது விஷயத்தில் மேஜிஸ்திரேட்டு முன்னிலையில் வாங்கப்படுவனவேயாம். பின்பு அவசியமானால் இ

ந்த வாக்குமூலங்களும் விசாரணைக் கிரந்தங்களும் மேஜிஸ்திரேட்டைக் கொண்டாவது அவருடைய லேகரியைக் கொண்டாவது காவலாளியின் விசாரணைகாலத்தில் ருசுப் படுத்தப்படலாம். (ஆயினும் ௧௭௫-௩௫௧-பி-களைப் பார்த்துக்கொள்க.) மேஜிஸ்திரேட்டு முன்னிலையில் காவலாளி சொல்லியிருக்கிற சங்கதிகள் அந்தக் காவலாளி தானாய்ச் சொல்லியவைகளாயிருந்தால் அவைகள் குற்ற ஒப்புதல்களாக அவனுக்கு விரோதமாய் உபயோகப் படுத்தப்படலாம். ஆதலால் அந்தச் சங்கதிகளை அவன் எந்த வார்த்தைகளினால் தெரிவித்தானோ அந்த வார்த்தைகளையே அதிக சாக்கிரதையுடன் எழுதிக்கொள்ளவேண்டியது மிகவும் முக்கியமாயிருக்கின்றது. (௧௭௪-பி.) குற்ற ஒப்புதல்களைக்குறித்து-௧௬௬-வது பிரிவைப் பார்த்துக்கொள்க.

௩௮௩. போலீசு அதிகாரியினால் செய்யப்படும் ஆரம்ப விசாரணையில் ஒரு சாக்ஷிக்காரன் சொல்லுஞ் சங்கதிகள் எழுதிவைக்கப்பட்டபோதிலும் அப்படிக்கதை எழுதிவைத்தவன் அதில் கையெழுத்து செய்யவேண்டியதில்லை. "அ...
"ரிகார்டில் சேர்ந்ததாக எண்ணப்படவுங்கூடாது, சா...
"யமாக உபயோகிக்கப்படவுங்கூடாது." (௧௮௬௧௵ ௨௫-வது ஆக்ட்டு ௧௪௫-பி.) விவகார பத்திரங்களிற்கண்ட ஒப்புதல்களின் பிரயோஜனத்தைக்குறித்து ௧௫௪ - ௧௫௭-பி-களைப் பார்த்துக்கொள்க.

(பிரைவேட்) சொந்த விஷயத்திற்குரிய லிகிதங்களும், அவைகளைக் கொண்டுவந்து காண்பித்தலும் ருசுப் படுத்தலும்.

௩௮௪. ௧௮௫௯௵ அ-வது ஆக்ட்டு ௩௧-பிரிவின்படி ஒரு வியாச்சியத்தில் வாதி தனக்கு முக்கியமானதென்றெண்ணுகிற எந்த தஸ்தாவேசாவது அதின் பிரதியுடன் பிராது பத்திரிக்கையைக் கொடுக்குங் காலத்திலேயே கொடுக்கப்படவேண்டும். (அப்படிக் கொடுக்கப்படும் தஸ்தாவேசு புத்தகமாயிருந்தால் அதில் தனக்கு ஆதாரமாயிருக்

கிற பாகத்திற்கு ஒரு பிரதி யெழுதி அந்தப்பிரதியுங் கொடுக்கப்படவேண்டும்.) பிரதியைக் கோர்ட்டார் திருத்திக்கொண்டு அசலை மறுபடி கொடுத்துவிடுவார்கள். வாதிக்கு இஷ்டமாயிருந்தால் அசல் தஸ்தாவேசு தாக்கல் செய்துகொள்ளப்படும். "பிராது பத்திரிகையைக் கொடுக்"கும்போதே வாதியால் கோர்ட்டில் கட்டப்படாத யா"தொரு தஸ்தாவேசானது அந்த வியாச்சிய விசாரணைகா"லத்தில் கோர்ட்டாருடைய அனுமதியில்லாமல் வாதிப"க்ஷத்தில் சாக்ஷியமாக ஏற்றுக்கொள்ளப்படாது."

௩அ௫. ௬0-வது பிரிவின்படி "பிரதிவாதியினுடைய "சுவாதீனத்திலாவது அவனுடைய அதிகாரத்துக்குள்ளா"வது இருக்கிற யாதொரு தஸ்தாவேசைக் கோர்ட்டுக்கு "வாதி வரவழைக்கவேணுமானால் அதை பிரதிவாதியைக் "கொண்டுவரும்படி செய்யும்பொருட்டு வாதியானவன் பி"ரியாதுர்ஜி கொடுக்கும்போதே அந்த தஸ்தாவேசு இப்ப"டிப்பட்டதென்று எழுதி கோர்ட்டில் கொடுக்கலாம்." ௬௩-வது பிரிவின்படி கோர்ட்டார் பிரதிவாதிக்குச் சம்மனனுப்பும்போது அந்தத் தஸ்தாவேசையும் அவனுடைய எதிர்வாதத்துக்கு ஆதாரமானதென்று அவனுக்குத் தோற்றுகிற தஸ்தாவேசையும் கொண்டுவரும்படி கோர்ட்டார் அவனுக்கு உத்தரவுசெய்வார்கள்.

௩அ௬. ௧0எ-வது பிரிவின்படி ஒரு வியாச்சியத்தில் ஒரு கக்ஷிக்காரன் அந்த வியாச்சியத்தின் வேறே எந்தக் கக்ஷிக்காரனுடைய சுவாதீனத்திலாவது அதிகாரத்திலாவதிருக்கிற எந்த தஸ்தாவேஜையாவது லிகிதத்தையாவது மற்றதையாவது அவன் கொண்டுவந்து காட்டவேணுமென்று விரும்பினால் அப்படி விரும்புகிற கக்ஷிக்காரன் அதைக் கொண்டுவந்து காட்டச்சொல்லி இரண்டு அறிக்கைப்பத்திரிகைகளை எழுதி கோர்ட்டாரிடத்தில் ஒப்பிக்கவேண்டும். அந்த அறிக்கைப்பத்திரிகைகளில் ஒன்றைக் கோர்ட்டு தஸ்திரத்தில் கட்டிவைத்துக்கொண்டு மற்றொன்றை தகுந்த

உத்தியோகஸ்தன்மூலமாய் அந்தக் கக்ஷிக்காரனுக்காவது அவனுடைய பிளீடருக்காவது சேர்ப்பிப்பார்கள்.

௩௮௭. ௧௨௮-வது பிரிவின்படி "கக்ஷிக்காரர்களாவது "அவர்களுடைய வக்கீல்களாவது முன்னதாய்த் தாங்கள் "கோர்ட்டில் தாக்கல்செய்யாத சாக்ஷியமான சகலவித "தஸ்தாவேசுகளையும் விசாரணைக்கு முன்னமே தகுந்த "காலத்திற்குள்ளாக அவரவர்களுக்கு கொடுக்கப்படுகிற "நோடீசில் கண்டிருக்கிற தஸ்தாவேச முதலானதுகளை "யும் கொண்டுவந்து கோர்ட்டார் கேட்கும்போது காட் "டும்படியாக அந்த வியாச்சியத்தின் முதல் விசாரணை கா "லத்தில் தயாராய் வைத்துக்கொண்டிருக்கவேண்டியது "அந்த முதல் விசாரணைக்குப்பின்பு வியாச்சியம் நடந்து "கொண்டிருக்கையி லெப்போதாவது கக்ஷிக்காரர்களெல் "லோருமாகிலும் அவர்களில் யாராகிலும் சாக்ஷியமான "யாதொரு தஸ்தாவேஜைக் காட்டக் கொண்டுவந்தால் அ "தை முதல் விசாரணைகாலத்தில் கொண்டுவராமற்போன "தைக்குறித்து கோர்ட்டாருக்குத் தகுந்த காரியம் தெரி "விக்கப்பட்டாலொழிய அதைக் கோர்ட்டார் ஏற்றுக்கொ "ள்ளக்கூடாது."

௩௮௮. தஸ்தாவேசைக் கொண்டுவந்து காட்டுவதற் காக ஒரு சாக்ஷிக்குச் சம்மன் பெறவேண்டிய விதத்தைக் குறித்தும் அதின்பேரில் நடத்தவேண்டிய கிரமத்தைக் குறித்தும் இந்த ஆக்ட்டு ௧௫௯-வது பிரிவிலும் அதற்குப் பிந்திய பிரிவுகளிலும் காணலாம். சம்மனில் கூடியவரை யில் நிச்சயமாய் தஸ்தாவேசின் விவரங்களைக் கண்டெழு தவேண்டும். மேலும், "தஸ்தாவேசைக் கொண்டுவந்து "காட்டும்படிக்குமாத்திரம் சம்மன் கொடுக்கப்பட்டவன் "அதற்காக நேரில் ஆஜராகாமல் ஒருவனைக்கொண்டு அந் "த தஸ்தாவேஜைக் காட்டுவித்தால் அந்தச் சம்மனில் க "ண்டபடி நடந்துகொண்டவனாக எண்ணப்படுவான்."

௩௨௯. அந்த ஆக்ட்டின் ௧௬௬ - வது பிரிவின்படி ஒரு வியாச்சியத்தின் கக்ஷிக்காரனுடைய சுவாதீனத்திலாவது அதிகாரத்திலாவதிருக்கிற எந்தத் தஸ்தாவேஜையாகிலும் கொண்டுவந்து காட்டும்படி அந்தக் கக்ஷிக்காரனைக் கோர்ட்டார் தாங்களாகவே வரவழைக்கலாம். மேலும் ௧௬௪-வது பிரிவின்படி கோர்ட்டில் வந்திருக்கிற எவனாவது கக்ஷிக்காரனாயிருந்தாலும் இராவிட்டாலும் அவன் வசத்திலாவது அதிகாரத்திலாவது இருக்கிற எந்த தஸ்தாவேஜையாகிலும் கொண்டுவந்து காட்டும்படி அவனுக்கு சம்மனானுப்பியிருந்தாலெப்படியோ அப்படியே அதை அவன் உடனே கொண்டுவந்து காட்டும்படி செய்யலாம். (உ௪௫-பி-பார்த்துக்கொள்க.) தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காண்பிப்பதற்காக செய்யப்பட்ட சம்மன் அல்லது உத்தரவின்படி நடந்தாமறபோனால் அதன்மேல் இன்னது நடக்குமென்று சாக்ஷிகளுக்குச் சம்மன் செய்வதைக்குறித்துச் சொல்லியபோதே யோசிக்கப்பட்டிருக்கின்றது. உ௪௦-பி-பார்த்துக்கொள்க.

௩௩௦. (ஸ்டாம்பு) முத்திரையில்லாமையினலாவது முத்திரை குறைவாயிருந்ததினலாவது ஒரு சாதனத்தைக் குறித்து செய்யப்படும் எந்த ஆக்ஷேபனையாகிலும் கூடுமானசீக்கிரத்தில் செய்யப்படவேண்டும். ஏனென்றால் அப்படிப்பட்ட ஆக்ஷேபனையினல் எக்காலத்திலாகிலும் அகத்தியமல்லாததென்று எண்பிக்கப்படத்தக்க விசாரணையை நீடித்துச்செய்து கோர்ட்டாருடைய காலத்தை வீணய்ப் போக்கும்படி செய்யக்கூடாது. லா-ஜ-கா-ப்ளீ-௯௧-பு-௩௧௦-பக்கத்தில் கண்ட ராபின்ஸன் என்கிறவன் லார்டு வெர்ன்ம என்பவர்பேரில் செய்த வியாச்சியம்.

௩௩௧. ஒரு வியாச்சியத்தில் ஏற்றுக்கொள்ளத்தக்க உத்தமமான சாக்ஷியத்தைக் கொண்டுவரவேண்டுமென்கிற முக்கியமான நிபந்தனையைக்குறித்து பேசுமிடத்தில் பிரத்தியக்ஷமாய் எந்த சாக்ஷியமானது கொண்டுவரப்படாத மற்றெந்த சாக்ஷியத்தினலாகிலும் பலமடையத்தக்க

தாயிருக்கிறபக்ஷத்தில் அந்த சாக்ஷியத்தை ஏற்றுக்கொள்ளக்கூடாதென்று பெஸ்டு என்பவர் விவரித்திருப்பதைப்பார்க்கவேண்டுமென்று தெரிவிக்கலாச்சுது. எழுத்திலேற்படுட்டிருக்கிற ஒரு தஸ்தாவேஜிற் கண்ட சங்கதிகளுக்குரிய உத்தமமான சாக்ஷியமானது அந்த தஸ்தாவேஜையே கொண்டுவந்து காண்பிப்பதுதானென்று எங்கும் சாதாரணமாய் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றது தஸ்தாவேஜில் கண்டிருக்கிற சங்கதிகளைப்பற்றி வேறே எந்த சாக்ஷியமானது வாய்மொழியான சாக்ஷியமாயிருந்தாலும் அந்தத் தஸ்தாவேஜின் பிரதியாயிருந்தாலும் அது அந்தத் தஸ்தாவேஜு மூலமாய் உண்டானதா யிருக்கவேண்டியதுமல்லாமல் அதைப்பார்க்கிலும் உயர்ந்த சாக்ஷியம் அதாவது அந்த தஸ்தாவேஜே இருக்கிறதென்பதற்கு அது சூசகமாயிருக்கின்றது. ஒரு தஸ்தாவேஜே அதிற்கண்ட சங்கதிகளுக்கு பிரதம சாக்ஷியமாகவும் அதைப்பற்றிய மற்றெந்த சாக்ஷியமானது (கௌண) இரண்டாம்பக்ஷமான சாக்ஷியமாகவு மிருக்குமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும் தஸ்தாவேஜே உண்டாயிருந்து அதைக் கக்ஷிக்காரன் கொண்டுவந்து காட்டக் கூடுமானதா யிருக்கிறபக்ஷத்தில் அப்படிப்பட்ட தஸ்தாவேஜின் சங்கதிகளைப்பற்றி இரண்டாம்பக்ஷமான சாக்ஷியம் அங்கீகரிக்கப்படமாட்டாதென்பது சாதாரணமான விதியாயிருக்கின்றது. ஆதலால் கலகத்தா சதர்திவானி அதாலத்து கோர்ட்டு ௧அ௫௩ ௵ ௧அ௮-வது நம்பர் விண்ணப்ப விஷயத்தில் பிரின்சபல் சதரமீன் அவர்கள் அசல் தஸ்தாவேஜுகளைக் கொண்டுவந்து காட்டச்சொல்லாமல் அவற்றின் பிரதிகளை சாக்ஷியத்தில் அங்கீகரித்திருப்பதைப்பற்றி அந்த விஷயத்தை மறுவிசாரணைக்கனுப்புவித்திருக்கிறார்கள்.

௩௩உ. ஒரு சாக்ஷியை எதிர்கேழ்வி கேட்டுக்கொண்டிருக்கையில் தஸ்தாவேஜு கொண்டுவந்து அவனுக்குக் காண்பிக்கப்படுகிறவரையில் அந்தத் தஸ்தாவேஜில் கண்டிருக்கிறசங்கதிகளைப்பற்றி அவனைக் கேட்கக்கூடாதென்று மேற்

கண்ட விதியை அனுசரித்தே நிர்ணயிக்கப்பட்டிருக்கின்ற து. ஆனால் இது வெகு அசந்தர்ப்பத்துக் கிடமாயிருந்தது. சாக்ஷிக்காரனே எழுதின தஸ்தாவேஜின் சங்கதிகளைச்சொல்லச்சொல்லி கேட்பதினால் அவனுடைய ஞாபக சக்தியை ப்பரிசோதிக்க வேணுமென்றுத்தேசித்தே எதிர்கேழ்விகேழ்க்கப்பட்டிருந்தால் அப்போது முக்கியமாய் மேற்சொன்ன அசந்தர்ப்பத்திற்கு இடமுண்டாகுமென்று காணப்பட்டது ஏனென்றால், அப்படிப்பட்ட விஷயத்தில் அந்தத் தஸ்தாவேஜை அவனுக்கு முதலில் காண்பிப்பதினாலே அந்த உத்தேசம் முழுதிலுங் கெட்டுப்போகும். மேலும் அந்த உத்தேசமானது தஸ்தாவேஜை ருசுப்படுத்திக்கொள்வதற்கல்லாமல் கக்ஷிக்காரனுடைய ஞாபக சக்தியையாவது அவனுடைய சத்தியவாதி தனத்தையாவது பரீக்ஷிப்பதற்காகமாத்திரம் உத்தேசிக்கப்பட்டிருக்கிற விஷயத்தில் மேற்படி நிபந்தனையை உபயோகிப்பது நியாயமாயிருக்குமாவென்கிற சந்தேகமுண்டாயிருந்தது. வெகுசாய் தர்க்கம் நடந்ததின்பேரில் அது கஅருசவருஷத்தி லுண்டான இங்கிலீஷ் காமன்லா புரோசிடியூர் ஆக்ட்டாக மாற்றப்பட்டிருக்கின்றது. அதற்குச் சமமான இந்தியாசட்ட நிபந்தனையை கஅ௱ரு-ஞ்ரு உ-வது ஆக்ட்டு கூ-வது பிரிவில் காணலாம். அது இதனடியில் விவரித்தபடி இருக்கின்றது. "வியாச்சியத்தின சங்கதியைக்குறித்து ஒரு சாக்ஷி "முன்னமே எழுதினதையாவது எழுதவித்ததையாவது "அவனுக்குக் காட்டாமல் அவைகளைக்குறித்து அவனை எதிர் "கேழ்வி கேழ்க்கலாம். அந்த சாக்ஷிசொல்லுகிறது அவ் "எழுத்துக்கு விரோதமாயிருக்கிறதென்று ருசுப்படுத்தவே "ண்டுமானால் அப்படி ருசுப்படுத்துகிறதற்கு முன்னமே அ "ந்த எழுத்தில் ருசுவுக்கு வேண்டியிருக்கிற பாகங்களை அவ "னுக்குப் படித்துக்காட்டவேண்டும். ஆனால் ஜட்ஜியவர் "கள் விசாரணைகாலத்தில் எப்போதாகிலும் அந்த எழுத் "தை வரவழைத்துப் பார்வையிட்டபிறகு விசாரணையிலிரு

"க்கிற விஷயங்களுக்காகத் தமக்கு யுக்தமாகத் தோற்று "கிறபடி அவைகளை உபயோகப்படுத்தலாம்." உஅ0-பி- பார்த்துக்கொள்க.

கக௩. எழுத்திலேற்பட்ட ஒரு தஸ்தாவேஜைக்குறித்து கௌணசாக்ஷியத்தை ஏற்றுக்கொள்ளக் கூடுமான அநேக விஷயங்களைக்குறித்து இனி யோசிக்கலாகின்றது. முதலாவது;—ஒரு தஸ்தாவேசு அழிக்கப்பட்டுப்போனாலு ம்போக்கடிக்கப்பட்டுப் போனாலும் அந்தச் சங்கதி எதிர்கக்ஷிக்காரனால் ஒப்புக்கொள்ளப்படாத பக்ஷத்தில் (அதைக்குறித்து கௌண சாக்ஷியத்தைத் அங்கீகரிப்பதற்கு முன்னமே) அசல் தஸ்தாவேசு உண்மையாய் உண்டாயிருந்ததென்றுவது அது அழிக்கப்பட்டுப்போச்சுதென்றுவது எறிந்துவிடப்பட்டதென்றுவது அல்லது போக்கடிக்கப்பட்டுப் போச்சுதென்றுவது அந்தக் கக்ஷிக்காரன் ருசுப்படுத்தவேண்டும். (கஅசுக-வருஷத்திய சென்னப்பட்டணம் தீர்ப்புபுத்தகத்தின் கக-வது-பக்கத்திற்கண்ட ஸ்ரீநிவாச ஐயங்கார் எதிரி ஸ்ரீரங்கம்மாள் வியாச்சியம். கஅ௫0-வருஷத்திய கலகத்தா சதர் திவானி அதாலத்து கோர்ட்டு தீர்ப்புபுத்தகத்தின் உக௫ - வது பக்கத்திற்கண்ட டுபன் பூபன் என்பவர்களுக்கும் எதிரி புர்பூதாஸ் என்பவருக்கும் நடந்த வியாச்சியம்.) மேலும், அந்தத் தஸ்தாவேசு வெகுசாய் அகப்படத்தக்க இடங்களில் கக்ஷிக்காரன் மிகுந்த சாக்கிரதையுடன் தேடிப்பார்த்தானென்கிற ருசுவைக்கொண்டு அது காணமற்போன சங்கதி ருசுப்படுத்தப்படலாம். அப்படித் தேடினது புதிதாய் நடந்திருக்கவேண்டியதுமில்லை, அல்லது அந்த வியாச்சிய காரியத்துக்காகவே தேடப்பட்டிருக்கவேண்டியதுமில்லை. டெ-சு0௫-கககக-பி-கள், கா-௫எக-பி.

கக௪. ஒருவன் வசத்திலாவது சுவாதீனத்திலாவது அந்தத் தஸ்தாவேஜிருக்கிறதென்று நம்புவதற் கேதுவிருந்தால் அதைக் கொண்டுவந்து காட்டும்படி அவனுக்குச் சம

மறுவது அறிக்கையாவது கொடுக்கவேண்டும். அதைக் கொண்டுவந்து காட்டத் தவறிப்போனால் அது என்னமா ய்ப் போச்சுதென்று அவனை விசாரிக்கவேண்டும். டெ-௬00-பி.

௩௧௫. இரண்டாவது;—௧௮௫௫ளு ௨-வது ஆக்ட்டு ௩௬-வது பிரிவில் அடியிற் கண்டபடி விதித்திருக்கின்றது. "அசல் தஸ்தாவேசு கோர்ட்டு சம்மன் முதலானதற்கும் "அகப்படாமற்போனால் கோர்ட்டார் யாதொரு சிவில் "வியாச்சியத்திலாவது விவகாரத்திலாவது தங்களுக்கு ம "னுவு செய்யப்பட்டதின்பேரில் விசாரணைக்கு முன்னமே "கிரமமான காலத்தில் எதிர்கக்ஷிக்காரனுக்கு நோடீசு அனு "ப்பப்பட்டபிறகு அந்த அசல் தஸ்தாவேசு எழுதினது உண் "டென்றும் அதில் அடங்கிய சங்கதிகளைக்குறித்தும் உபப "மாயிருக்கிற சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படுமென்று "கட்டளை பிறப்பிக்கலாம்." ஆயினும் அந்தத் தஸ்தாவேசு வாரண்டுசெய்து தேடினாலும உண்மையாய் அகப்படமா ட்டாதென்று வெளிப்படையாய் ருசுப்படுத்தவேண்டும். மேலும் தஸ்தாவேசையே கொண்டுவந்து காட்டக்கூடு மான பக்ஷத்தில் மேற்கண்ட அதிகாரத்தைச் செலுத்தக் கோர்ட்டாருக் கிஷ்டமிராது.

௩௧௬. மூன்றாவது;—சுவர்களின்பேரிலும், செடிகளி ன்பேரிலும், கோரியின் கல்லின்பேரிலும் செதுக்கப்பட் டிருக்கிற சாஸன விஷயங்களி லெப்படியோ அப்படியே, அசல் தஸ்தாவேசைக் கொண்டுவந்து காட்டுவது அசாத்தி யமா யிராவிட்டாலும் அதிக கஷ்டமாயிருந்தால் கௌண சாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. மேலும் பப் ளிக் ரிகார்ட்டுகளைக் கொண்டுவந்து காட்டுவது சங்கடமா யும் அபாயகரமாயுமிருப்பதால் அவைகளை வாய்மொழியா ன சாக்ஷியத்தைக்கொண்டல்லாமல் போனபோதிலும் அ திகாரியினால் கையொப்பமிட்டு உறுதிப்படுத்தப்பட்ட அல் லது ஒப்புக்கொள்ளப்பட்ட பிரதிகளைக்கொண்டு சாதார

ணமாய் ருசுப்படுத்த வேண்டுமென்கிற சங்கதியை இதற்குமுன்னமே (௩௫௦-வது-பிரிவில்) பார்த்திருக்கிறோம். ௨௨-௪௦அ-௪௦௧-பி-களைப் பார்த்துக்கொள்க.

௩௧௭. நான்காவது;—அசல் தஸ்தாவேசு எதிர் கக்ஷிக்காரனுடைய சுவாதீனத்திலிருந்து அதைக் கொண்டுவந்து காண்பிக்கும்படி அவனுக்கு அறிக்கையிட்டும் அவன் அதைக்கொண்டுவந்து காட்டாமற்போனால அப்போது கௌணசாக்ஷியம் அங்கீகரிக்கத் தக்கதாயிருக்கும்.

இந்த விதி சிவில் விவகாரங்களிலும் கிரிமினல் விவகாரங்களிலும் சமமாய் உபயோகப்படுகின்றது. ஆதாரவு எதிர்கக்ஷிக்காரனுடைய சுவாதீனத்திலாவது அதிகாரத்திலாவது இருக்கிறதென்று நம்புவதற்கு நிமித்தமுண்டாயிருக்கவேண்டும். மேலும், "ஒரு கக்ஷிக்காரன் வசத்திலிருக்கிறதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு ஆதாரவைக்கொண்டுவந்து காண்பிக்கும்படி அவனுக்கு அறிக்கைச் செய்யப்பட்டிருந்தால் அவன் அந்த ஆதாரவைத் தன் அதிகாரத்தில் வைத்துக்கொள்ளாமல் விட்டுவிட்ட சங்கதியை எதிர்கக்ஷிக்காரனுக்குத் தெரிவித்து அதை எவனுக்கு ஒப்புவித்தானோ அவனைக் காட்டாமலிருந்தாலொழிய கொண்டுவந்து காட்டும்படி அறிவிப்பதற்குமுன்னமே அந்த ஆதரவு தன்னதிகாரத்தை விட்டுப்போயிருந்ததென்கிற காரணத்தைப்பற்றி அந்த ஆதரவின் சங்கதிகளுக்குரிய வாய்மொழியான சாக்ஷியத்தைக்குறித்து அவனாக்ஷேபிக்கக்கூடாது. மேலும், எந்த ஆதரவைக்கொண்டுவந்து காண்பிக்கும்படி அந்த அறிக்கைப்பத்திரிகையில் உத்தரவுசெய்யப்பட்டிருக்கின்றதோ அந்த ஆதரவை மனப்பூர்த்தியாய் பின்பு தன்சுவாதீனத்திலிருந்து தப்பிப்பதினால் அறிக்கைப்பத்திரிகையின்படி உண்டாகும் முடிவிலின்று அவனை தப்பித்துக்கொள்ளமாட்டான்." தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டும்படி எவனுக்கு அறிக்கை செய்யப்பட்டதோ அவன்கையில் அந்த தஸ்தாவேஜுகள் கூடசி

யில் பார்க்கப்பட்டிருந்தால் அந்தத் தஸ்தாவேசுகள் தன்வ சம் தப்பி எவனிடத்திற்குப் போயிருக்கின்றனவோ அந் தச்சங்கதியை அவனே கண்டுபிடிக்கவேண்டும். டெ சக0-பி.

௩௯௯. எவனுக்கு அறிக்கைப்பத்திரிகை கொடுக்கப்ப ட்டதோ அவன் தஸ்தாவேஜை உண்மையாய் தன் சுவாதி னத்தில் வைத்துக்கொண்டிருக்கவேணுமென்பது அவசிய மல்ல. அது அவனுடைய அதிகாரத்திலிருந்தாலும் அல் லது அதைப் பார்ப்பதற்குமாத்திரமல்லாமல் அதைத் தன் னிடத்திலேயே வைத்துக்கொள்வதற்கும் அவனுக்குச் சுத ந்திரமிருந்தாலும் போதும். மேலும், அது அவனுடைய வேலைக்காரன் அல்லது காரியஸ்தனுடைய சுவாதினத்தி லிருந்தாலும் அந்த ஆசாமிக்கே அறிக்கைப்பத்திரிகை கொடுத்தால் போதும். டெ.சகக-பி.

௩௯௯. தஸ்தாவேஜை விசாரணைகாலத்தில் கொண்டு வந்து காண்பிப்பதற்கு சாவகாசமிருக்கும்படி தகுந்த கா லத்தில் அந்த அறிக்கைப்பத்திரிகைக் கொடுக்கப்படவே ண்டும். அந்த அறிக்கைப்பத்ரிகையிற் காணவேண்டிய விவரங்களைக்குறித்து டெயிலர் சகரு பிரிவைப் பார்க்க வேண்டும். தஸ்தாவேஜின் தேதியையாவது சங்கதிகளை யாவது விவரமாய்க் காணவேண்டிய தவசியமல்ல.

௪00. ஒரு தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காண்பிக் கும்படி அறிக்கைச் செய்யப்பட்டிக்கிற ஒருவன் அதைக் கொண்டுவந்து காட்டுகிறதில்லையென்று சொன்னால் அந்த தஸ்தாவேஜின் சங்கதிகளைக்குறித்து அவனுடைய எதிரி கொண்டுவருகிற யாதொரு கௌண சாக்ஷியத்தை எதிர் க்கும்பொருட்டு அந்தத்தஸ்தாவேஜைப் பிறகு அவன் கொ ண்டுவந்து காட்டக்கூடாது. ரா-ரு௮உ-பி.

௪0க. ஒரு தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டும் படி அறிக்கைச்செய்த கக்ஷிக்காரன் விசாரணைகாலத்தில்

அதை வரவழைக்கவேண்டிய கடமையுள்ளவனல்ல. ஆனால் அவன் அப்படிக்கதை வரவழைத்துப்பார்த்தால் அதை இரண்டு கக்ஷிக்காரர்களுக்கும் சாக்ஷியமாய் கட்டிச் சேர்த்து வைக்கவேண்டும்.

௬0௨. ஒரு அறிக்கைப்பத்திரிகையைக் கொண்டுவந்து காண்பிக்கும்படி அறிக்கை கொடுக்கவேண்டியதில்லை இந்த விதி கொண்டுவந்து காண்பிப்பதற்காகச் செய்யப்படும் அறிக்கைப்பத்திரங்கள் விஷயத்தில்மாத்திரமல்லாமல் பலவிதங்களான அறிக்கைப்பத்திரங்கள் விஷயத்திலும் உபயோகப்படுவதாகக் காணப்படுகின்றது. டெ-௬௨0-பி. ௩௱-௫௭௫-பி.

௬0௩. மேலும் தஸ்தாவேஜை நிறுத்திவைத்துக்கொண்டிருப்பது, மாற்றுவது, அசாக்கிரதையாய்ப் போக்கடிப்பது, இவைகளைக்குறித்துச் செய்யப்படும் வியாச்சியங்களிலெப்படியோ அப்படியே பிரதிவாதி விவாதபத்திரங்களின் சுபாவத்தினாலேயே தஸ்தாவேசு தன் வசத்திலிருக்கிறதென்றும் அதைக் கொண்டுவந்து காண்பிக்கும்படி தனக் குத்தரவு செய்யப்படுமென்றும் தெரிந்துகொள்ளத்தக்கதாயிருந்தால் அந்தத் தஸ்தாவேஜைக் கொண்டுவந்துக் காண்பிப்பதற்காக அறிக்கை செய்யவேண்டியதில்லை. இப்படிப்பட்ட விஷயங்களில் தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டும்படி முன்னதாய் அறிக்கைப்பத்திரிக்கை மூலமாய்த் தெரியப்படுத்தாமலே அந்தத் தஸ்தாவேஜின் சங்கதிகளைப்பற்றி கௌண சாக்ஷியங் கொடுக்கப்படலாம். ஏனெனில் நிறுத்திவைக்கப்பட்ட அல்லது போக்கடிக்கப்பட்ட எந்த வஸ்துவாவது எப்படி விவரிக்கப்படுமோ அப்படியே தஸ்தாவேசும் விவரிக்கப்படலாம். இதுபோலவே எழுத்தில் ஏற்பட்டிருக்கிற ஒரு சாசனத்தைத் திருடினதைப்பற்றி குற்றப்பத்திரிகை ஏற்பட்டதின் பேரில் அந்தச் சாசனத்தின் சங்கதிகள் கௌண சாக்ஷியத்தினாலேயே ருசுச்செய்யப்படலாம். மேலும், மேற்க

ண்ட விஷயங்களிலெல்லாம் பிரதிவாதி தன் எதிர்வாதத்துக்குச் சாக்ஷியமாய் அசல் தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டினபோதிலும், வெளணசாக்ஷியமும் ஏற்றுக்கொள்ளப்படலாம். அப்படிப்பட்ட விஷயங்களில் தஸ்தாவேஜின் சங்கதிகள் சார்பாய்மாத்திரம் பிரஸ்தாபத்திற்கு வரும். ஆனால் சிருஷ்டனைக்காகச் செய்யப்படும் பிரியாது விஷயத்தில் அப்படி சிருஷ்டிக்கப்பட்ட தஸ்தாவேஜின் சங்கதிகள் நேராய் விவாதத்திலிருக்கும். ஆதலால் அந்தச் சங்கதிகள் சவிஸ்தாரமாய் விவரிக்கப்படவேண்டும். மேலும், அந்தப்பிரியாதின் தன்மையைப்பற்றி அந்தத் தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டும்படியாய்த் தன்னைக் கேழ்ப்பார்களென்று பிரதிவாதி சொல்லச் சக்தியற்றவனுயிருப்பானுதலால் அது அவன் சுவாதீனத்திலிருந்தால் அதின் சங்கதிகளைப்பற்றி வெளணசாக்ஷியத்தை ஏற்றுக்கொள்வதற்கு முன்னமே அதைக் கொண்டுவந்து காண்பிக்கும்படி அவனுக்கு அறிக்கைப்பத்திரிகை அனுப்பப்படவேண்டும். டெ-௬௭அ-௬௭௧-௩௨௨-பி-கள்.

௩௦௩. மேலும் ஒரு தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காண்பிக்கும்படி சம்மன் செய்யப்பட்ட ஒரு சாக்ஷி வசத்திலிருந்து மோசவிதமாயாவது பலாத்காரமாயாவது ஒரு கக்ஷிக்காரன் அந்தத் தஸ்தாவேஜைச்சுவாதீனப்படுத்திக்கொண்டால் அதைக்கொண்டுவந்து காண்பிக்கும்படி முன்னதாக அறிக்கைச் செய்யாமலே அதின் சங்கதிகளைக்குறித்து வெளணசாக்ஷியத்தைக் கொடுக்கலாம். டெ-௩௨௬-பி.

௩௦௪. கடைசியாய் எதிர்க்கக்ஷிக்காரன் அசல் தஸ்தாவேஜைக் கோர்ட்டில் வைத்திருக்கிறதாக ருசுவானால் அதைக் கொண்டுவந்து காட்டும்படி அவனுக்கு அறிக்கை அனுப்பவேண்டிய அவசியமில்லை. டெ-௩௨௧-பி.

௩௦௫. ஐர்தாவது, வியாச்சியத்தில் சம்பந்தப்படாத அன்னியனுகிய ஒருவன் ஒரு சாசனத்தைத் தன் சுவாதீ

னத்தில் வைத்துக்கொண்டிருந்து அதைக் கொண்டுவந்து காட்டும்படியாய்ச் சட்டப்படி பலாத்காரப்படுத்தக்கூடாதவனும் அதைக் கொண்டுவந்து காண்பிக்கமாட்டேனென்று மறுக்கிறவனும் இருந்தால் கௌணசாக்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படலாம். சாசனத்தைக் கொண்டுவந்து காட்டமாட்டேனென்று சொல்லும் சாக்ஷிக்காரன் அப்படிச் சொல்வதற்கு சட்டப்படி அவனுக்கு நியாயமுண்டாயிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அந்தச் சாக்ஷிக்காரன்பேரில் கக்ஷிக்காரன் வழக்கு செய்யத்தக்கதாயிருந்தபோதிலும் அந்தச் சாசனத்தைப்பற்றி கௌணசாக்ஷியம் அங்கீகரிக்கப்படமாட்டாது. எந்தெந்தத் தஸ்தாவேஜை அந்தரங்க விவகாரமாயிருக்கிறதென்கிற காரணத்தைப் பற்றிக் கொண்டுவந்து காட்டுகிறதில்லையென்று சொல்ல ஒரு சாக்ஷிக்காரனுக்குச் சுதந்தரமுண்டாயிருக்கின்றதோ அதைக்குறித்து இதற்கு முன்னமே (உஅக - வது பிரிவிலேயே) நாம் பார்த்திருக்கிறோம். ஆதலால் ஒரு சாக்ஷிக்காரன் தன்னுடைய அசையாப்பொருளின் மூலாதாரங்களையாவது மற்றவர்களுக்காகத் தன்னிடத்தில் நம்பிக்கையாயாவது கொதுவையாயாவது வைக்கப்பட்டிருக்கிற மூலாதாரங்களையாவது கொண்டுவந்து காட்டவேண்டுவதில்லை என்கிற சங்கதியைமாத்திரம் இவ்விடத்திற்சொல்லவேண்டியிருக்கின்றது. ௩0௩-வது பி-பார்த்துக்கொள்க. ௳ - சஉள - சஉஅ-அ௩௬-க௩கஅ-பி-கள். ௩.. ருளச-பி.

ச0ள. மேலும், கணக்குகளாவது தஸ்தாவேஜுகளாவது மிகவும் பெரிதானவைகளாயும் கோர்ட்டாரால் பரிசோதிக்கப்படுவதற்கு அனுகூலப்படாதவைகளாயுமிருந்தால் அவைகளைப் பரிசோதித்திருந்த ஒரு சாக்ஷிக்காரன் அந்தக் கணக்குகளின் விவரங்களைச் சொல்லாமற்போனபோதிலும் அதைக் கொண்டுவந்து காண்பிக்காமலே மொத்தமாய் அதின் பாக்கித்தொகையைக் குறித்துமாத்திரம்

சொல்லலாம். பின்னும் கஅருக௵ அ-வது ஆக்ட்டு கஎக-வது பிரிவின்படி கணக்குகளைக்குறித்து விசாரிப்பதற்காவது அவைகளைப் பரிஷ்கரிப்பதற்காவது நியமிக்கப்பட்ட ஒரு கமிஷனர் நடத்திய நடவடிக்கைகள் "கோர்ட்டாருக்குத் திருப்திகாரமானவையாயிராததற்குத் தகுந்த காரணங்களுண்டாயிராத்பக்ஷத்தில்" சாக்ஷியமாய் அங்கிகரிக்கப்படுகின்றன. டெ - சஙஉ - பி - பார்த்துக் கொள்க.

௪௦அ. எழுத்திலேற்பட்ட தஸ்தாவேஜைக் கொண்டுவந்து காட்டும்படி அறிக்கை செய்யப்படாமற் போன போதிலும், அதைக்கொண்டுவந்து காண்பிக்காததற்கு வேறே எவ்விதமான காரணங்கள் சொல்லப்படாமற் போன போதிலும், அந்தத் தஸ்தாவேஜுகளில் கண்ட சங்கதிகளைக்குறித்தாவது அது நிலைத்திருப்பதைக் குறித்தாவது அந்த வியாச்சியத்தில் சேர்ந்த ஒரு கக்ஷிக்காரன் ஒப்புக்கொண்ட சங்கதிகள் அவனுக்கு விரோதமாய் சாக்ஷியத்திலேற்றுக்கொள்ளப்படலாம். அதனால் சர்வோத்தமமான சாக்ஷியம் கொண்டுவரப்படவேண்டும் என்கிற விதிக்கு அழிவு நேரிடமாட்டாது. அப்படிப்பட்ட விஷயத்துக்கு அது உபயோகிக்கமாட்டாது. அந்த விதியானது ஒரு கக்ஷிக்காரன் ஒருவழக்கின் தன்மையைப்பற்றி எப்படிப்பட்ட சாக்ஷியத்தைக்கொண்டுவரவேண்டுமோ அதைவிட கெடுதியான சாக்ஷியத்தைக் கொண்டுவரப்போகிறான் என்கிற எண்ணத்தைக்கொண்டு ஏற்படுத்தப்பட்டது. ஆனால் அவ்வழக்கிற் சேர்ந்த ஒரு கக்ஷிக்காரனால் சொல்லப்பட்டதற்கு அந்த ஆக்ஷேபணை பிறக்கமாட்டாது. கௌணசாக்ஷியத்தை விலக்குவதற்கு அது உண்மையாயிருக்கிறதில்லையென்கிற சந்தேகமே காரணமாயிருக்கின்றது. ஆகிலும், அந்தச் சங்கதி அந்தக் கக்ஷிக்காரனால் சொல்லப்பட்டதாயிருந்தால் அந்தக் காரணம் உபயோகப்படாது. அந்தச் சங்கதி வழக்கில் சேர்ந்த ஒரு கக்ஷிக்காரன் வாய்ப்பிறப்பாயிருக்குமா

கில் அது பொய்யானதென்கிற அனுமேயமே உண்டாகா து. ஆகிலும், அந்த வசனம் தஸ்தாவேஜையே கொண்டு வந்து காண்பித்தால் அது எவ்வளவு பலமுள்ளதாயிருக்கு மோ சரியாய் அவ்வளவு பலமுள்ளதாக யிருக்கமாட்டா தென்கிற ஆக்ஷேபணைக்கு உட்பட்டிருக்குமென்பதற்குச் ச ந்தேகமிராது. கோர்ட்டாராவது ஜூரிகளாவது அப்படி ப்பட்ட சாக்ஷியத்தோடு திருப்தியடையாமற்போவதும் அல்லது அப்படிப்பட்ட ஒப்புதல் செய்யப்படவில்லையெ ன்று நம்பாமற்போவதும் கூடுமான காரியந்தான். ஆகிலும் அது அவர்கள் முன்பாகக் கொடுக்கப்படத்தக்க சாக்ஷியமா கவே யிருக்கின்றது. (மீ-வே-கூ-பு-கூகூச-பக்கத்தில் கண் ட சிலாடரி எதிரி - பூலிவியாச்சியம். லா - ஜ - நியூ-சி- எ - க௦ - பு - அ-ப. லா - ஜ - நியூ - சி - கா - ப்ளீ - க௦-பு-உசரு-பக்கத்தில்கண்ட ஹௌவர்ட் எதிரி ஸ்மித் வியாச்சியம்.) ஆனால் ஒரு லிகித தஸ்தாவேஜு கொண்டு வந்து காட்டப்படக் கூடியிருந்தும் காட்டாமற்போனால் அப்படிப்பட்ட தஸ்தாவேஜில் அடங்கிய சங்கதிகளை ஒப் புக்கொள்ளச்சொல்லி சாக்ஷியாய் எதிர்க்கேழ்வி கேழ்க்க ப்பட்டுக்கொண்டிருக்கிற சக்ஷிக்காரனைக் கேழ்க்கக்கூடா து. லா-ஜ-எ-உரு-பு - உஉஎ - பக்கத்தில்கண்ட - டார்பி எதிரி-ஓளஸ்லி-வியாச்சியம்.

ச௦க. ஒரு தஸ்தாவேஜின் சங்கதிகளைக்குறித்து கௌணசாக்ஷியம் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயிருக்கும் வி ஷயத்தில் அது வாய்மொழியான சாக்ஷியமாயாவது எழு த்துமூலமான சாக்ஷியமாயாவது இருக்கலாம். மேலும் அது எவ்விதமானதா யிருந்தபோதிலும் அங்கீகரிக்கப்ப டத்தக்கதாகவே யிருக்கும். ஏனெனில் கௌணசாக்ஷியம் எத்தனை வகுப்புள்ளதாயாவது சட்டத்தில் சொல்லியிராத படியால் ஒருவிதமான சாக்ஷியம் கொண்டுவரக் கூடுமான தாயிருக்கும்போது மற்றொருவிதமான சாக்ஷியத்தை வில க்கிவிடவேண்டுமென்பதில்லை. ஆனால் இது கௌணசா

க்ஷியம் ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதா யிருக்கிறதென்கிற சங்கதியைமாத்திரம் அனுசரித்ததா யிருக்கிறதேயொழிய அதை நம்பத்தக்கதா வென்கிற சங்கதியைக்குறித்ததன்று. ஏனெனில், ஒருவிதமான சாக்ஷியத்தைவிட மற்றொரு விதமான சாக்ஷியம் அதிக நம்பிக்கையுள்ளதா யிருக்கும்படி பல தடவைகளில் நேரிடுகிறதுண்டு. (டை-சகரு-பி, நா-கூஉச-பி.) பிரதிகளில் அதிகாரிகளுடைய கையொப்பமிராவிட்டாலும் பிரதிசெய்கிற யந்திரத்தைக்கொண்டு செய்யப்படாமலிருந்தாலும் அப்படிப்பட்ட விஷயங்களிலெல்லாம் பிரமாண பூர்வகமாயாவது பிரமாண வாசகத்தைச் சொல்லியாவது அவை உண்மையானவைதானென்று ருசுப்படுத்தவேண்டும். ஒரு பிரதியைப்பார்த்து எழுதப்பட்ட பிரதியானது ஒருபோதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாயிராது. டை-சகஎ-பி.

சக0. தரும சாஸ்திரப்படி கௌணசாக்ஷியத்துக்கு வகுப்புகளில்லை என்கிற விதிக்கு விலக்காக பப்ளிக் ரிகார்டுகளின் சங்கதிகளைக்குறித்த விஷயத்தைச் சொல்லவேண்டியிருக்கின்றது. அந்த ரிகார்டுகள் அதிகாரிகளால் கையொப்ப மிடப்பட்டாவது பிரமாணத்தின்பேரில் ஏற்பட்டாவதிருக்கிற பிரதிகளைக்கொண்டு ருசுப்படுத்தவேண்டுமேயொழிய வாய்மொழியான சாக்ஷியத்தினால் ருசுப்படுத்தக்கூடாது. மேலும் ஒரு முக்கியமான விதமுள்ள கௌணசாக்ஷியம் அதாவது சர்ட்டிபிகேட் அல்லது பிரதியைப்போலொத்தது கொண்டுவந்து காட்டப்படவேணுமென்று யாதொரு ஆக்ட்டு அல்லது சட்டத்தில் சொல்லியிருக்கிற பக்ஷத்தில் வேறு எந்த சாக்ஷியமும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. டை-சகக-பி.

சகக. எழுத்தி லேற்படுகிற சாதகங்களில் முத்திரை போடப்பட்டிருக்கிறவைகளுக்கும் முத்திரை போடப்படாம லிருப்பவைகளுக்கும் இங்கிலீஷ் தருமசாஸ்திரப்படி பேதமுண்டாயிருக்கின்றது. முத்திரை போடப்பட்டிருக்

கிற சாதனங்களும் பத்திரங்களும் முத்திரையில்லாதவைகளைவிட விசேஷ யோசனையோடும் பிரமாணிக்கத்துடனும் ஏற்பட்டிருப்பதாக ஊகிக்கப்படுவதுமல்லாமல் உயர்ந்த வருப்பிற் சேர்ந்தவைகளாக மதிக்கப்படுகின்றன; பூர்வ காலத்தில் தங்கள் பெயரெழுதத் தெரியாதவர்கள் அவைகளுக்குப் பதிலாய் முத்திரைகளை வழங்கிவந்தார்கள். ஆகையால் அப்போதிந்த பேதமுண்டானதாய்த் தோற்றுகின்றது.

௨௪௨. முத்திரைப்போடப்பட்ட பத்திரமானது போதுமான நல்ல பிரதிபலனைப்பெற்று எழுதிக்கொடுக்கப்பட்டதாக இங்க்லண்ட் தேசத்து தருமசாஸ்திரப்படி நிச்சயமாய் துணியப்படுகின்றது. மேலும், முத்திரையுடன் கூடிய அப்படிப்பட்ட தஸ்தாவேசானது மோசமானதென்று ரத்து செய்யப்படத்தக்கதா யிருந்தபோதிலும் முத்திரையில்லாத உடன்படிக்கைகள் விஷயத்தில் எப்படியோ அப்படியே முத்திரையுடன்கூடிய தஸ்தாவேசுகள் விஷயத்திலும் பிரதிபலன் கொடுக்கப்படவில்லையென்று வாதிக்கக்கூடாது. இதுவுமல்லாமல் இங்கிலீஷ் தருமசாஸ்திரப்படி பத்திரத்தில் சாக்ஷி போட்டவர்களில் குறைந்தது ஒருவராலாவது அவர்களுடைய கையெழுத்துகளின் சாக்ஷியத்திலாவது அந்தத் தஸ்தாவேசு ருசுப்படுத்தப்படவேண்டும். தஸ்தாவேசை எழுதிக்கொடுத்த காலத்தில் கூடயிருந்த மற்றவர்களுடைய சாக்ஷியம் அந்தத் தஸ்தாவேசை ருசுப்படுத்துகிற விஷயத்தில் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ஆயினும் பிரிட்டன் இராச்சியத்தில் பிறந்த குடிகளால் எழுதப்படும் மரண சாசனங்களுக்கு பார்லிமென்டாருடைய ஆக்ட்டின்படி சாக்ஷி கையொப்பம் வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் அப்படிப்பட்ட மரண சாசனங்களைப்போலவே "உறுதிப்படுத்துகிறதற் "குச் சாக்ஷி கையெழுத்து வேண்டியிருக்கிற தஸ்தாவேசா "யிராவிட்டால் சாக்ஷி கையெழுத்துப் போட்டிருந்தாலும்

"அதைச் சாக்ஷி கையெழுத்துப் போட்டிராததைப்போல "வே ருசுப்படுத்தலாம்" என்று க௮௫௫(௵) ௨-வது-ஆக்ட்டு - ௩௭-வது பிரிவில் விதிக்கப்பட்டிருக்கின்றது. பெ-௨௧௪-பி. நா-௫௫௩-பி-பார்த்துக்கொள்க.

௪௧௩. கூடுமானதாயிருந்தால் முக்கியமாய் ஒருதலையாய் நடத்தப்படும் வியாச்சியங்களில் பத்திராரூட சாக்ஷியை எப்போதும் வரவழைக்கவேண்டும். ஒரு சாக்ஷிக்காரனைக் கோர்ட்டுக்கு வரவழைக்கக்கூடுமான விஷயத்தில் அவனை வரவழைக்காமல் தவறிப்போவது சந்தேகத்துக் கிடமுண்டாகும். நா-௫௫௪-பி.

௪௧௪. இங்க்லண்ட் தேசத்துப் பொதுவான சட்டப்படி சாக்ஷி போட்டிருக்கவேண்டிய தஸ்தாவேசு அல்லது சாதகமானது உண்மையானதுதானென்று அதை எழுதிக்கொடுத்தவன் ஒப்புக்கொண்டபோதிலும் அதில் சாக்ஷி கையெழுத்துப் போட்டவர்களால் அது ருசுவாக்கப்படவேண்டும். ஆனால் க௮௫௫(௵) ௨-வது ஆக்ட்டின் ௩௮-வது பிரிவின்படி சாக்ஷி கையெழுத்துப்போட்டிருக்கிற ஒரு தஸ்தாவேசு சட்டப்படி சாக்ஷிகளால் ருசுவாக வேண்டியதாயிருந்தபோதிலும் அதை எழுதிக்கொடுத்தவன் நான்தான் என்று யாதொரு சாக்ஷிக்காரன் ஒப்புக்கொண்டால் அப்படி எழுதிக்கொடுத்ததற்கு அவன்பேரில் அதுவே போதுமான பிரத்தியக்ஷமான ருசுவாகும். ௧௫௫-௧௫௮-பி-களைப் பார்த்துக்கொள்க. டெ-௩௮௪-௧௯௪-௧௯௭-பி-கள்.

௪௧௫. முத்திரைப்போட்டிருக்கிற பத்திரமாவது மற்றெந்த சாதனமாவது அதற்குச் சமானமான அதிகாரமுடைய சாதனம் அதாவது முத்திரையுடனிருக்கிற சாதனத்தைக் கொண்டுமாத்திரம் நிராகரிக்கப்படத்தக்கதாகவாவது செலுத்திவிடப்படத்தக்கதாகவாவது நீக்கிவிடப்படத்தக்கதாகவாவது யிருக்குமேயொழிய அதற்கு முத்திரையில்லாத தஸ்தாவேசு போதாததாயிருக்கும். ஆயினும்

